

# அவனுக்கு 5 வயதுதான் ஆகிறது

## அதற்குள் சம்பாதிக்க ஆரம்பித்து விட்டான்!

அவன் கெட்டிக்காரனோ இல்லையோ, அவனுடைய பெற்றோர்கள் நிச்சயம் கெட்டிக்காரர்கள் தான். எனவேதான், அவனுடைய சென்ற பிறந்தநாளில் தங்களுடைய அன்பளிப்பாக, பரோடா பாங்கில் அவன் பெயரில் வயதுவராதோர் சேமிப்புக் கணக்கை ஆரம்பித்து வைத்தார்கள்.

பெரியவனாகும் போது, அவன் தன் விருப்பப்படி டாக்டருக்கோ, வக்கீலுக்கோ, என்ஜினியராக ஆவதற்கோ, எதற்கு வேண்டுமானாலும் படிக்கலாம். அதற்குத் தேவையான பணம் சேர்ந்திருக்கும். ஒளிமயமான எதிர்காலத்திற்குத் தேவையான பணத்தைச் சேமிக்க உங்கள் குழந்தைக்கும் பாங்க் ஆ:ப் பரோடா உதவும் இன்றே அவன் பெயரில் வயதுவராதோர் சேமிப்பு கணக்கை ஆரம்பியுங்கள்!

- ரூ. 1/- மட்டுமே செலுத்தி வயதுவராதோர் சேமிப்புக் கணக்கை அரம்பிக்கலாம்... 4% வட்டி சம்பாதிக்கலாம்!
- உங்கள் குழந்தைகளுக்கு 14 வயது ஆகும் வரை இந்தக் கணக்கை நீங்களே கையாளலாம். பிறகு அவன் சுயமாகக் கையாள முடியும்—இவ்வாறு, அவன் சேமிப்புப் பழக்கத்தைக் கற்கத் தொடங்குவான்.




என்றென்றும் வளமையுடன் வாழ உங்களுக்கு உதவுகிறது—

### தி பாங்க் ஆஃப் பரோடா லிமிடெட்

நிறுவனம்: (1908) ரெஜிஸ்டர்ட் ஆபீஸ்: மாண்ட்வி, பரோடா

இந்தியாவிலும், வெளிநாடுகளிலும் 300க்கு மேற்பட்ட கிளைகள் உள்ளன

"உங்கள் சேவை எங்கள் கடமை" என்னும் சிறுபிரசுரத்தை உங்களுக்கு அருகிலுள்ள கிளைக்கு எழுதியோ, நேரடியாகவோ, இலவசமாகப் பெற்றுக் கொள்ளுங்கள்.

shilpi bob 12/67A TAM






# இந்திய உலக வர்த்தகத் தொழில் பொருட்காட்சி – 1968

## அண்ணா நகர்

**ஷெனாய் நகர் அருகில் :: சென்னை – 30**

## 21 ஜனவரி 1968 - 25 பிப்ரவரி 1968

பொருட்காட்சியைச் சுற்றிப் பார்க்கவும், சென்னை நகரத்தின் பல பாகங்களிலிருந்து பொருட்காட்சிக்கு வந்து போகவும் பிரத்தியேக பஸ் வசதிகள் செய்யப்பட்டுள்ளன.

பல வெளிநாடுகளும், இந்திய அரசாங்கத்தின் பல்வேறு அமைச்சுகளும் பல மாநில அரசாங்கங்களும் பொது ஸ்தாபனங்களும் தனியார் ஸ்தாபனங்களும் கலந்துகொள்ளும் இந்தப் பொருட்காட்சியை அகில இந்திய உற்பத்தியாளர்கள் ஸ்தாபனம் ஏற்பாடு செய்துள்ளது.

**தினசரி நுழைவுக் கட்டணம் :**

**பெரியவர் 1 ரூபாய் :: சிறுவர் 50 பைசா**

கூட கோபுரத்தின் உச்சிக்குச் சென்று சென்னை நகரின் எழில் மிகுக் காட்சியைக் கண்டு ரசிக்க தனிக் கட்டணம்.

[பொருட்காட்சி நேரம் :

| | |
|---|---|
| சனி, ஞாயிறு விடுமுறை நாட்கள் | பகல் 11 மணி முதல் இரவு 11 மணி வரை |
| மற்ற நாட்கள் | பகல் 2 மணி முதல் இரவு 10-30 மணி வரை |

இம் மாபெரும் உலகப் பொருட்காட்சியைக் கண்டு பயன் அடையுங்கள்.

**தினசரி கலா நிகழ்ச்சிகளும் உண்டு**

# கல்கி

## பொருளடக்கம்

பிலவங்க, தை 14 : ஜனவரி 2ம்





படவிளக்கம் 16ம் பக்கம் பார்க்க



---

" ஹிந்தியா? எனக்கு ஒரு எழுத்தும் புரியவில்லையே!"
அரசாங்க அதிகாரி
PK
குட்டையைக் குழப்புகிறார்
மொழிச்சட்டம்



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 27 □ இதழ் 26



# தேசத்தைப் பிளக்கும் திட்டம்

பிரதேச மொழிகளை ராஜ்ய சர்க்கார்களின் ஆட்சிமொழியாக்குவதால் அவற்றிலுள்ள குறுகிய திருஷ்டிக்காரர்கள் நிறைவு பெற்றுவிடக்கூடும். இந்தப் போதையில் அவர்கள் ஆங்கிலத் துவேஷத்துடன் செய்யப்படும் ஹிந்தி வசியத் திட்டத்தை எதிர்ப்பதில் சிரத்தை கொள்ளாமல், ஹிந்தி வலைக்குள் அகப்பட்டுக் கொள்ளவும் ஏதுவுண்டு. மத்திய சர்க்காரின் ஆட்சி மொழிப் பிரச்னையில் இது ஒரு பயங்கரமான அம்சம். இதற்குக் காப்புத் தேடியாக வேண்டும்.

ஹிந்தி ஆங்கிலம் இரண்டையும் மத்திய ஆட்சி மொழியாக நீடிக்கின்ற இரு மொழி ஏற்பாட்டை ஹிந்தி பேசாதோர் பெற்றுள்ள மகத்தான உரிமை சாஸனமாகக் கருதி வரவேற்கிறார் த. நா. கா. க. தலைவர் திரு ஸி. சுப்பிரமணியம். இரு மொழி ஏற்பாடு என்று சொன்னாலும் சரி, வேறெந்தப் பெயரிட்டு அழைத்தாலும் சரி, இந்தத் திட்டம் தேசத்தைப் பிளக்கிற சாஸனமேயாகும். தீர்க்க தரிசனம் வாய்ந்த எவரேனும் இதை வரவேற்றால் அது ஆச்சரியமே!

தேசத்தைப் பிளந்து இப்படி ஒரு சமரசம் கடைப்பிடிக்கப்படுவது ஏன்? நாட்டின் ஒரு சிறுபான்மைப் பிரிவினர் ஆங்கிலத்தை இந்தியாவில் நீடிப்பது அவமானம் என்ற தவறான கருத்து கொண்டிருப்பதால்தான். உண்மையில் நவீன அறிவு பிரவேசிப்பதற்குக் கதவைத் திறந்து விடுவது ஆங்கிலமே. இந்தியாவின் எந்தப் பிரதேச மொழிக்கும் ஊறு விளைவிக்காமல், நாடு முழுவதற்கும் ஏற்றத் தாழ்வின்றி மிகவும் தரமான முறையில் உயர் கல்வி, நீதி, நிர்வாகம், சர்வதேசத் தொடர்பு இவற்றுக்குப் பயனாகக் கூடியது ஆங்கிலமே. நூற்றைம்பது ஆண்டுகளாக இவ்வாறெல்லாம் பயனாகி வந்துள்ள நீண்ட கால நட்பு மொழியாம் ஆங்கிலத்தைத் தவறான காரணங்களின் மீது கைவிட்டு விட்டு, இருமொழித் திட்டம் எனப்படுவதை வரவேற்கச் சொல்கிறார்கள்.

வாஸ்தவத்தில் ஹிந்திப் பகுதிகளுக்கு இது இருமொழித் திட்டமல்ல. அங்குள்ளவர்கள் தங்கள் தாய்மொழியாகிய ஹிந்தி ஒன்றைப் பயின்றாலே போதும். அவர்களுக்கு இது ஒரு மொழித் திட்டம் தான். ஹிந்தி பேசாதோருக்கு இருமொழித் திட்டம் நடைமுறையில் மும்மொழித் திட்டமாகவே இருக்கும். அவர்கள் தங்கள் தாய்மொழியோடு கூடத் தற்போதைக்கு நீடிக்கப்படுகின்ற ஆங்கிலம், எதிர்காலத்தில் பூரண ஆட்சிமொழியாவதற்காக இப்போதிருந்தே தயார்ப்படுத்தப்படும் ஹிந்தி இவற்றையும் பயின்றாக வேண்டியிருக்கும்.

மற்ற தென் இந்திய ராஜ்ய முதன் மந்திரிகளுடன் திரு அண்ணாதுரை பேச்சு நடத்திக் கருத்தொற்றுமை காணலாம் என்கிறார் திரு ஸி. சுப்பிரமணியம். ஆந்திர முதல்வரோ மைசூர் முதல்வரோ இன்றைய நெருக்கடியில் தமிழக முதல்வருக்கு எவ்வித உதவியும் செய்ய முடியாது என்பது திரு சுப்பிரமணியத்துக்கே தெரியும்.

நெருக்கடியைத் தீர்க்க ஒரே வழி, இன்றைய ஆட்சி மொழிச் சட்டத்தின் அமுலை நிறுத்தி வைத்துவிட்டு, சுதந்திரம் பெற்றதிலிருந்து, இருபதாண்டுகளாக இருந்துவரும் நடைமுறையை நீடிப்பதுதான். இதற்கு ஒரு நிருவாக உத்தரவு பிறப்பிக்குமாறு ராஜாஜி பிரதமர் அவர்களை மீண்டும் கேட்டுக் கொள்ளுகிறார். இப்போதைக்கு மொழிப் பிரச்னையைக் கிடப்பில் போட்டு விட்டுப் பொருளாதார — வெளி விவகாரப் பிரச்னைகளைத் தீர்ப்பதில் இந்திய சர்க்கார் முனைய வேண்டும். விவேகம் வெற்றி பெறக்கூடிய சூழ்நிலையில் மீண்டும் மொழிப் பிரச்னையை எடுத்துக் கொள்ளலாம்.

அவ்வாறின்றி இரு மொழித் திட்டத்தை அமுல் செய்வதால் எல்லா

மத்திய சர்க்கார் காரியாலயங்களிலும் குழப்பங்கள் மிகும். காலதாமதமும், பொருட்செலவும் திறமையின்மையும், சூழ்ச்சியும், ஒழுங்கீனமும் பரவும். இரண்டு மொழிகளில் நிருவாகம் செய்யும் சிரமத்தைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு புதிதாக வேலைக்கு வந்தவர்கள் அநுபவம் வாய்ந்த உத்தியோகஸ்தர்களை உபத்திரவம் செய்யக் கூடும். அல்லது நீண்ட கால உத்தியோகஸ்தர்கள் புதிதாக வந்தோருக்கு உபத்திரவம் இழைக்கக் கூடும். நம் நாட்டின் இளைஞர் சமூகம் சர்க்கார் உத்தியோகம் பெறுவதற்கே தடைகள் ஏற்படக் கூடும். எதிர்காலச் சந்ததியினருக்கு — தேசத்தின் எதிர்காலத்துக்கே — தீமை ஏற்படும். எனவே இரு மொழித் திட்டத்தை நாம் ஏற்பதற்கில்லை. இது நியாயமான சமரஸம் அன்று. அப்பட்டமான நிர்ப்பந்தத் திட்டத்துக்கே இந்தப் பெயர் தரப்பட்டுள்ளது. முன்னேற்றம், நல்லாட்சி இவற்றுக்கு எதிர்ப்புறத்தில் அடி எடுத்து வைக்கும் ஏற்பாடு இது.

தமிழக முதன் மந்திரி எடுத்துள்ள தீவிர நடவடிக்கையிலிருந்து நிலைமை எவ்வளவு உக்கிரமாகியுள்ளது என்பது நிரூபணமாகிறது. ராஜ்யம் முழுவதிலுமுள்ள எல்லாப் பள்ளிகளையும் கல்லூரிகளையும் காலவரையின்றி மூடுமாறு அவர் உத்தரவு பிறப்பித்திருக்கிறார். ராஜ்யமெங்கணும் ஏற்பட்டுள்ள உணர்ச்சிக் கொந்தளிப்பையும் அதனால் விளையக் கூடிய விபரீதங்களையும் முதல்வர் புரிந்து கொண்டிருப்பதாலேயே இவ்வாறு முடிவெடுத்திருக்கிறார். உணர்ச்சி அடங்குவதற்கு உரிய நியாயமான பரிகாரம் காணாமல் உணர்ச்சி வெளிப்படாமல் வெறுமே அடக்கி விடுவதால் விபரீத நிலையைச் சமாளித்துவிட முடியாது.

உணர்ச்சி வசப்பட்டு வன்முறையில் இறங்கிப் பொதுச் சொத்துக்களை நாசம் செய்வதாலோ, அல்லது வட இந்தியருக்கு இன்னல் இழைப்பதாலோ அல்லது வேறு விதங்களில் ஒழுங்கீனம் செய்தாலோ நாமாகவே நம்மை மத்திய காங்கிரஸ் சர்க்காரின் கைகளில் சிக்கவைத்துக் கொள்வதிலேயே முடியும். ஒவ்வொரு ராஜ்யமாக ராஷ்டிரபதி ஆட்சியின் கீழ் கொண்டுவந்து காங்கிரஸ் என்கிற சர்வ பட்சிணியின் ஆதிக்கத்தை மீண்டும் இந்தியாவெங்கிலும் ஏற்படுத்த மத்திய சர்க்கார் ஆவலாயுள்ளது என்பதை மறவாதிருப்போம். இளைஞர்களையும், தொழிலாளர்களையும் ஒழுங்கீனத்துக்கு இட்டுச் சென்று அதனால் ஆதாயம் பெறுவதையே தொழிலாகக் கொண்ட ஒரு கூட்டம் உள்ளது என்பதையும் மறவாதிருப்போமாக. ஒழுங்கீன நடவடிக்கைக்குப் போகாமலே அமைதியான, ஆனால் உறுதியான முறையில் நம் சங்கற்பத்தை வெளிக் காட்ட வழிகள் உண்டு. இதற்கு மாறாக ஒழுங்கீன ஆர்ப்பாட்டம் செய்வதால் ராஜ்ய சர்க்காருக்கே சிரமமான நிலை உண்டாகும். ராஜ்ய சர்க்காரும் ராஜ்ய மக்களும் ஒரே நோக்கத்தில் இணைந்திருக்கிறார்கள். எனவே, தாமதமாயினும், முடிவில் வெற்றி கிட்டியே தீரும். ஆனபடியால் ராஜ்ய சர்க்காருக்கு இடைஞ்சல் உண்டாகும் வழியில் மக்கள் கிளர்ச்சி செய்யாதிருப்பாராக!

# வித்யாபவனின் வளமான எதிர்காலம்

**நா**த்திகம் பேசுவது பெருமையாகக் கருதப்படும் இந்தக் காலத்தில் பல மகான்களும் ரிஷிகளும் வருந்து வளர்த்துத் தந்த பாரதத்தின் ஸனாதன தர்மத்தைப் பாதுகாத்து அதற்குப் புனர் உத்வேகமளித்து மக்களிடையே அதைப் பரப்பி, மக்களை மேன் மக்களாக உயர்விக்கும் பணியை பாரதீய வித்யாபவன் மூலம் முப்பதாண்டுகளாகச் செய்து வருகிறார் குலபதி கே. எம். முன்ஷி. பவன் இப்போது அகில இந்திய இயக்கமாக இருந்து வருவது நாம் எல்லாம் அறிந்ததே. பாரத தர்மத்தில் பற்றுள்ள அனைவருக்கும் பற்றுக்கோடாகத் திகழ்கிறது இந்த ஸ்தாபனம். தமக்கு வயதாகிக் கொண்டிருந்தாலும், பாரதீய வித்யாபவனத்தின் லட்சியங்களை மேன்மேலும் உறுதிப் படுத்திச் செழுமையாக்குவதில் சலிப்பே இல்லாதவர் திரு முன்ஷி. 81-வது ஆண்டில் அடியெடுத்து வைத்துள்ளார். அவருடைய சிறப்பு அவர் சிறந்த கர்மவீரர் என்பதே. சலியாத உழைப்பே அவருக்கு உத்சாகம் அளிக்கிறது. இதுவும் ஆண்டவனின் அநுக்கிரகம். பவன் வளர்ச்சிக்கு எதிர்காலத் திட்டங்கள் மிக விரிவாகத் தீட்டியிருக்கிறார் அவர். அவற்றின் விவரங்களையும், அவற்றை நிறைவேற்றி வைப்பதில் ஆஸ்திகர்களும், அன்பர்களும் எவ்வளவு தூரம், எப்படியெல்லாம் உதவி செய்யலாம் என்பதையும் இவ்விதழில் வேறு பக்கங்களில் காணலாம். அவற்றையெல்லாம் பூர்த்தி செய்து வைக்கப் பாரத மக்கள் அனைவரையும் அன்புடன் அழைக்கிறார் திரு முன்ஷி. நல்ல காரியங்களுக்கு முழு ஆதரவு தந்து ஊக்குவிப்பதில் தமிழ் மக்கள் எப்போதும் புகழ் படைத்தவர்கள். பாரதீய வித்யாபவனத்தின் தர்மப் பணிக்கு முழு ஆதரவு கிடைக்கச் செய்வது தமிழ் மக்களின் தலையாய கடமை. நல்ல காரியத்துக்குச் சிபாரிசு தேவையே இல்லை. அவர் எதிர்பார்க்கும் நிதி விரைவிலேயே வருவதாகி, பாரதீய வித்யாபவனத்தின் லட்சியங்கள் மக்களிடையே விசேஷமாகப் பரவ வேண்டும் என்பதைத்தான் நல்லவர்கள் அனைவரும் விரும்புவர். திரு முன்ஷியின் அறப்பணி ஓங்கட்டும். அவர் பல்லாண்டு வாழ வாழ்த்துகிறோம். அவருடைய உருவத்தையும், அவருடைய மூச்சுக் காற்றாக விளங்கிக் கொண்டிருக்கும் பாரதீய வித்யா பவன் தலைமைக் கட்டடத்தையும் முப்பதாவது ஆண்டு விழாச் சந்தர்ப்பத்தில் அட்டைப்படமாக வெளியிடுவதில் கல்கி மிகவும் மகிழ்ச்சி கொள்கிறது.

# உழைப்பால் உயர்ந்த உத்தமர்

சென்னை, உதகை, மைசூர் ஆகிய இடங்களில் உள்ள தாஸப்பிரகாஷ் ஹோட்டல்களின் அதிபரும், பரம தர்மிஷ்டரும், சிறந்த பக்திமானுமான ஸ்ரீ கே. சீதாராம ராவ் அவர்களின் மறைவுச் செய்தி கேட்டுத் துணுக்குறாதவர் இருக்க முடியாது. கனிகளை வாரி வழங்கி, நிழல் தந்து வந்த நீண்டதொரு விருட்சம் விழுந்ததுபோல் கொடை வள்ளல் சீதாராம ராவ் அவர்கள் எல்லா மனிதர்களுக்கும் உரிய அந்தஸ்தை அடைந்துவிட்டார்.

சீதாராம ராவ் அவர்களின் வாழ்க்கை உழைப்பின் சரிதம்; உண்மையான தெய்வ நம்பிக்கையின் சரிதம்; ஊமாரச் செய்த தான தருமங்களின் சரிதம்.

தென் கன்னடத்தைச் சேர்ந்த பரம பாகவதராகிய பக்த கோவிந்த தாஸரின் புதல்வரான சீதாராம ராவ், ஆதியில் முப்பத்தைந்து ரூபாய் சம்பளத்துக்கு மங்களூர் கலெக்டர் ஆபீஸில் குமாஸ்தாவாகப் பணி புரிந்தவர். அதிலிருந்து தம் பலம் கொண்டும், தமது பக்தியின் பலம் கொண்டும், தந்தையின் ஆசி பலம் கொண்டும் உணவுச் சாலைகள் அமைத்து அவற்றை நாடு புகழுமளவுக்கு விஸ்தாரம் செய்தார். ஆகார சுத்தத்தினால் மனத்தின் சுத்தம் ஏற்படுகிறது என்ற உபநிஷத வார்த்தையில் அவர் வைத்திருந்த நம்பிக்கையே தாஸப்பிரகாஷ் ஸ்தாபனங்களின் தனிச் சிறப்புக்குக் காரணம். உணவு தந்ததோடு மட்டுமின்றி உணவுச் சாலைகளில் ஆன்றோரின் அமுத வாக்குகளைப் பொறித்தும், ஆங்காங்கு உடுபீ கிருஷ்ணன், புரந்தரதாஸர் ஆகியோருக்குச் சிலைகள் அமைத்தும் அறுசுவையோடு பக்திச்சுவையும் சேர்த்து வழங்கினார் அவர்.

தொழிலதிபர் என்பதாகத் தம் உழைப்பின் சிறப்பைக் காட்டிய அவரது தனி வாழ்வைப் பார்த்தாலோ அங்கு நமது நாட்டின் பிராசீன ஆசாரங்களெல்லாம் துலங்கின. புரந்தரதாஸருக்கும், தமது தந்தை கோவிந்த தாஸருக்கும் தாஸராகவே தம்மைக்கருதி, அவர்களது ஆன்ம ஒளியாலும் ஆசியாலும் தாம் வாழ்வதாக அவர் கருதியதால்தான் ஹோட்டலுக்கு தாஸப்பிரகாஷ் என்றும், இல்லத்துக்கு தாஸப்பிரசாத் என்றும் பெயரிட்டிருந்தார். அந்த வீடு ஒரு கோவிலாகத் திகழ்ந்தது. எப்பொழுதும் அங்கு நாம சங்கீர்த்தன நாதம் ஒலித்தபடியும் ஏதேனும் ஒரு மகானின் விஜயம் நிகழ்ந்தபடியும் இருக்கும். சீதாராம ராவ் அவர்களும் அவரது மக்கட் செல்வமும் மெய் மறந்து பஜனைப் பாடல்களைப் பாடி ஆடி வந்தது இக்காலத்துக்கே ஓர் அற்புதமாகத் திகழ்ந்தது. ஆஸ்திகம் என்பது தெய்வ பக்தி மட்டுமல்ல, மாதா—பிதா பக்தியுமாகும் என்பதை நடைமுறையில் காட்டினார். 'பித்ரு பக்தி பராயண' என்று முன்பு விருது பெற்ற சீதாராம ராவ் தமது மாத்ரு பக்தியின் உருவமாக, சென்ற ஆண்டு தமது நூறு வயதைக் கடந்த அன்னையாரை ஆகாய விமானம் மூலம் பத்ரிநாத் உட்படப் பல தலங்களுக்கு அழைத்துச் சென்று வந்தார். இன்று அந்த அன்னை தம் தள்ளாத பருவத்தில் இப்படிப்பட்ட புத்திர சிரேஷ்டரின் பிரிவைக் கண்டு துக்கிப்பது மகத்தான சோதனை!



ஸ்ரீ கே. சீதாராம ராவ்

பரம பாகவதரான சீதாராம ராவ் அவர்கள் கண்ணனின் கழலடிகளை அடைந்திருப்பார் என்பது திண்ணம். சீதாராம ராவ் அவர்களின் பெரிய குடும்பத்துக்கு நம் உளம் கனிந்த அநுதாபங்கள்.

---

காமகோடியின் கருணைமொழி

## மனம், வாக்கு, காயம்

எதை நாம் செய்யக் கூடாது என்று மனத்துக்குத் தோன்றுகிறதோ, அதுதான் பாபம்; எதைச் செய்வது நல்லது என்று தோன்றுகிறதோ அதுதான் புண்ணியம். ஆசையின்றி ஒரு காரியத்தைச் செய்தால் அப்பொழுது பாபமில்லை. ஆசைப் பட்டு ஒன்றைச் செய்வதுதான் பாபம். நாம் எப்படிப் பாபம் செய்கிறோம் என்பதை யோசித்துப் பார்க்கலாம். வாயாலும், மனத்தாலும், தேகத்தாலும், பணத்தாலும் நாம் பாபம் செய்கிறோம். மனசில் கெட்ட நினைவுகளை நினைத்துப் பாபம் செய்கிறோம். வாயினால் உத்ஸாகமாகப் புரளி பண்ணிப் பாபம் செய்கிறோம். தேகத்தால் கெட்ட காரியங்களைப் பண்ணிப் பாபம் செய்கிறோம். பணத்தினால் பலவகையாகப் பாபம் செய்கிறோம். பல காலமாகப் பாபம் பண்ணியிருக்கிறோம். அதனால்தான் அந்தப் பழக்கம் விடவில்லை. அந்தப் பழக்கத்தை எப்படிப் போக்குவது?

கயிற்றை எப்படிச் சுற்றினோமோ, அப்படியே அவிழ்க்க வேண்டும். எந்த நான்கினால் நாம் பாபம் பண்ணப் பழகிக் கொண்டோமோ, அந்த நான்கினாலேயே புண்ணியம் செய்யப் பழகிக் கொள்ள வேண்டும்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

ஐன்ஸ்டைன், ஹாவ்லாக் எல்லிஸ், பெர்ட்ரண்ட் ரஸ்ஸல், ஹெச். ஜீ. வெல்ஸ் ஆகிய இருபத்து மூன்று உலகப் பிரமுகர்களின் கட்டுரைகள் அடங்கிய புத்தகமொன்றை ஒரு நண்பர் கொடுத்தார். இருபத்தியேழு ஆண்டுகளுக்கு முன் ஜார்ஜ் ஆலன் அன்ட் அன்வின் வெளியிட்ட இந்நூல் ஏழு பதிப்புக்கள் கண்டிருக்கிறது. இப்புத்தகத்தைப் படித்த பின் எனக்கு உண்டானது விசனமே.

மிகவும் ஜாக்கிரதையுடன் தொகுக்கப்பட்ட ஒரு முக்கியத்துவம் வாய்ந்த நூலைப் பற்றி நான் இப்படிச் சொல்வது விசித்திரமாயிருக்கலாம். ஆனால் உண்மை இதுவே. இந்தப் புத்தகத்தைப் படித்து முடித்ததும் சத்தியத்தை மீண்டும் கண்டோம் என்ற மகிழ்ச்சி ஏற்படவில்லை.

நட்சத்திரங்களை ஆராயும் கருவியின் மூலம் தெரிகின்ற பிரபஞ்சத்தின் அளவிட முடியாத விரிவும், புரிந்துகொள்ள முடியாத தன்மையும், மனிதனின் கற்பனா சக்தியை ஸ்தம்பிக்கச் செய்வனவாகும். என்றாலும் எதற்குமே ஒரு காரணம் இருந்தாக வேண்டும் என்ற விதியை நாம் ஒப்புக் கொண்டு விட்டதால், பிரபஞ்சத்தின் அளவிடவொண்ணாத அறியவொண்ணாத புதிர்த் தன்மைக்கும் காரணம் காண மனிதன் துருதுருப்படைகிறான். எதற்கும் காரணம் இருக்க வேண்டும் என்ற விதி முடிவில்லாத — நாம் நெருங்க நெருங்க விலகிச் செல்கிற — வரம்பிலேயே நம்மை விட்டு விடுகிறது. காக்கைகளும் குருவிகளும் பூச்சிகளும் இந்த விஷயங்களைப் பற்றித் தொந்தரவு செய்து கொள்வதில்லை. ஆனால் மனிதனின் மனமோ அமைதி கொள்ளாமல் தன்னால் அடைய முடியாததை அடையும் முடிவற்ற பிரயாசையில் ஈடுபட்டிருக்கிறது. மேலே சொன்ன புத்தகத்தைப் படித்த பின் மனித மனம் அதன் இலட்சியத்தை அடைய முடியாது என்று அறிந்தவர்களும் இவ்விஷயமாகத் தங்கள் மண்டையை உடைத்துக் கொள்ள ஏதோ ஒருவிதத்தில் நிர்ப்பந்திக்கப்பட்டிருப்பதாக உணர்வதை அறிய முடிந்தது. இப்புத்தகத்தின் தலைப்பு ''நான் நம்புகிறேன்'' என்பதாகும். ஆயினும் இதில் 'நம்பிக்கை' என்பதாக நாம் புரிந்து கொள்ளக்கூடிய எதையும் காணவில்லை. தாங்கள் காண முடியாமல் தோல்வியடைந்த உணர்வே இதில் எழுதியவர்களை உறுத்திவிருக்கிறது. தங்களால் காண முடியாத இறுதிக் காரணத்தைப் பிரமுகர்களால் நம்ப முடியாது. எனவே இந்தப் புத்தகம் 'நான் நம்புகிறேன்' என்று பெயர் கொடுத்திருந்தாலும் நம்பிக்கையின்மையையே சொல்கிறது.

மனிதன் உயிர் வாழ உணவு வேண்டும். தான் ஏன் உயிர் வாழ வேண்டும் என்று ஒருவன் கண்டாலொழிய அவன் உண்ண வேண்டியதில்லை. ஆனாலும் எல்லா மனிதர்களும் தாங்கள் உயிர் வாழ விரும்பி உணவு தேடுகிறார்கள். இப்படியே மனிதனுக்கு மத உணர்வு வேண்டியிருக்கிறது. அது இல்லாமல் அவனால் வாழ முடியாது. மத நம்பிக்கை இன்மையில் அவன் ஊன்றியிருந்தாலும் கூட அந்த நம்பிக்கையின்மையையே ஓர் இறுக்கமான மத நம்பிக்கையாக்கிக் கொள்கிறான்.

நமது அறிவு சக்தி வளர்ந்து வளர்ந்து பெரிதாகி, நீண்ட நெடிய நிழலைப் பரப்புவதைப் பார்க்கும்போது நமக்குப் போதை உண்டாகிறது. மத நம்பிக்கையை விட்டு விடுவதற்காக இந்த அறிவு வியர்த்தமாகப் பாசாங்கு செய்கிறது. ஆனால் தன் விசித்திரப் போக்கையே ஓர் அவநம்பிக்கை மதமாக ஆக்கிக் கொள்கிறது. மனிதன் ஒருசில மணி சிரிப்பதற்காக ஹாஸ்ய நாடகம் போடுகிறோம். அறிவு என்ற மகத்தான விருட்சமும் இப்படி ஒரு ஹாஸ்ய நாடகமாக முடிகிறது.

ஃஃஃ

நகர்ப்புறங்களில் வசிப்பவர்களை விடவும், தொழில் துறையினரை விடவும் குறைந்த அளவு வரியையே விவசாயத் துறையினர் கொடுக்கிறார்கள்; எனவே, இவர்களின்மீது வரிச் சுமை இலேசாக உள்ளது எனலாம். —இவ்வாறு இந்திய வர்த்தகக் கருத்தரங்கில் ஒரு கருத்துத் தெரிவிக்கப்பட்டது. ஒவ்வொரு துறையின் மொத்த வருமானம் என்ன, அவை செலுத்தும் வரி எவ்வளவு என்பதை வைத்துக்கொண்டு, வருமானத்தில் வரி எவ்வளவு சதவிகிதம் எனக் கணக்கிட்டு, இக்கருத்து வெளியிடப்பட்டிருக்கிறது. இது தவறு. 1962–63ல் 1865 கோடி ரூபாயாக இருந்த மொத்த வரி வருமானம் 1966–67ல் 3206 கோடி ரூபாயாக உயர்ந்திருக்கிறது. இதில் முக்கால் பாகம் மறைமுக வரிகளாக வசூலிக்கப்பட்டிருக்கிறது. இவ்வரிகள் பொருளாதாரத்தில் எல்லாப் பகுதியினரையும் ஒருவர் விடாமல் பாதிப்பவையாகும்.

இன்னொரு விஷயம். விவசாயத்தில் உற்பத்தியாகும் மொத்த வருமானம் 12000 கோடி ரூபாய் எனக் கணக்கிடப்பட்டிருக்கிறது. இதில் விவசாயத் துறையினர் நிலவரியாகவும் விவசாய வருமான வரியாகவும் செலுத்துவது 109 கோடி ரூபாய் தான் என்பதால் அவர்களுக்கு இலேசான வரி விதிக்கப்பட்டிருப்பதாகக் கூறப்படுகிறது. ஆனால் மற்றத் துறைகளை விடப் பன்மடங்கு மக்கள் விவசாயத்தில் ஈடுபட்டிருப்பதையும் இங்கு நினைவுகூரவேண்டும். ஏறக்குறைய 50 கோடி மக்களின் வருமானமே இந்த 12,000 கோடி ரூபாய் என்பதைக் கவனிப்போமாயின் இத்துறையில் சராசரி வருமானம் வருஷத்துக்கு ரூ. 240 (மாதத்துக்கு ரூ. 20)தான் என்பது தெரியும். இப்படிப்பட்ட பகுதியினர் மீது எவ்வளவு குறைந்த வரி விதித்தாலும் அது அவர்களுக்குப் பெரிய பளுவாகவே இருக்கும். தொழில் துறையின் மொத்த வருமானத்தை எவ்வளவு பேர் பகிர்ந்து கொள்கின்றனர் என்பதையும் ஒப்பு நோக்கினால் முதலில் சொன்ன சதவீத வாதம் அபத்தம் என்பது தெரியும். அதோடு விலைவாசி உயர்வு என்ற மறைமுகப் பெயரில் விவசாயத்தினரும் வரி செலுத்துவதை மறக்காதிருப்போம். அடுத்த போகத்திற்காக விவசாயிகள் ஒதுக்கி வைக்கும் முதலீட்டுத் தொகையையும் அவர்களின் மொத்த வருமானத்தில் சேர்த்து விடுவதற்கில்லை.




முதன்மந்திரி பிரதிநிதிகளுக்கு அளித்த விருந்தில், இலங்கைமக்கள் சார்பில் நீதிபதி திரு தம்பையா திரு அண்ணாதுரைக்கு அன்புப் பரிசளிக்கிறார்.

(சென்ற வாரத் தொடர்ச்சி)

இன்றையத் தமிழை வளர்த்துவரும் மறுமலர்ச்சி எழுத்தாளர்களும் சில புலவர்களும் ஏன் வெளியே நிற்கிறார்கள்? — புகாரை நோக்கிச் செல்லும் போது சில புகார்கள் காதில் விழவே அவற்றுக்குச் சற்றே செவி சாய்த்தேன்.

''இலக்கியப் புலவர்களும் எழுத்தாளர்களும் இந்த இலக்கிய அரங்கின் முன்னணியிலே இருப்பார்கள் என்று தேடினால் அவர்கள் எங்கெங்கோ சிதறிக் கிடக்கிறார்களே!'' என்றார் ஒரு நண்பர்.

''பார்வையாளர்களையும் அறிஞர்களையும் அகர வரிசையில், அதாவது ஆங்கில ஏகார (ஏ) வரிசையில் அமர்த்தியிருக்கிறார்கள். இதில் என்ன தவறு?'' என்று கேட்டார் இன்னொருவர்.

''முதல் வரிசையில் இருந்தவர்கள் எல்லாரும் 'ஏ'யில் ஆரம்பிக்கும் பெயர்களா? இல்லையே!'' என்று சொல்லிச் சில பெயர்களை அடுக்க ஆரம்பித்தார் முதலாவது நண்பர்.

''மாநாட்டில் புலவர்களை ஒதுக்கிவிடக் கூடாது என்பதற்காகவே தமிழகப் புலவர் குழுவுக்கு ஒரு வரவேற்பு நடக்கிறதே, தெரியாதா?'' என்று கேட்டார் அடுத்தவர்.

''புலவர்கள் என்றால் விகவ நாதம் அவர்களின் புலவர் குழு ஒன்றுதானா? வேறு புலவர்களே இந்த நாட்டில் இல்லையா? இது என்ன பாரபட்சம்?'' என்று வெகுண்டார் மூன்றாவது நண்பர்.

''பல்கலைக் கழகத்தில் புலவர் அல்லது வித்துவான் என்று பட்டம் பெற்ற உங்களைப் போன்றவர்கள் தான் புலவர்களா?'' என்று என் மீது சாடினார் எங்கள் மாவட்டத்தைச் சேர்ந்த ஒரு நண்பர்! எனக்கு மூச்சுத் திணறிக் கொண்டிருந்த போது பிராண வாயுவாக வந்து உதவினார் வேறொரு சென்னை நண்பர்!

''கதைகளும் கட்டுரைகளும் எழுதுகிற நமக்கு இடமில்லையா இங்கே? நம்முடைய எழுத்தை இவர்கள் ஏன் மதிக்கவில்லை?'' என்று பேச்சைத் திருப்பினார் இந்த நண்பர்.

''இன்றைய இலக்கியத்தைப் பற்றிச் சில கட்டுரைகளும், பூம்புகாரிலே சில பேச்சுகளும் நடைபெறுவது தெரியாதா உமக்கு?'' என்று சுட்டிக்காட்டினார் மற்றவர். உடனே இதிலுள்ள மற்றொரு பெரிய சங்கடம் எனக்கு நினைவு வந்தது!

ஆங்கிலப் பத்திரிகைகளில் எழுதுகிறவர்களானாலும் சரி, இலக்கிய அரங்குகளிலே இன்றைய எழுத்தாளர்களை எடைபோடுகிறவர்களானாலும் சரி, சில நாட்களாகத் தமிழுக்கு ஒரு பெரிய தீங்கு இழைத்து வருகிறார்கள். இன்ன மதிப்புரையாளர் எழுதினால் இன்னின்ன எழுத்தாளர்களைத்தான் பாராட்டுவார் என்றும், இன்னின்ன எழுத்தாளர்களைக் குறைத்துப் பேசுவார் என்றும் யாரும் எளிதில் ஊகித்துவிடலாம்! சிலரை இருட்டடிப்புச் செய்வதும், சிலருக்கு மத்தாப்புப் போடுவதும் இப்போது நடைபெற்று வருகிற ஒரு விமரிசனத் தீவினை யாகும்! இதை எண்ணிப் பார்க்கும் போது இந்த அகில உலக மாநாட்டில் இத்தகைய மதிப்புரைகள் குறைவாக இருப்பதே நலம் என்று எண்ணினேன்!

உலகத் தமிழ் மகாநாட்டில் கருத்தரங்கின்போது கூடியிருந்த அறிஞர்கள்





மகாநாட்டின் பிரதம பொதுக் காரியதரிசி திரு வி. எஸ். தியாகராஜ முதலியார்

இன்னொரு முக்கிய குறைபாடும் நண்பர்களின் பேச்சுகளிலே ஒலித்தது. சில சிறந்த புலவர்களும், ஆசிரியர்களும் மாநாட்டுக்கு அழைக்கப் படவில்லை என்பதாக! இதற்கு ஒரு காரணம் இருந்தது என்று அறிந்தேன். மாநாட்டில் பங்கு பெற விரும்பும் அறிஞர்களுக்கும், நிறுவனங்களின் சார்பில் வருகிற ஆசிரியர்களுக்கும் என்று ஒரு விண்ணப்பத் தாள் அனுப்பினார்களாம். பதினைந்து ரூபாய்க் கட்டணத்தோடு குறித்த தேதிக்குள் அந்த விண்ணப்பத்தை நிரப்பி அனுப்பியவர்களே விழாப் பட்டியலில் இடம் பெற்றார்களாம். இவ் விதிமுறை சிலரைக் கோபமூட்டி யிருக்கிறது. ஹோட்டல் அதிபர்கள் மாநாட்டிலோ, தொழில் அதிபர்கள் மாநாட்டிலோ, அல்லது அரசியல் மாநாட்டிலோ இலக்கியப் புலவன் தக்க இடம் பெறவில்லை என்றால் இழுக்கில்லை! ஆனால் உலகத் தமிழ் மாநாட்டில் நம்முடைய இலக்கிய நாயகர்களுக்கு உரிய இடம் எதிர்பார்ப்பதும், இல்லையென்றால் அதைக் கோருவதும், மறுத்தால் அதுபற்றி வருந்துவதும் நியாயமே அல்லவா! விண்ணப்ப விதிகளையும், காலத் தவணைகளையும், சட்டங்களையும் சொல்லுவது இலக்கிய அறம் ஆகுமா? வளைவு நெளிவு இல்லாமல் ஒரே கம்பாக நின்றால், பலருடைய கூட்டுறவோடு நடத்த வேண்டிய இலக்கிய விழாவுக்கு அது ஒவ்வாது அல்லவா?

இந்த உண்மையை நிர்வாகிகளும் உணர்ந்து தான் கடைசி நேரத்தில் இந்த விதிகளையெல்லாம் தளர்த்திச் சற்று நீக்குப் போக்கோடு நடந்து கொண்டார்கள் என்பது மகிழ்ச்சிக்குரியது!

பொதுவாக, ஒரு பெரிய அளவில் இது போன்ற மாநிலத் திருவிழாக்களை நடத்துகையில் இம்மாதிரிச் சில குறைபாடுகள் நேர்ந்து விடுவதுண்டு. அவற்றைப் பெரிதுபடுத்தாமல் ஒத்துழைப்பதே தமிழ்ப் பண்பாகும். இந்தப் பண்பைக் கடைப்பிடித்துப் புலவர்களும் ஒத்துழைத்தார்கள். அதைப் பாராட்ட வேண்டும். அதோடு, இந்த இலக்கிய அரங்கை ஆரம்பத்திலிருந்து அமைத்து உருவாக்கிய திரு ஏ. சுப்பையா அவர்களும், திரு வி. எஸ். தியாகராஜ முதலியார் அவர்களும், அவர்களது நண்பர் குழாமும், எத்தகைய கைம்மாறும் கருதாமல் தமிழுக்குச் செய்கிற ஒரு பெருந் தொண்டாகவே எண்ணி இரவும் பகலும் பற்பல வெப்ப தட்ப நிலைகளிலே பணி புரிந்தார்கள் என்பதையும் நன்றியோடு எண்ணிப் பார்ப்பது நமது கடமையாகும்.

இலக்கிய அரங்கம் இவ்வாறாக, பூம்புகார் நிகழ்ச்சிகளிலோ என்றால் பட்டியல் பட்டியலாக அறிஞர்களை வரவழைத்து, 'போதுமோ போதாதோ' என்று கேட்பது போல, கவியரங்கங்களும், பட்டி மன்றங்களும், உரைக் கோவைகளும், சொற்பொழிவுத் தொடர்களுமாக நொறுக்கித் தள்ளிவிட்டார்கள்! தமிழுக்கு வாண வேடிக்கைகளே செய்து காட்டிவிட்டார்கள் என்றால் அது நூற்றுக்கு நூறு உண்மை!

மொத்தத்தில் இந்தத் தமிழ் மாநாடு சாதித்துள்ள வெற்றிகள் என்ன?

ஆங்கில நாடுகளில் மிக நல்ல முறையில் வளர்ந்திருக்கிற திறனாய்வு முறைகளைக் கையாண்டு, நமது தமிழ் மொழியையும் இலக்கியத்தையும் அகில உலக அடிப்படையில் மேனாட்டார்களோடு சேர்ந்து நம்மூரில் ஆராய்ந்த செயலானது தமிழக வரலாற்றில் ஒரு பொன்னேடு! அதோடு, இலக்கியப் புலவர்களை மட்டுமே நினைத்துப் பொதுமக்களை மறந்து விடாமல், ஏராளமான பொருட் செலவில் ஒரு பெரிய ஊர்வலத்தை ஏற்பாடு செய்து, அதில் எத்தகைய விபரீதமும் குழப்பமும் விளையாமல் நடத்தினார்களே அதை எத்தனை பாராட்டினாலும் தகும்! அது

முதன்மந்திரி அளித்த விருந்தில் மலேஷியப் பிரதிநிதிகளின் தலைவர் ஸெனடர் ஆதிநாகப்பனின் உரை.



மட்டுமா? ஜனவரி மூன்றுந் தேதி மாலையில் ஐம்பது அறுபது நாககரங்களும் அவற்றுக்கு இணையான தவுல்களும் ஒன்று சேர்ந்து, மனித இதயங்களுக்கு இல்லாத ஒற்றுமையோடு ஒன்றி இணைந்து கடற்கரை மணலிலே ஒலித்தனவே, அது எத்தகைய அனுபவம்!

ஒரே ஒரு யோசனை: என்றாவது ஒரு நாள் வெளிநாட்டுத் தமிழ் அறிஞர்களை எல்லாம் ஒவ்வொருவராக மேடை மீது அழைத்து, தங்களைத் தாங்களே அறிமுகம் செய்து கொள்ளும்படி ஏற்பாடு செய்திருக்கலாம். அதிலும் சில ஆங்கிலேயர்கள் திருத்தமான தமிழில் சிறப்பு 'ழ'கரத்தைக் குழைத்து இழைத்து மிழற்றுவதை நாமெல்லாம் மிகவும் சுவைத்திருப்போம். சந்தேகமில்லை. என்றாலும், இந்தக் குறையை ஓரளவு நிறைவு செய்தது வெளிநாட்டில் உள்ள சில தமிழர்களின் அறிமுக உரை! முக்கியமாக மலேஷியாவிலிருந்தும், இலங்கையிலிருந்தும் வந்திருந்த தமிழ்ப் பிரதிநிதிகள் உருக்கத்தோடு பேசிய பேச்சு மனத்தைக் கனிய வைத்தது.

தமிழில் புதிய சொற்கள் ஆக்கும் போதும், விஞ்ஞானச் சொற்களைச் செப்பனிடும் போதும், தமிழகமும் இலங்கையும் ஒன்று சேர்ந்து இணைப்பாகச் சொல்லாக்கப் பணியை மேற்கொண்டால், ஒரு வேலைக்கு இரு வேலையாக இராமல் ஒத்த பணியாக அது அமையும் என்பதை, இலங்கை அமைச்சர் திருச் செல்வம் அவர்களும், இலங்கை உயர் நீதி மன்ற நீதிபதி தம்பையா அவர்களும், க. பொ. இரத்தினம் அவர்களும் மற்றும் சிலரும் தெரிவித்தபோது தமிழன்பர்கள் அனைவரும் உவகையோடு அதை வரவேற்றார்கள். இது போலவே, பீஜித் தீவுத் தமிழர்களின் சார்பில் ஸ்ரீமதி முருகேசன் அவர்களும், மலேஷிய மக்களின் சார்பில் ஸெனட்டர் திரு ஆதி. நாகப்பன் அவர்களும் பேசிய போது, கடல் கடந்த நாடுகளில் வாழும் தமிழர்களுக்குத் தாய் நாட்டின் மீது







சித்த வைத்திய மாநாட்டு மலரை அமைச்சர் கோவிந்தசாமி வெளியிடுகிறார். தொழிலதிபர் ஜி. டி. நாயுடு பெறுகிறார்.

பூம்புகார் புலவர் குழு பாராட்டு விழாவில் திரு பெருமாள் முதலியாருக்கு அமைச்சர் கருணாநிதி மாலை அணிவிக்கிறார்.

மாநாட்டுக் கருத்தரங்கில் ஒரு தோற்றம். இடமிருந்து மூன்றாவதாக அமர்ந்திருப்பவர் கருத்தரங்குக் காரியதரிசி திரு ஏ. சுப்பையா.

உலகத் தமிழ் மகாநாட்டுப் பிரதிநிதிகளுக்காக ராஜேசுவரி கல்யாண மண்டபத்தில் நல்லி சின்னசாமி செட்டி ஸ்தாபனத்தினர் ஏற்பாடு செய்த ஆடை அலங்காரக் காட்சியில் தென்னிந்தியப் பட்டாடையும், நகைகளும் அணிந்து ஒரு பெண்மணி காட்சி தருகிறார்.

எத்தகைய பாசம் இருக்கிறது என்பதை நாமெல்லாம் மிக நன்ருக உணர முடிந்தது.

''சேய் நாட்டிலே இருக்கும் நாங்கள் அந்த நாட்டுக்குரிய குடிமக்களே என்றாலும், தாய் நாட்டுக்கு வந்து தாய்த் தமிழ் மாநாட்டிலே கலந்து கொண்டது எங்கள் வாழ்விலேயே பெரிய பேறாகும்!'' என்றும்,

''தமிழர்களுக்குத் தமிழ் மொழியிலே உள்ள பற்று ஈடு இணையற்றது. தாய்க்கு அடுத்தது தாய்மொழிதான் என்று கருது கிறவர்கள் நாங்கள்! தமிழ்த் தாயின் மக்களிலே நாங்கள் தம்பிமார்கள்! அண்ணுவைத் தேடித் தாய்நாட்டுக்கு வந்தோம்!''

என்றும் சொன்ன போது, கூட்டத்தில் உண்டான கையொலி தேமதுரத் தமிழோசையாக எழுந்து திக்கெல்லாம் பரவியது!

விழாவின் இறுதி நாளன்று டாக்டர் கட்ரே என்ற அறிஞர் அகில உலக அடிப்படையிலே தமிழை ஆராய்வதற்கு ஒரு பெரிய

ராஜாஜியும் கருத்தரங்குத் தலைவர் பிலியோஸாவும் அளவளாவுகின்றனர்.



கழகம் அமைக்க வேண்டும் என்று கூறி, அதற்கான ஒரு திட்டத்தையே வெளியிட்டார். இந்தக் கழகம் எந்த நாட்டில், எந்த ஊரில் அமைய வேண்டும் என்ற கேள்விக்குத் தமிழகத்தின் தலைநகரமாகிய சென்னையில் அமைவதே சாலப் பொருத்தம் என்று, நமது கல்வி அமைச்சர் திரு நெடுஞ்செழியன் அவர்கள், ''சுருக்கமாகவும் தெளிவாகவும், திருத்தமாகவும் அழகாகவும், உறுதியோடும் ஆற்றலோடும், சீரோடும் சிறப்போடும்'' கூறி எல்லாருடைய மனமுவந்த பாராட்டையும் பெற்றார்! செட்டி நாட்டு அரசர் முத்தையச் செட்டியார் அவர்கள் இதையொட்டி அரியதொரு கருத்தை ஆணித்தரமாக வெளியிட்டார்:

''இந்த ஆராய்ச்சிக் கழகமானது ஏற்கனவே உள்ள பல்கலைக் கழகங்களைப் போல ஆண்டுதோறும் பரீட்சைகள் நடத்திச் சான்று இதழ்களை வழங்குகிற ஓர் உற்பத்தி இயந்திரமாக மாறி விடாமல், ஆராய்ச்சியையும் கல்வியையும் நல்ல முறையில் வளர்க்கக் கூடிய ஒரு கலைக்கூடமாக உருவாக வேண்டும்!'' என்று ராஜா முத்தையச் செட்டியார் அவர்கள் சொன்ன போது மெய்சிலிர்த்தது!

இந்தக் கருத்தை அப்படியே ஆதரித்த முதல் அமைச்சர் அண்ணா அவர்கள், இந்தக் காலத்தில் தேர்வுகளில் பட்டங்கள் பெறுவது என்பது மாறிப் போய்ப் பட்டங்கள் வாங்குவது (விலைக்கு) என்ற நிலைக்கு எப்படித் தாழ்ந்து விட்டோம் என்பதை நகைச்சுவையோடு வெளியிட்டார்! மேலும் இது போன்ற அரங்குகளில் பழம் புலவரோடு புதிய எழுத்தாளரும் நன்கு கலந்து கொள்வதற்கு வாய்ப்பு அளித்தால்தான் இந்த அரங்கு முழுமை பெறும், எதிர்காலத்தில் அவ்விதமே செய்ய வேண்டும் என்றும் தெரிவித்தார்.

உலகப் புலவர்களாகக் கூடியிருந்த பல்கலைக் கழக அரங்கிலே நயமான ஆங்கிலச் சொற்பொழிவை இவ்வாறு நிகழ்த்திய முதல் அமைச்சர் அவர்கள், அன்றிரவு

கலைக் கண்காட்சியில் கண்ணைக் கவரும் மயிலாசனம்




பூம்புகாரிலே வந்து தமது சொல்லிசையின் சுருதியை மாற்றிக் கொண்டு, பொதுமக்களுக்கு என்று ஜனரஞ்சகமான ஒரு தமிழ்க் கச்சேரியைத் ''தயங்காதே, தமிழா! மயங்காதே, தமிழா!'' என்ற பல்லவியுடன் தொடங்கினார்!

''புலவர்கள் எழுதிய கவிதைகளை இந்த மன்றத்திலே கேட்டீர்கள். என் கண் முன் தமிழ் மக்களாகிய நீங்களே கவிதையாகக் காட்சி தருகிறீர்கள். எங்களுடைய வாழ்வில் இதைவிட ஏற்றம் தரத்தக்க வேறு எந்த மாநாடும் நடந்ததில்லை என்று சொல்லும்படியாக இந்த மாநாடு நடந்திருக்கிறது!'' என்று முதல் அமைச்சர் தமது இன்னிசையில் மங்களம் பாடிய போது, புகாரை எல்லாம் தாண்டி இன்ப ஒலியை எழுப்பியது மக்கட் கடல்!

**மா**பெரும் வெற்றியாக நடந்து முடிந்த இந்த மாநாட்டையொட்டி மூன்று நூல்கள் வெளியிட்டிருக்கிறார்கள். ஒன்று, கவிதை நூல்: இளங் கவிஞர்களுக்காக நடத்திய கவிதைப் போட்டியிலே பரிசுபெற்ற பத்துக் கவிதைகளையும் தொகுத்துப் ''புகாரில் ஒரு நாள்'' என்ற தலைப்பில் வெளியிட்டிருக்கிறார்கள். அடுத்த புத்தகம் பல்கலைக் கழகத் தேர்வு மன்றத்தில் நடைபெறும் கலைக்காட்சிக்குரிய கையேடு! தமிழகத்தின் தொன்மையையும், கலைச் சிறப்புக்களையும், பழக்க வழக்கங்களையும், மரபுகளையும் சொற்களின் விரிவுகளையும் நன்கு விளக்கக்கூடிய பல கட்டுரைகளைத் தாங்குகிறது இந்தக் கையேடு! பக்கத்துக்குப் பக்கம் நண்பர் சா. கணேசன் அவர்களின் உழைப்பும் திறமையும் தெரிகின்றன.

மூன்றாவது புத்தகம் மாநாட்டு மலராகும்! நடிகர் திலகம் எம். ஜி. ஆர். தலைமையில் அமைச்சர் முத்துசாமி அவர்களின் மேற்பார்வையில் துணை அலுவலர் செல்லப்பன் அவர்களின் பெருமுயற்சியினால் மிக அருமையான முறையில் உருவாகியிருக்கிறது இந்தக் கலைப் பெட்டகம்! மலரைத் திறந்ததுமே தாமரை மலர் ஒன்று மடிப்பு மடிப்பாக எழுந்து இதழ் விரிக்கிறது. வண்ணச் சித்திரங்கள் கண்ணைப் பறிக்கின்றன. ஆங்கிலக் கட்டுரைகளும் தமிழ்க் கட்டுரைகளுமாகத் தமிழின் பெருமையை எடுத்து எடுத்து இயம்புகின்றன. அச்சும் காகிதமும் மிக மிக உயர்வு! கைக்கு ஓர் அணியாகவும், கண்ணுக்கும் மனத்துக்கும் கவினழகு தரும் வண்ணக் களஞ்சியமாகவும் திகழ்கிற இந்த மலரை, எத்தனை ரூபாய் கேட்டாலும் கொடுத்து வாங்கலாம்! இந்த வெளியீடுகளைத் தவிர, பொதுப்பணி அமைச்சர் மு. கருணாநிதி அவர்கள் சிலப்பதிகாரத்தை வசன நாடகமாக்கித் தமிழிலும் ஆங்கிலத்திலும் இரண்டு அழகிய நூல்களாக வெளியிட்டிருப்பதையும் மகிழ்ச்சியோடு வரவேற்க வேண்டும்!

இந்தத் தமிழ் மாநாட்டு நிகழ்ச்சிகளிலேயே மிகவும் பரபரப்பை உண்டாக்கிய இரண்டு பேச்சுக்களைப் பற்றி இங்கு குறிப்பிடாவிட்டால் இந்தக் கட்டுரை முழுமை பெறாது என்று கருதுகிறேன். அந்த இரண்டில் முதலாவது, பிராமி எழுத்து பற்றி



கருத்தரங்கின் இறுதி நாளன்று வெளிநாட்டுப் பிரதிநிதிகளுடன் தமிழக முதன்மந்திரி.



கல்கி காரியாலய விருந்தில் திரு எம். ஜி. ஆர். ராஜாஜிக்கு வணக்கம் செலுத்துகிறார்.

ஐராவதம் மகாதேவன் அவர்கள் ஜனவரி ஆறாந்தேதி நிகழ்த்திய ஆங்கில உரை !

தமிழ்ப் பிராமிக் கல்வெட்டுக்களை நன்கு ஆராய்ந்து அவற்றின் எழுத்துக்களைத் தமிழ் என்று புரிந்து கொள்ளும் விதத்தில் விளக்கிச் சீரிய தொண்டு செய்துள்ளவர் திரு மகாதேவன் அவர்கள். அவர் தம்முடைய ஆராய்ச்சியைக் கல்வெட்டுக்களோடு நிறுத்திக் கொண்டிருந்தால் எந்தச் சண்டையும் வந்திராது. ஆனால் அந்த இளைஞர் என்ன செய்தார்? தமிழ் — பிராமி எழுத்துக்களில் அமைந்த மிகப் பழைய கல்வெட்டு கி. மு. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்பதால் தமிழ் எழுத்தே இந்தக் காலத்திலேதான் தோன்றிற்று என்று ஒரு போடு போட்டு வைத்தார்! இதைக் கேட்டதும் பல அறிஞர்கள் மறுப்புக் குரல் எழுப்பினார்கள்; இதன் விளைவாக, நிகழ்ச்சி நிரலிலேயே இல்லாத ஒரு புதிய விவாதத்தை ஒன்பதாந்தேதி சேர்க்கும்படி ஆயிற்று. இந்த மறுப்பில் டாக்டர் கே. கே. நாயர், திரு அன்பழகன், பேராசிரியர் டி. வி. மகாலிங்கம், திரு சண்முக சுப்பிரமணியம் முதலியோர் பலமாகக் கலந்து கொண்டார்கள். திரு சண்முக சுப்பிரமணியம், வழக்கறிஞர் அல்லவா, சொன்னார்: ''ஒரு மனிதரை ஓர் அறையில் நான்கு மணிக்குப் பார்த்தேன் என்றால் நான்கு மணிக்கு முன்னாலேயே அவர் அங்கு வந்து விட்டார் என்று சொல்லலாமே தவிர, நான்கு மணிக்குத்தான் அவர் அங்கு வந்தார் என்று கூறுவது பொருந்தாது'' என்றார். இந்தச் சுவையான விவாதத்தையொட்டி ஒரு கருத்தை இங்கே குறிப்பிட விரும்புகிறேன்.

கல்வெட்டு எழுத்தும் தமிழ் நூல்களை எழுதுவதற்குக் கையாண்ட ஏட்டு எழுத்தும் ஒன்றுதான் என்று கருதிக் கல்வெட்டு ஆராய்ச்சியிலே கொண்டு போய்த் தமிழ் எழுத்து ஆராய்ச்சியைக் குழப்ப வேண்டியதில்லை! தமிழ் எழுத்துக்களைப் பற்றிக் கூறுகிற நூல் தமிழ் இலக்கணம். இதற்காகக் கல்லிலே போய் மோத வேண்டாம்! தொல்காப்பியத்தில் எழுத்ததிகாரம் என்று தனியான ஒரு பகுதி இருப்பதும், தொல்காப்பியருக்கு முன்பே பல நூறு ஆண்டுகளாக இலக்கிய நூல்கள் ஏடுகளில் எழுதிப் பாதுகாக்கப்பட்டன என்பதும், அந்தப் பழங்காலத்திலேயே நமது இலக்கிய மொழி மரபு விரிந்து பரந்து விளங்கியிருந்தது என்பதும் உண்மை !

ஆராய்ச்சி அரங்கிலே மிகுந்த பரபரப்பை உண்டாக்கிய மற்றொரு பேச்சு திரு க. சந்தானம் அவர்கள் தமிழின் எதிர்காலம் என்பது பற்றிப் படித்த ஆங்கிலக் கட்டுரையாகும்!

''சில வெறியர்கள் நாளைக்கே எல்லாத் துறைகளிலும் தமிழே போதனா மொழி என்று அரசாங்கமோ பல்கலைக் கழகமோ தீர்மானித்து அறிவிப்புச் செய்து விட்டால் உடனே தமது நோக்கம் நிறைவேறிவிடும் என்று எண்ணுகின்றனர்!'' என்று சொல்லி வைத்தார் திரு சந்தானம்! 'வெறியர்கள்' என்ற சொல்லானது தீக்குச்சியைக் கீறி வைத்ததுபோல் நெருப்பை மூட்டிவிட்டது. திரு சிவஞான கிராமணியார் அவர்கள் எழுந்து, ''வெறியர்கள்'' என்ற சொல்லைத் திரும்பப் பெற்றுக் கொண்டால் ஒழியத் தமிழை அவமதித்ததாகும் என்று மறுப்புத் தெரிவித்தார். அரங்கில் சூடு பிடித்தது. திரு ந. சஞ்சீவி, பேராசிரியர் இலக்குவனார், பேராசிரியர் பரமசிவானந்தம் முதலானோர் எழுந்தார்கள். சஞ்சீவி அவர்கள் ஒழுங்குக்

கேள்வியை எழுப்பினார். சற்று நேரம் அமைதியின்றி அவையிலே அனல் படர்ந்தது. இந்நிலையில் மீண்டும் கிராமணியார் அவர்கள் எழுந்து, ''வெறியர்கள்'' என்ற சொல்லைத் திரும்பப் பெறாவிட்டால் தாமும் தமது கருத்தை ஆதரிக்கும் தமிழர் கூட்டமும் அரங்கிலிருந்து வெளியேற நேரும் என்று அறிவித்தார். இதன் பிறகு சந்தானம் அவர்கள் தமது சொல்லைத் திரும்பப் பெறுவதாக அறிவித்துக் கிராமணியார் அவர்களின் நன்றி கலந்த வணக்கத்தையும் அவையினரின் பாராட்டையும் பெற்று அரங்கிலே அமைதியை மீட்டினார்.

தமிழ் எழுத்துக்களின் பழைய வரிவடிவம் பற்றியும், கல்லூரிகளில் தமிழைப் பயிற்சி மொழி ஆக்குவது பற்றியும் காரசாரமாக நடந்த இந்த இரண்டு விவாதங்களையும் எண்ணிப் பார்க்கும் போது, என் மன விழிகளிலே டி. கே. சி. அவர்களின் திருவுருவமே வந்து நிற்கிறது.

இந்திய நாட்டின் எழுத்துக்கள் எல்லாவற்றுக்குமே ஆதிமூலமான எழுத்து நமது தமிழ் எழுத்தாகிய வரிவடிவமே என்பதும், இந்த நாடு முழுவதும் இமயம் முதல் குமரி வரை நமது பண்பாடே பரவியிருந்த காலந்தான் நமது பழைய பொற்காலம் என்பதும் டி. கே. சி. அவர்களின் அடிப்படையான கொள்கை! தமிழைக் கல்லூரிகளில் பயிற்சி மொழியாக ஆக்குவது பற்றியோ என்றால், பல ஆண்டுகளுக்கு முன்பே போதனை மொழி பற்றி யூனிவர்ஸிடி கமிஷன் என்னும் ஆய்வுக் குழுவிசாரணைகள் நடத்திய போது, தமிழ் மொழியில் எத்தகைய நுட்பமான விஞ்ஞானக் கருத்துக்களையும் விளக்கிச் சொல்ல முடியும் என்று ஐயந்திரிபுக்கு இடமின்றித் தீர்மானமாக வெளியிட்டுச் சொன்னார்கள். அதோடு,

''Ontogeny is the recaptulation of phylogeny''

என்ற விஞ்ஞான வாக்கியத்தை எடுத்துக் கொண்டு அதைத் தமிழில் மொழிபெயர்த்துக் காட்டி, மள மள என்று விளக்கம் செய்யத் தொடங்கி, அந்த ஆய்வுக் குழுவில் இருந்த அத்தனை துரைமார்களையும், வெள்ளைத் துரைகளையும் கறுப்புத் துரைகளையும் இணற அடித்தார்கள்!

இதையெல்லாம் பற்றி இப்போது பேசிப் பயன் என்ன? தமிழ் மொழியும், தமிழ் நாட்டுக் கலைகளும், தமிழ் மக்களின் பண்பாடும் ஈடுஇணையற்றவை என்று சொல்லிச் சொல்லித் தமது மெல்லிய உடம்பிலிருந்து தமிழ் மூச்சு பிரிந்து செல்கிறவரை பொய்மையையும் அறியாமையையும் எதிர்த்துப் போராடிக் கொண்டே இருந்தார் அந்தப் பெருமகனார்! 'கல்ச்சர்' என்ற ஆங்கிலச் சொல்லுக்குப் பண்பாடு என்ற தமிழ்ச் சொல்லை முதன் முதலாக ஆக்கித் தந்து, அந்தப் பண்பாட்டையே தமது வாழ்விலும் வாழ்ந்து காட்டிய அந்த முனிவர் இன்று நம்மிடையே இல்லை. அவருடைய தமிழ்க் கொள்கைகளுக்கெல்லாம் தமது எழுத்திலும், பத்திரிகையிலும், இதயத்திலும் இடம் தந்து வீரத்தோடு போரிட்டவரும், தமிழுக்கு என்றாவது எங்காவது ஒரு இலையளவு களங்கமோ இழுக்கோ வந்தாலும் உடனே போர்க்களத்திலே குதித்துத் தமது கூரிய பேனா முனையிலே யுத்தம் செய்தவருமான கல்கி ஆசிரியர் ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களும் இன்று நம்மிடையே இல்லை. இந்த இருபெரும் தமிழ்ச் சிங்கங்களும் மறைந்துவிட்டபோதிலும், சிலைகளாவது பத்தோடு பன்னிரண்டு என்று சேர்த்து இவர்களுக்கும் இடம் தந்து பார்ப்போமே என்ற நியாய உணர்விலேதான், சதாசிவம் அவர்கள் கல்கி அலுவலகத்தில் நடைபெற்ற விருந்திலே இருபதினாயிரம் ரூபாய் நன்கொடை தருவதாகவும், இந்த இரண்டு சிலைகளையும் செய்து நிறுத்தத் தமிழக அரசு ஒப்ப வேண்டும் என்றும் கோரினார்! இந்தக் கட்டுரையை முடிப்பதற்கு அந்தக் கோரிக்கையை நினைவுகூர்வதைத் தவிர வேறு ஒன்றும் எனக்குத் தோன்றவில்லை.

வானம் அளந்தது
அனைத்தும் அளந்திடும்
வண் மொழி வாழியவே!

# குழந்தை எழுத்தாளர்!

''பெர்க்லி-கல்கி சிறுகதைப்
போட்டியில் கலந்து
கொள்ளுகிறேன்
ஸார்!''



பொருளடக்கப் பகுதியில் இடம் பெறும் குழந்தை பேபி ஸுதா. படம் எடுத்தவர் சி. எல். பூபதி. அண்ணன் மகளுடைய படத்தை அனுப்பியவர் பி. எஸ். ராமமூர்த்தி. பரிசு ரூ. 20.



# மகாபாரதம்

**ராஜாஜி**

## 5. தேவயானியும் கசனும்

முன்னொரு காலத்தில் மூன்று உலகங்களையும் ஆள வேண்டும் என்று தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் பெரிய போட்டி நடந்தது. தேவர்களுக்குப் புரோகிதர் பிரகஸ்பதி; அவர் வேத மந்திரங்களில் தேர்ச்சி பெற்றவர். அசுரர்களுக்குப் புரோகிதர் அறிவுக் கடலான சுக்ராசாரியார். இந்த இரண்டு பிராமணர்களின் பக்க பலத்தைக் கொண்டு தேவாசுர யுத்தம் நடந்து வந்தது.

யுத்தத்தில் வீழ்த்தப்பட்ட அசுரர்களையெல்லாம் சுக்ராசாரியார் தம் சஞ்சீவினி வித்தையைக் கொண்டு மறுபடியும் பிழைப்பித்து வந்தார். இறந்த அசுரர்கள் திரும்பவும் திரும்பவும் எழுந்து வந்து தேவர்களுடன் போர் செய்வார்கள். இந்த யுத்த வைத்திய ஏற்பாடு தேவர்களின் கட்சியில் இல்லை. சுக்ராசாரியார் பிரயோகித்த சஞ்சீவினி வைத்தியம் பிரகஸ்பதிக்குத் தெரியாது. இது தேவர்களுக்கும் பெரும் துயரத்தை உண்டாக்கிற்று.

தேவர்கள் ஒன்று கூடி, பிரகஸ்பதியின் குமாரன் கசன் என்பவனிடம் சென்று, ''நீ எங்களுக்கு ஒரு உபகாரம் செய்ய வேண்டும். நீ இளம் பிராயமுள்ளவனாகவும் கண்ணைக் கவரும்படியான அழகு பெற்றவனாகவும் இருக்கிறாய். நீ சுக்கிராசாரியாரிடம் பிரம்மச்சாரியாகச் சேர்ந்து அவருக்குப் பணிவிடை செய்து அவருடைய நம்பிக்கையையும் அவர் மகளின் அன்பையும் பெற்று அவருடைய சஞ்சீவினி வித்தையை எப்படியாவது கற்றுக் கொண்டு வரவேண்டும்'' என்று வேண்டிக்கொண்டார்கள்.

கசன் இதற்கு ஒப்புக் கொண்டு சுக்ராசாரியாரிடம் போனான். அசுர ராஜாவான விருஷபர்வனுடைய நகரத்தில் சுக்ராசாரியார் வசித்து வந்தார். அவருடைய வீட்டுக்குப் போய், கசன் அவரை வணங்கி, ''அங்கிரஸ் ரிஷியின் பேரன் நான். பிரகஸ்பதியின் புத்திரன். கசன் என்பது என் பெயர். என்னைச் சிஷ்யனாக ஏற்றுக் கொள்வீராக. நான் தங்கள் கீழ், பூரண பிரம்மச்சரியத்தைச் செய்வேன்'' என்று வேண்டிக் கொண்டான். தகுந்த சீடன் ஆசாரியனிடம் பிரமசாரியாக எடுத்துக்கொள்ளக் கேட்டால் அறிவுபெற்ற ஆசாரியன் மறுக்கக் கூடாது. ''கசனே! நீ நல்ல குலத்தவன். உன்னை நான் அங்கீகரிப்பேன். இதனால் பிரகஸ்பதியும் கௌரவிக்கப்பட்டவர் ஆவார்'' என்று சுக்ராசாரியார் கசனைத் தம் சிஷ்யனாக ஏற்றுக் கொண்டார்.

கசனும் அநேக வருஷங்கள் சுக்ராசாரியாருக்கும் அவர் மகள் தேவயானிக்கும் ஒரு குறைவும் குற்றமும் இன்றிப் பணிவிடை செய்து வந்தான். சுக்ராசாரியாருக்குத் தன் மகள் தேவயானியிடம் மிகவும் பிரியம். கசன் பாடியும் ஆடியும் வாத்தியம் வாசித்தும் அவள் சொன்ன ஏவல் செய்தும் தேவயானியைச் சந்தோஷப்படுத்தி வந்தான். தேவயானியும் கசனிடம் பிரியம் காட்டி வந்தாள். ஆனால், பிரம்மசரிய விரதத்தைத் தவறாமல் கசன் காத்து வந்தான்.

அசுரர்களுக்குக் கசன் சுக்ராசாரியாரிடம் சீடனாக அமைந்திருப்பது தெரிந்தது. பிரகஸ்பதியின் மகன் எப்படியாவது சுக்ராசாரியாரிடம் சஞ்சீவினி வித்தையை அபகரித்துக் கொண்டு போய் விடுவான் என்பது அவர்களுடைய கவலை. ஒரு நாள் வனத்தில் குருவின் பசுக்களை மேய்த்துக் கொண்டிருந்தபோது அவனைப் பிடித்துக் கொன்று துண்டு துண்டாகச் செய்து நாய்களுக்கு இரையாகப் போட்டு விட்டார்கள். பசுக்கள் தாமாகக் கொட்டிலுக்குத் திரும்பி வந்தன.

கசன் வரவில்லை. இதைப் பார்த்துத் தேவயானி சந்தேகபபட்டாள்.

''பிரபுவே! சூரியன் அஸ்தமித்து விட்டான். உம்முடைய அக்கினி ஹோத்திரமும் முடிந்தது. இன்னும் கசன் வீடு வந்து சேரவில்லை. பசுக்கள் தாமாகத் திரும்பி வந்துவிட்டன. அவனுக்கு ஏதோ ஆபத்து நேர்ந்திருகக வேண்டும். அவனில்லாமல் நான் பிழைத்திருக்க முடியாது'' என்று தகப்பனாரிடம் தேவயானி அழுதாள்.

மகளிடத்தில் மிகுந்த அன்புகொண்ட சுக்ராசாரியார் சஞ்சீவினி வித்தையைப் பிரயோகித்து, இறந்து போனவனை ''வா!'' என்று அழைத்தார். இவ்வாறு அழைக்கப்பட்ட கசன் நாய்களுடைய உடல்களைப் பிளர்துகொண்டு வெளிப்பட்டு சந்தோஷ முகத்துடன் எதிரே வந்து நின்றான். ''என்ன நடந்தது? ஏன் தாமதம் செய்தாய்?'' என்று தேவயானி கேட்க, கசன் ''காட்டில் பசு மேய்த்து விட்டு விறகுச் சுமையை எடுத்துக் கொண்டு வரும் போது களைப்புற்று ஓர் ஆலமரத்தடியில் உட்கார்ந்தேன். பசுக்களும் ஒன்று கூடி மரத்து நிழலில் நின்றன. அசுரர்கள் வந்து என்னை நீ யார் என்று கேட்டார்கள். நான் பிரகஸ்பதியின் புத்திரன் என்றேன். உடனே அவர்கள் என்னை வெட்டிக் கொன்றுவிட்டார்கள். எப்படியோ மறுபடி உயிருள்ளவனாகி, நாய்களின் உடலினின்று வர்து உம் சமீபம் நிற்கிறேன்'' என்றான்.

மற்றொரு நாள் கசன் தேவயானிக்காகப் பூப்பறிக்க வனம் சென்றான். அசுரர்கள் அவனை அங்கே பிடித்துக் கொன்று அவன் தேகத்தை அரைத்துச் சமுத்திர ஜலத்தில் கரைத்து விட்டார்கள். அவன் போய் வெகு நேரமாகியும் வீட்டுக்குத் திரும்பி வராததைக் கண்டு தேவயானி தகப்பனாரிடம் சொன்னாள்.

முன்போலவே சஞ்சீவினியைப் பிரயோகித்தார். கசன் கடலினின்றும் உயிருடன் வெளிப்பட்டு வந்து நடந்த செய்தியைச் சொன்னான்.

அசுரர்கள் கசனை விட்டபாடில்லை. மூன்றாவது தடவையும் இவ்வாறே மறுபடியும் கொல்லப்பட்டான். அசுரர்கள் இந்தச் சமயம் அவன் உடலைச் சுட்டுச் சாம்பலாக்கி, சாம்பலை மது பானத்தில் சேர்த்துச் சுக்கிராசாரியாருக்கே கொடுத்தார்கள். அவர் கசனுடைய உடலைச் சுட்டுக் கரைக்கப் பட்டிருந்த பானத்தைக் குடித்துவிட்டார். பசுக்கள் மேய்ப்பவனில்லாமல் தாமாக வீட்டுக்குத் திரும்பி வந்தன. தேவயானி தகப்பனாரிடம் ''கசன் வரவில்லை. அவன் கொல்லப்பட்டவன் தான். அவனின்றி நான் ஜீவித்திருக்க முடியாது'' என்றாள்.

''நான் எத்தனை தடவை பிழைப்பு மூட்டினாலும் அவனை அசுரர்கள் கொல்லவே தீர்மானித்திருக்கிறார்கள். அறிவு படைத்த நீ எந்தக் காரணத்தினால் ஒருவன் மரணமடைந்தாலும் அதைப் பற்றித் துக்கப்படுவது சரியல்ல. நீ ஏன் வருத்தப்படுகிறாய்? உலகமே உன்னை வணங்குகிறது. நீ விசனப்பட வேண்டாம்!'' என்று சுக்ராசாரியார் பெண்ணுக்குச் சமாதானம் சொன்னார்.

கசனிடம் மிகுந்த அன்பைக் கொண்ட தேவயானி சமாதானம் அடையவில்லை. ''இவன் அங்கிரஸ் ரிஷியின் பேரன். பிரகஸ்பதியின் புத்திரன். பிரமச்சாரி. தவமே தனமாக உடையவன். முயற்சியுள்ளவன். வேலைகளில் நிபுணன். அவன் கொல்லப்பட்



டான். அவனின்றி நான் பிழைக்க முடியாது. அவன் போன வழியை நானும் அடைவேன்'' என்று சொல்லி உபவாசம் பூண்டாள்.

சுக்ராசாரியார் அசுரர்கள் மீது கோபம் கொண்டார். இவ்வாறு பிரம்மஹத்தி செய்யும் இந்த அசுரர்களுக்கு நன்மை உண்டாகாது என்று முடிவுக்கு வந்தார். சஞ்சீவினி மந்திரத்தைச் சொல்லிக் கசனை வா என்று அழைத்தார். மந்திரத்தின் பலத்தால் பிரக்ஞையை அடைந்த கசன், ''பகவானே, என்னை அனுக்கிரகிப்பீராக!'' என்று குருவின் வயிற்றுக்குள்ளிருந்து சொன்னான். இதைக் கேட்ட சுக்ராசாரியார் வியப்படைந்து, ''பிரம்மசாரியே! எப்படி என் வயிற்றுக்குள் நீ வந்திருக்கிறாய்? இது அசுரர்களின் காரியமா? இந்த நிமிஷத்தில் அசுரர்களை அழித்து விட்டு நான் தேவர்களிடம் போவேன். சொல்!'' என்று கோபமாகக் கேட்டார். கசன், வயிற்றுக்குள் இருந்து கொண்டே நடந்த விஷயத்தைச் சொன்னான்.

வைசம்பாயனர் சொல்கிறார்: மகானுபாவரும் தவப் புதல்வரும் அளவிறந்த மகிமையுள்ளவருமான சுக்ராசாரியார் மதுபானத்தினால் தாம் இவ்வாறு அடைந்த ஏமாற்றத்தை எண்ணிக் கோபத்துடன் எழுந்து அடியில் கண்ட வாக்கியத்தை மக்கள் நன்மைக்காக வெளியிட்டார்:

''எவன் அறிவின்மையால் மது பானம் செய்கிறானோ அவனைத் தருமமும் உடனே விட்டு விலகும்; எல்லோராலும் இகழப்படுவான்; இது என்னுடைய முடிவு. இதை இன்று முதல் ஜனங்கள் சாஸ்திரமாக வைத்துக்கொண்டு நடக்க வேண்டும்.''

பிறகு சுக்ராசாரியார் தேவயானியைப் பார்த்து, ''பெண்ணே! இப்போது நீ எதைப் பிரியப்படுகிறாய்? கசன் உயிருடன் வரவேண்டுமானால் என் வயிற்றைப் பிளந்து கொண்டு தான் அவன் வெளியே வர வேண்டும். நான் இறந்தால்தான் கசனுக்கு உயிருண்டாகும்'' என்றார்.

''ஐயோ! கசன் இல்லாவிட்டால் என்னைத் துக்கம் நெருப்பாக எரித்து விடும். நீர் இறந்து போனாலோ நான் பிழைத்திருக்கவே முடியாது. இரண்டு விதத்திலும் நான் இறந்து போவேன்'' என்று தேவயானி அழுதாள்.



இப்பொழுது சுக்கிரருக்கு விஷயம் புரிந்து விட்டது. ''பிரகஸ்பதி புத்திரனே! நீ காரியசித்தி யடைந்தாய். தேவயானிக்காக நான் உன்னை உயிருடன் வெளிவரச் செய்ய வேண்டும். நானும் இறந்து போகாமலிருக்கவேண்டும். இதற்கு ஒரே வழிதான். சஞ்சீவினி வித்தையை உனக்கு நான் உபதேசம் செய்கிறேன். நீ என் வயிற்றிலிருந்துகொண்டே உபதேசம் பெற்று அதைத் தெரிந்துகொண்ட பின் என் வயிற்றைப் பிளந்து வெளியே வா! நான் இறந்து போவேன். பிறகு நீ கற்ற வித்தையைக்கொண்டு என்னைப் பிழைப்பித்துத் தேவயானியின் துக்கத்தைத் தீர்த்து விடுவாயாக'' என்று சொல்லிக் கசனுக்குச் சஞ்சீவினி வித்தையை உபதேசித்தார். அதன் மேல் கசன் பூரண சந்திரனைப் போல் சுக்ராசாரியாருடைய வயிற்றைக் கிழித்துக்கொண்டு வெளி வந்தான். அறிவே உருவங் கொண்ட சுக்கிரர் வயிறு கிழிந்து இறந்து கீழே விழுந்தார்.

கசன் உடனே தான் கற்ற சஞ்சீவினி வித்தையைக் கொண்டு சுக்கிராசாரியாருக்கு மறுபடியும் உயிர் தந்து தேவயானியை மகிழ்ச்சி பெறச் செய்தான். ''வித்தை இல்லாதவனுக்கு வித்தையைத் தந்த ஆசாரியார், தந்தை ஆவார். அதுவேயன்றி நான் உம்முடைய வயிற்றிலிருந்து சிசுவாகவே பிறந்திருக்கிறேன். நீர் எனக்குத் தாயும் ஆவீர்!'' என்று சொல்லிச் சுக்ராசாரியைக் கசன் நமஸ்கரித்தான்.

பிறகு பல வருஷங்கள் கசன் சுக்ராசாரியாரிடம் படித்து வந்தான். விரதம் முடிந்து ஸ்நானம் செய்த பிறகு குருவினால் விடை கொடுக்கப்பட்டு, தேவலோகம் போகப் புறப்படும்போது, தேவயானி கசனைப் பார்த்து, ''அங்கிரஸ பௌத்ரனே! நீ ஒழுக்கத்தினாலும் குலத்தினாலும் கல்வியினாலும் இந்திரியங்களை அடக்கிய தவத்தினாலும் ஒளி பெற்று விளங்குகிறாய். நீ பிரம்மசரிய நியமம் தவறாதிருந்த காலத்தில் நான் எப்படி உன்னிடம் அன்புடன் நடந்துகொண்டேனோ அப்படியே இப்போது என்னிடம் நீ அன்பு காட்ட வேண்டும். பிரகஸ்பதி என்னால் பூஜிக்கத் தக்கவர். அவ்வாறே நீயும், என்னை சாஸ்திரப்படி பாணிக்கிரஹணம் செய்து கொள்வாயாக!'' என்று கூறி வணங்கி நின்றாள்.

அந்தக் காலத்தில் அறிவும் சிட்சையும் பெற்ற பிராமண ஸ்திரீகள் தைரியமாகத்தான் பேசுவார்கள். இதற்கு அநேக உதாரணங்கள் உண்டு. தேவயானி சொன்னதைக் கேட்ட கசன், ''குற்றமற்றவளே! குரு புத்திரியாகிய நீ தருமத்தின்படி எப்போதும் என்னால் பூஜிக்கத் தக்கவள். நான் உன் தகப்பனார் சுக்ரர் வயிற்றிலிருந்து பிறந்து உயிர்பெற்றவன். அதனால் நான் உனக்குச் சகோதரன் ஆகிவிட்டேன். சகோதரியாகிய நீ என்னை இவ்வாறு வேண்டலாகாது'' என்றான்.

''நீ பிரகஸ்பதியின் புத்திரன். என் பிதாவின் புத்திரனல்ல. சிநேகத்தினாலும் காதலினாலும் பல தடவை உயிரிழந்த உன்னை நான் பிழைக்கச் செய்தேன். பற்றுள்ளவளும், குற்றமில்லாதவளுமான என்னை நீ கைவிடலாகாது!'' என்று தேவயானி பலமுறை வேண்டிக் கொண்டாள்.

''ஏவத் தகாத காரியத்தில் நீ என்னை ஏவ வேண்டாம். அழகிய புருவங்களைக் கொண்டவளே, விசாலாட்சி! கோபமுள்ளவளே! உனக்கு நான் சகோதரன். எனக்குச் சுபம் சொல்லி அனுப்பிக் கொடுப்பாயாக தவறுதலின்றி என் ஆசாரியர் சுக்ரருக்கு எப்போதும் பணிவிடை செய்யக் கடவாய்'' என்று கசன் தேவயானியின் வேண்டுகோளை மறுத்து விட்டு இந்திர லோகம் சென்றான்.

சுக்ராசாரியார் மகளைச் சமாதானப் படுத்தினர். (தொடரும்)

# சக்திக்கும் வலிமைக்கும் போர்ன்விடா!

சக்தியளிக்கும் போர்ன்விடா நாவினிமையிலே சிறந்ததோர் பானமாக விளங்குவதன் ரகசியம்—செழுமையான கோகோ!






வளமையின் சிறந்த பொருள்களான கோகோ, மால்ட் சர்க்கரை, பால் இவையாவும் திட்டமாக கலக்கப் பெற்று தயாரிக்கப்பட்டதன் பலன்—தென்பும் திடமும் தரும் ஒரு தீஞ்சுவை பானம் போர்ன்விடா. சூடான பாலிலே போர்ன் விடா கலந்து ஒரு கோப்பை அருந்துங்கள்...நாவுக்குத் தான் என்ன இனிமை, உடம்புக்குத்தான் என்ன வலிமை.

சக்திக்கும் வலிமைக்கும்—மற்றும் தீஞ்சுவைக்கும்

**காட்பரீஸ் போர்ன்விடா**

2296 A TM

சிக்கந்திராபாத் நகரையும் ஹைதராபாத் நகரையும் இணைக்கும் பொறுப்பில் பெரும் பகுதியை 'ஹுஸைன் சாகர்' என்ற பிரும்மாண்டமான ஏரிக்கரை எடுத்துக்கொள்கிறது. அந்த ஏரிக் கரையை ஒட்டிச் செல்லும் ரஸ்தாவில் போகும் போது சென்னை மரீனாவிலேயோ பம்பாய் சௌபாத்திக் கடற்கரையிலோ போகும் உணர்ச்சி ஓரளவு தோன்றுகிறது.

''இந்த இடத்தை நள்ளிரவின் அமைதியில் மின்சார விளக்குகளின் வரிசையான ஒளி வீச்சில், ரசிக்க வேண்டும்'' என்று நினைத்துக் கொள்கிறேன். என் எண்ணம் எப்படியோ என்னை யறியாமல் ஒலி பெற்று விடுகிறது.

''பேஷாய்ச் செய்யலாம்! இன்று இரவு மீண்டும் இதே வழியில் போகலாம்'' என்கிறார் கூட வந்த அன்பர்.

''நாற்பத்தி ஐந்து'' என்று அழுத்தமாகச் சொல்கிறான். அந்த ரக கிரஷ் எங்கும் முப்பது பைசாதான். அவன் கையிலிருக்கும் மற்றொரு ரகத்தைக் காட்டி அதன் விலையைக் கேட்கிறேன். ''முப்பது'' என்ற பதில் டாண் என்று வருகிறது. ''இந்த இரண்டு ரகமுமே ஒரே விலைதானே? முப்பது பைசா தான் தருவேன்'' என்ற என்னுடைய வாதத்துக்கு, ''நீங்க அதையே சாப்பிட்டிருக்கலாமே! நீங்கள் குடித்தது நாற்பத்தி ஐந்து தான்!'' என்று வீராவேசமான பதில் கிடைக்கிறது.

சில நிமிஷங்களில் விஷயம் புரிந்துவிடுகிறது. யார் எந்த ரகத்தை விரும்பி எடுத்துக் குடித்தாலும் அதைக் குடித்த பிறகு அதன் விலை நாற்பத்தி ஐந்து பைசாதான் என்று சாதிக்கிறார்கள் அந்தச் சிறுவர்கள்.



# கோல் கொண்டா கோட்டை இந்தா

பட்டினத்தார்

கோல்கொண்டா கோட்டைக்குள் கார் நுழைகிறது. கோட்டைக்குள்ளே ஒரு சிற்றூர். அந்த ஊருக்கு நடுவில் மற்றொரு குன்றும் கோட்டையும்.

இரண்டாவது கோட்டை வாசலை நெருங்கும் போது நம்மை ஒரு சிறுவர் பட்டாளமே சூழ்ந்து விடுகிறது. அந்தச் சிறுவர்களில் ஒவ்வொருவன் கையிலும் இரண்டு மூன்று சோடா கலர் பாட்டில்கள் இருப்பதைக் காண முடிகிறது. எல்லாம் வெவ்வேறு ரகங்கள்.

ஒவ்வொரு சிறுவனும் தன் சரக்கைத் தள்ளிவிட ஊக்கம் காட்டும்போது அங்கு ஒரு கலவரமே நடப்பது போன்ற பிரமை. ஓர் ஆரஞ்சு கிரஷை வாங்கி அருந்திவிட்டு, ''எத்தனை பைசா ?'' என்கிறேன்.

'மின்சாரம் ஜாக்கிரதை' 'நாய்கள் ஜாக்கிரதை' என்ற அறிவிப்புகள்போல் 'சோடா கலர் ஜாக்கிரதை' என்ற அறிவிப்பு கோல் கொண்டா உள்கோட்டை வாசலில் அவசியம் என்றே தோன்றுகிறது.

கோட்டை வாசலின் பிரதான முரட்டுக் கதவை எதிரிகளின் யானைகள் முட்டித் திறக்க முயன்றால் அவைகளின் தலைகளில் கதவின் மேலே இருக்கும் மதிற்சுவரின் விளிம்பிலுள்ள பெரிய துவாரம் வழியாகக் கொதிக்கும் எண்ணெயை அண்டா அண்டாவாகக் கொட்டி அந்த யானைகளை விரட்டுவார்களாம்.

லிட்டர் கணக்கில் சொட்டுச் சொட்டாகப் பணத்தைக் கொட்டிக் கொடுத்து எண்ணெய் வாங்கும் இந்தக் காலத்தில்,



யானைகள் தலை நனைய எண்ணெயைக் கொட்டினார்கள் என்றால் எண்ணெய் அன்று எத்தனை மலிவாக இருந்திருக்க வேண்டும் என்ற பொருளாதாரப் பாதையில் சிந்தனை ஓடுகிறது.

யானைகளின் உதவி இல்லாமலே இப்போது யாரும் உள்ளே நுழையலாம். கதவுகள் திறந்திருக்கின்றன. அந்த வாசலுக்கு நேராக உள்ள ஒரு மண்டபத்தில் பலர் நின்று கொண்டு தங்கள் கைகளைத் தட்டிக் கொண்டிருக்கிறார்கள். ஏதாவது ஆந்திர நாட்டுக் கிராமிய இசையைத்தான் கும்மியடித்துப் பயிலுகிறார்களோ என்று நினைக்கிறேன். ஆனால் கூட வந்த நண்பர் சட்டென்று விளக்கம் கொடுக்கிறார். அந்த மண்டபம் எதிரொலி மண்டபமாம். அந்த மண்டபத்தின் நடுவே அடையாளம் செய்யப் பட்டிருக்கும் கல்லில் நின்று கரங்களைத் தட்டினாலோ, இரைந்து கூவினாலோ அந்த ஒலி சில நிமிட காலம் பலமான எதிரொலியாக மாறிப் பரவுகிறது.

நானும் கரங்களைத் தட்டுகிறேன். வலிக்கு மளவு திரும்பத் திரும்பத் தட்டுகிறேன். நம் குரலை டேப் ரிக்கார்டர்களில் கேட்கும் ஆனந்தத்துக்கு ஈடாக நம் கைத்தட்டல் ஒலியும் நம் செவிகளில் இன்பம் பாய்ச்சுகிறதே !

எந்தச் சூழ்நிலையிலும் தெருவில் போவோரின் கவனத்தைக் கைதட்டிக் கூப்பிடுவதோ நிறுத்துவதோ பண்புக் குறைவு என்று நினைப்பவர்கள்கூட இந்த மண்டபத்தில் நின்றால் தங்களை மறந்து கைதட்டுகிறார்கள்!

ஒரு வழியாகக் கோல்கொண்டாவை முடித்துக் கொண்டு பல மைல்களுக்கப்பால் ஹைதராபாத் நகரின் நடுவிலிருக்கும் சார்மினாரை நெருங்குகிறோம். இஸ்லாமியப் பாணியில் நான்கு மூலைகளிலும் உயர்ந்து நிற்கும் ஸ்தூபிகளைக் கொண்ட பிரும்மாண்ட மண்டபம் இது. இதன் உயரே ஏறி நகரைப் 'பறவைப் பார்வை'யில் பார்க்கப் பலர் ஆசைப் பட்டுக் கால் கடுக்க ஏறுகிறார்கள். அந்தப் பார்வையை நான் கற்பனையிலேயே வைத்துக் கொள்ள விரும்பித் தரை மட்டத்திலேயே 'சார்மினாரை' ஒரு சுற்றுச் சுற்றி வருகிறேன்.

'நைசாம் மாளிகையிலிருந்து கோபித்துக் கொண்டு கிளம்பிய மகாலட்சுமி இந்தச் சார்மினார் ஸ்தூபிகளில் ஒன்றில்தான் இன்னமும் தங்கியிருக்கிறாளாம்' என்று கர்ண பரம்பரைக் கதை ஒன்றை ஆரம்பிக்கிறார் நண்பர்.

சார்மினாரைச் சுற்றியுள்ள சூழ்நிலையைக் கவனிக்கும்போது அந்தக் கதையிலும் உண்மை இருக்கும் போல் தான் தோன்றுகிறது. எத்தனை வெள்ளிச் சாமான் கடைகள்? எத்தனை வியாபாரத் துணிக் கடைகள்? செல்





(மேலே) ஹைதராபாத்தில் சாலர்ஜங் பொருட்காட்சிசாலை

ஹைதராபாத்திலுள்ள சார்மினார்

< ஹைதராபாத் உஸ்மானியா சர்வகலாசாலை

வம் கொழிக்கும் இடமாகவல்லவா இது இருக்கிறது !

ஹைதராபாத் சிக்கந்தராபாத் கடைத் தெருக்களில் பம்பாய் மணம் வீசுகிறது. நாகரிகமான வாசஸ்தலங்களும் தெருக்களும் நிறைந்த பகுதியில் பங்களூர் வாடை வீசுகிறது. இதனால், தொண்டையார்ப்பேட்டை, கொசப்பேட்டை போன்ற பகுதிகளே இல்லை என்று சொல்லிவிட முடியாது. நடுத்தர வகுப்பினர் குழுமியிருக்கும் பகுதிகளில் சென்னை வாசனையையும் காணலாம்.

உஸ்மானியா சர்வகலாசாலைக்குச் சமீபத்தில் புதிய கட்டடம் எழுப்பியிருக்கிறார்கள். பார்க்க வேண்டிய அமைப்பு. ஹைதராபாத் நகரிலுள்ள பழங்கால மாடமாளிகைகளுக்கு இணையாக இந்தக் கட்டடம் எழுந்திருக்கிறது.

'காசிக்குப் போய்க் கங்கையைப் பார்க்காமல் வந்தாலும் வரலாம். ஹைதராபாத்துக்கு வந்து 'சாலர்ஜங் மியூஸியம்' பார்க்காமல் போகக் கூடாது' என்கிறார் உள்ளூர் நண்பர்.

சுமார் ஐம்பது அறைகளிலே நான்கு கோடி ரூபாய் மதிப்புள்ள அபூர்வப் பொருள்களைச் சேர்த்து வைத்திருக்கும் அந்த மகானுபாவனை நினைத்துப் பார்க்கும்போது மனம் பெருமிதம் அடைகிறது.

சென்ற நூற்றாண்டைச் சேர்ந்த சில சீனப் பொம்மைகளைப் பார்க்கும் போது அந்தப் பொம்மைகளின் முக பாவங்களிலிருந்தே அந்த மக்கள் மகிழ்ச்சியுடன் இருந்திருக்கிறார்கள் என்று ஊகிக்கிறேன். இப்போது அந்த உணர்ச்சி பொம்மைகளிடம் மாத்திரம் தங்கியிருக்கின்றதோ என்னவோ?

''இதுதான் நூர்ஜஹான் பழம் நறுக்க உபயோகித்த கத்தி'' என்கிறார் நண்பர். அதன் பக்கத்திலேயே ஷாஜஹானின் கட்டாரியும் இருக்கிறது.

'வெயில்ட் ரெபெக்கா' (Veiled Rebecca) என்ற வெண் பளிங்குச் சிலை என்னைப் பிரமிக்க வைக்கிறது. அந்தப் பெண்மணியின் மேல் போர்வை வழியாக அவள் உடல் அழகு தெரியும்படியாகப் பளிங்கையே டிரேசிங் பேப்பர் போல் போர்வையாக மடித்து மடித்துச் செதுக்கி யிருக்கிறார் அந்தச் சிற்பி.

'மெபிஸ்டாக்லிஸ்' (Mephistocles) என்ற வெண்கலச் சிலை ஒன்று. பக்கவாட்டில் இரு பக்கத்திலும், பின்புறமும் பெரிய நிலைக்கண்ணாடிகளை வைத்திருக்கிறார்கள். முன்பக்கம் தாடி உள்ள ஆண் மகனாகப் பார்வையளிக்கும் அந்தச் சிற்பத்தின் பின்பகுதியின் அமைப்பு மோடி செய்யும் பெண்மணியாக. பக்கவாட்டுக் கண்ணாடிகளில் இரண்டு வகைப் பெண் உருவங்கள் பிரதிபலிக்கின்றன. சிலை ஒன்று. தோற்றம் நான்கு.

''இந்தக் கடிகாரத்தில் மணி ஓசை கிளம்புவதை நீங்கள் அவசியம் கவனிக்க வேண்டும்'' என்கிறார் கூட வந்த நண்பர். பல மணி நேரம் உள்ளே சுற்றிச் சுற்றி வந்து வெளியே வரலாம் என்ற கட்டடத்தில் இது ஒன்று பாக்கியா என்று தோன்றுகிறது.

அது ஒரு புராதன கால கடிகாரம். சாதாரணத் தோற்றம். மேல் பகுதியில் ஒரு பக்கத்தில் ஒரு பொம்மை வீடும், நடுவில் ஒரு பொம்மைக் கோவில் மணியும் இருக்கின்றன. மறுபக்கத்தில் ஒரு பொம்மை, விநாடி ஓட்டத்தைக் குறிக்கும் வகையில் சம்மட்டியால் விட்டு விட்டு அடித்துக் கொண்டிருக்கிறது.

ஒவ்வொரு மணி நேரத்திலும், பெரிய முள் பன்னிரண்டை நெருங்கும்போது, அந்தப் பொம்மை வீட்டின் கதவு படீரென்று திறந்து கொள்கிறது. அதற்குள்ளிருந்து கையில் ஓர் இரும்புக் கம்பியுடன் வெளியே வரும் மனிதப் பொம்மை, முன்னால் தொங்கும் மணியை அந்தக் கம்பியால் தட்டிவிட்டு மீண்டும் உள்ளே போய்விடும். கதவும் மூடிக்கொண்டு விடும். மணி ஓசையும் பரவும்.

இந்தக் காட்சியை மீண்டும் காண அறுபது நிமிட காலம் காத்திருக்க வேண்டும்.

இரண்டு நிமிடங்கள் மூன்று நிமிடங்கள் பிந்தி வந்தவர்கள்கூட இந்தப் பொம்மை விளையாட்டைப் பார்க்க, ஐம்பத்தி எட்டு, ஐம்பத்தி ஏழு நிமிடங்கள் காத்திருக்கத் தயாராகி, அந்தக் கடிகாரத்தின் முன்னால் போடப்பட்டிருக்கும் வரிசைப் பெஞ்சுகளில் இடம் பிடிக்கிறார்கள்.

முதியவர்களும் குழந்தைகளாகப் பரிணமிக்கும் அதிசயம் இங்கே நிகழ்கிறதோ என்று நினைக்கிறேன்.

நுழைவுக் கட்டணமாக நூற்றி ஐம்பது பைசாக்கள் வசூலிப்பது அதிகம் என்ற நினைப்பு நுழையும் கட்டத்தில் ஏற்பட்டாலும், விடைபெறும் கட்டத்தில், பிரமிப்பின் எதிரொலி அந்தப் பூர்வாங்க நினைப்பைப் பூரணமாகவே விரட்டி விடுகிறது!

''இதுதான் 'ரவீந்திர சதன்'. இங்கு அநேகமாக ஒவ்வொரு நாளும் ஏதாவது நிகழ்ச்சி - நாடகமோ, நாட்டியமோ, இசைக் கச்சேரியோ நடக்கும்'' என்று விளக்குகிறார்.

நல்ல முறையில் கவர்ச்சிகரமாக அமைக்கப்பட்ட அரங்கம். அரங்க மேடையில் ஒரு சர்க்கஸ் கோஷ்டியே முகாமிடலாம். அத்தனை பெரிது.

சென்னை திரும்ப ரயிலில் ஏறி அமர்ந்த பிறகு, வீட்டில் குழந்தைகள் வாங்கி வரச் சொன்னதில் எவைகளையெல்லாம் வாங்கினோம் என்று மானசீகமாக 'லிஸ்ட்' போடுகிறேன்.

ஹைதராபாத்தில் இனிப்புப் பட்சணங்கள் பிரசித்தம் என்று அவர்கள் கேள்விப்பட்டிருக்க வேண்டும் ! அதனால்தான் அவர்கள் அழுத்திச் சொல்லியிருந்தார்கள்.

நான் ஸ்வீட்ஸ் வாங்கியது நினைவுக்கு வருகிறது. அவசரம் அவசரமாகச் சூட்கேசைத் திறக்கிறேன். ஸ்வீட் அட்டைப் பெட்டி கண்களுக்குப் படுகிறது. அதையும் திறக்கிறேன்.

பகீரென்கிறது. பெட்டி காலி. முதல் நாளிரவு சாம்பிள் பார்க்க ஒரு துண்டை வாயில் போட்டுக் கொண்ட நான் என்னை அறியாமலேயே அத்தனையையும் காலி செய்திருக்கிறேன். காலிப் பெட்டி பத்திரமாக இருக்கிறது. இனிப்புப் பட்சணங்கள் பிரமாதம் !

ரயில் ஓடிக் கொண்டேயிருக்கிறது.

ஹைதராபாத் ஓர் இனிய நகர் என்ற நினைப்புத் தோன்றுகிறது.

# அமெரிக்கா அனுப்பும் கலைஞர்கள்



இசை விழா ஆயிற்று; தமிழ் விழாவும் ஆயிற்று. 'அப்பாடா' என்று பெருமூச்சு விடுகிற சமயத்தில் இதோ, 'அமெரிக்க மேடைக் கலை விழா' வந்து விட்டது!

தமிழகத்தின் தலைநகரிலே பிப்ரவரி 3, 4, 5, 6 ஆகிய நான்கு நாட்களில் அமெரிக்க மேடைக் கலை விழா நடைபெற விருக்கிறது.

இவ்விழாவில் இடம் பெற்றுள்ளவை மூன்று: நடனம், நரம்பு இசை, பாட்டு.

வாய்ப்பாட்டும் நரம்பு இசையும் சென்னை அண்ணாமலை



மன்றத்திலும் நடன விருந்து மயிலாப்பூர் மியூஸிக் அகாடமி மன்றத்திலும் நடக்கும்.



**மேலே:** நாடோடிப் பாடல்களைப் பாடுவதில் பெரும் புகழ் பெற்ற கலைக் குடும்பம் — விவிலிய நூலில் கூறப்பட்டுள்ள ஸால்ட்டரி என்ற மிகத் தொன்மையான இசைக் கருவியை உலகில் இன்று கையாண்டுவரும் மிகச் சிலரில் ஒருவர் இக்குடும்பத் தலைவர்.

**வலதுபுறம்:** நடனக் குழுவினர் எண்மரில் இவர் பெண்கள்.

நரம்பு இசைக் கலைஞர்கள் — வயலின் — வயோலா — ஸெல்லோ ஆகிய வாத்தியங்களை வாசிப்பதில் நிபுணர்கள்.

சிற்ப மேதை ஒருவரைப் பற்றிய சுவையான கதை இது. பிரபல இத்தாலிய நாட்டு சிற்பியான மைக்கேலாங்கலோவைப் பற்றிய சிறந்ததொரு திரைப் படம் (The Agony and the Ecstasy) சென்னையில் திரையிடப்படவிருக்கிறது.



# சோதனை, வேதனை, சாதனை!

இத்தாலிய நாட்டின் எண்ணற்ற சிற்பிகளிலே "மகா சிற்பி" என மதிக்கப்படுபவர் பிளாரன்ஸ் நகரில் வாழ்ந்த மைக்கேலாங்கலோ. அவருடைய சிற்பங்கள் இத்தாலிய நாட்டின் கலைப் பெருமையைப் பாரெங்கும் பறைசாற்றுகின்றன. ரோம் நகரினையும், போப்பாண்டவரின் வாட்டிகன் மாளிகையையும் அன்னாரின் எழில்மிகு சிற்பங்களும் ஓவியங்களும் இன்றும் அலங்கரிக்கின்றன.

அவர் படைத்துள்ள எத்தனையோ சிற்பங்களுள் மிகப் பிரபலமானது "பையெட்டா" என்னும் சிற்பம். அது சிலையாக உருவாக்கப்பட்ட விதமே ஒரு சுவையான சிறுகதையாகும்.

கி. பி. 1562–ம் ஆண்டில் பிறந்த மைக்கேலாங்கலோ இளம் பருவத்திலேயே கலை வெறி மிக்கவராகத் திகழ்ந்தார். வறுமை காரணமாகச் சொல்லொணாத் துயரமுற்ற அவர், சலவைக் கல்லிலே காதல் தேவதையின் (Cupid) சிலை ஒன்றை உருவாக்கிச் சில காலம் அதைப் பூமியிலே புதைத்து வைத்திருந்து பின்னர் அதை, "தொல்பொருள்" சிலை எனப் பெயர் சொல்லிக் கார்டினல் ரியாரியோ என்பவருக்கு விற்றார்.

மிகப் பழமையான சிற்பங்களை விலைக்கு வாங்கி அவற்றைச் சேகரித்து வைப்பதைப் பொழுதுபோக்காகக் கொண்ட ரியாரியோ மைக்கேலாங்கலோவின் சிலை பற்றிய உண்மையை எளிதில் கண்டுபிடித்து விட்டார். ஆயினும், அவர் அக்கலைஞனுக்குக் கடுமையான தண்டனையை அளிக்க விரும்பவில்லை. ஏனெனில், மைக்கேலாங்கலோ செதுக்கிய அந்தச் சிலை அவ்வளவு கலை அழகு நிரம்பியதாக இருந்தது. இருபத்தொரு வயது நிறைந்த அந்த இளம் கலைஞனின் வாழ்க்கையை நல்லவிதமாக, மாற்றி அமைக்க அக்கணமே உறுதி கொண்டார் அவர்.

ஓர் ஆண்டு காலம் அந்த நல்லவரின் ஆதரவிலே இளம் மைக்கேலாங்கலோ தமது கலைத் திறமையை நன்கு வளர்த்துக் கொண்டார்.

தெளிந்த நீரோடை போல ஓடிக் கொண்டிருந்த அந்தக் கலைஞரின் வாழ்விலே திடீரென ஒரு திருப்பம் உண்டாயிற்று. அத்திருப்பத்தை ஏற்படுத்தியவர் ஜேகபோகாலி என்ற ரோம் நகர வங்கியாளர். தலைமுறை தலைமுறையாக அவரது குடும்பம் பழங்காலச் சிற்பங்களைச் சேகரித்து வைப்பதைப் பொழுது போக்காகக் கொண்டிருந்தது. மைக்கேலாங்கலோவின் கலைத் திறமையைக் கேள்விப்பட்ட அவர், பிரெஞ்சு நாட்டுத் தூதரான கார்டினல் கிராஸ்லே என்பவர் 'பையெட்டா' என்ற சிலையை விரும்பியதனால் அதனை வடிக்கும் பொறுப்பை மைக்கேலாங்கலோவிடம் கொடுத்தார். மைக்கேலாங்கலோவின் கலைத் திறமையில் அசையா நம்பிக்கை கொண்ட ஜேகபோகாலி பிரெஞ்சு நாட்டுத் தூதரிடம், "இனிமேல் மனித சமுதாயத்தின் வரலாற்றிலேயே இது போன்ற ஒரு சிலை உருவாகப் போவதில்லை என்ற எண்ணத்தைத் தோற்றுவிக்கும் சிலையைப் பிளாரன்ஸ் நகரக் கலைஞன் மைக்கேலாங்கலோ உருவாக்குவான்" என உறுதியளித்தார்.

அச்சமயம், மைக்கேலாங்கலோவுக்கு இருபத்துநான்கு வயது. 'பையஸ்' என்ற சொல்லின் சிலா உருவம் 'பையெட்டா', பையஸ்

என்றால் பக்தி சிரத்தையான — இறை யுணர்ச்சியுடன் கூடிய என்பது பொருள்.

மைக்கேலாங்கலோ ''பையேட்டா''வை உருவாக்கும் பணியில் மெய்வருத்தம் பாராது, ஈடுபட்டார். மேரியன்னை தம் மடியிலே இறந்து போன ஏசுவின் உடலைக் கிடத்திக் கொண்டிருப்பது போன்ற அந்தப் ''பையேட்டா'' சிலையிலே மைக்கேலாங்கலோ ஒரு மகத்தான புரட்சியைச் செய்தார். அன்றுவரை ரோம் நகரில் உருவான, ''பையேட்டா''க்கள் யாவிலும் மேரி அன்னை வயது முதிர்ந்த மாது ஆகச் சித்திரிக் கப்பட்டார், பற்பல சிற்பிகளால். ஆனால் மைக்கேலாங்கலோவோ மேரி அன்னையை ஒரு கன்னி மேரியாக இளமைத் துடிப்பு மிக்க மேரியாக — சித்திரித்தார். இரண்டு ஆண்டுகள் கடுமையாக அவர் உழைத்த பின்னரே பையேட்டா ஒருவாறாக முடி வுற்றது.

ஆனால் சிலை முடியுமுன்னரே கார்டினல் கிராஸ்லே இறந்து விட்டார்.

இந்தே முக்கால் அடி உயரமுள்ள பையேட்டா முதலில் ரோம் நகரில் உள்ள பிரெஞ்சு மன்னர்கள் ஆலயத்திலே வைக்கப் பட்டிருந்தது. அந்நாட்களிலே மைக்கேலாங்க லோவின் பையேட்டா இத்தாலி நாட்டில் கூடப் புகழ்பெறவில்லை. காரணம் இத்தாலி யக் கலைஞர்கள் மேரி அன்னையை இளநங்கை யாக மைக்கேலாங்கலோ உருவாக்கியதை எதிர்த்தனர். அவர்களது பலத்த எதிர்ப் பைக் கண்ட மைக்கேலாங்கலோ தமது நண் பர்கள் சிலர் உதவியுடன் அதை இரவோடு இரவாகத் தூக்கிக் கொண்டு வந்து புனித பீட்டரின் தேவாலயத்தில் ஒரு மூலையில் வைத்தார். பல ஆண்டுகளாக அந்த உயரிய சிற்பம் கண்டுகளிக்க ரசிகர்களின்றி ஆலயத் தின் மூலையிலே அனாதையாகக் கிடந்தது.

ஒரு நாள் மைக்கேலாங்கலோ தமது படைப்பைக் காண அங்கு சென்றபோது கலை உணர்வு அற்ற ஒருவன் யாரிடமோ, ''இந்தப் 'பையேட்டா'வைச் செய்தவன் கல்லறைகளைச் செய்பவனாகத்தான் இருக்க வேண்டும்'' என்று கூறினான். அவனது அந்தக் கூற்றைக் கேட்டதும் அடங்காச் சினம் கொண்டார் மைக்கேலாங்கலோ. அன் றிரவே அந்த ஆலயத்தினுள் நுழைந்து உளியாலும் சுத்தியாலும் மேரியன்னையின் நெஞ்சத்தில், ''இச்சிலை பிளாரன்ஸைச் சேர்ந்த மைக்கேலாங்கலோவால் உருவாக்கப் பட்டது'' எனப் பொறித்தார். மைக்கே லாங்கலோ தமது பெயரைப் பொறித்த ஒரே சிலை இந்தப் ''பையேட்டா'' ஒன்றுதான்.



மைக்கேலாங்கலோவின் 'பையேட்டா'

ஆண்டுகள் பல கடந்தன. தமது தொண்ணூறாம் வயதில் கலைஞர் மைக்கே லாங்கலோ இறந்தார். கி. பி. 1572—ம் ஆண்டில் போப் கிரிகோரி ''பையேட்டா' வைப் பிரபலமுறச் செய்தார்.

1962ம் ஆண்டில் நியூயார்க் நகரில் நடந்த ''உலகப் பொருட்காட்சி''க்கு இத்தாலி நாட்டிலிருந்து மைக்கேலாங்கலோ வின் பையேட்டா கோடிக்கணக்கான அமெரிக்க ரசிகர்கள் கண்டுகளிப்பதற் காகக் கப்பலில் வைத்து அனுப்பப்பட்டது. அபூர்வக் கலைஞனின் அற்புத சிருஷ்டியான அப்''பையேட்டா'' அப்பொழுது சுமார் நான்கு கோடி ரூபாய்களுக்கு 'இன்ஷூர்' செய்யப்பட்டது!

— அ. ராமதுரை

## காகிதப் பைக்குப் பரிசு

ஜெர்மனியில் ஃப்ரிபர்க் நகர வியாபாரிகள் தெருக்களைச் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும் என விரும்பினர். ஆனால் கடைக்கு வருபவர்களோ கடையில் பொருட்களைப் போட்டுத் தரும் காகிதப் பைகளைத் தெருவில் வீசி அசுத்தப்படுத்தினர். இதைத் தடுக்க வியா பாரிகள் ஒரு தந்திரம் செய்தனர். ஒவ்வொரு காகிதப் பைக்கும் எண் கொடுத்து, வார முடிவில் லாட்டரி சீட்டுக் குலுக்கினர். குறிப்பிட்ட எண்ணுள்ள காகிதப் பையை வைத்திருப்பவருக்குப் பரிசு கொடுக்க ஆரம்பித்தனர். பிறகு, பைகளைத் தெருவில் வீசுவார்களா?

ஆதாரம்: ''ஹிந்துஸ்தான் ஸ்டாண்டர்டு'' தகவல்: ச. ஸ்ரீதரன்

# பொன்னிவனத்துப் பூங்குயில்

கொத்தமங்கலம் சுப்பு



மூன்றாம் அத்தியாயம்

## ஏழைக் குறும்பு

“ஆமா, நீ பிறந்த பிறகு இருபது வருஷம் கழிச்சு இவன் பிறந்தான்... குடய்யாணு'' என்றுள் குயிலி.

''அஹா, தாயே! உன் மகன் உன்னைப் பட்டினி போடுவேனு?.... ஏதோ சோறு இல்லேன்னு தண்ணி ராவது உனக்குத் தாரேன்'' என்று ஒரு குவளையில் தண்ணீரை எடுத்து அவள் மேல் கோபத்துடன் ஊற்ற வந்தான் அவன். குயிலி கெட்டிக்காரி அல்லவா? லபக்கென்று குனிந்துகொண்டாள். அவன் ஆத்திரத்துடன் வீசிய தண்ணீர் அவன் கடை வாசலில் சிதறி அவனுக்கே குளிர்ச்சியைத் தந்தது.

''இந்தாய்யா. சாக்கிரதையா யிரு. உஷார்!'' என்று தன் விரலை ஆட்டி அவனை எச்சரித்து விட்டு வேகமாக நடந்தாள் குயிலி.

'அடி குயிலி, உன் கம்பீரமெங்கே? ராங்கி எங்கே? ஏதோ சோறு போடுவதாக ஒப்புக் கொண்டு இப்போது பட்டினி போட்டால் உன் கௌரவம் என்ன ஆகும்?' என்று அவள் மனம் கேட்டது. 'சே, ஏழையாக இருக்கப்படாது. அப்படி இருந்தாலும் அவங்களுக்கு இரக்கம் வரக்கூடாது!' என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

இப்போது அவளுடைய நடையில் பழைய மிடுக்கு இல்லை. இருந்தாலும் குழந்தையின் தாய் தன்னைப் பார்த்துச் சோர்ந்து போய் விடக்கூடாதே என்று சிந்தனையில் மூழ்கி நடந்தாள் குயிலி.

இடுப்பில் குழந்தையைத் தூக்கிக் கொண்டு வரும் குயிலியைப் பார்த்த உடனே அந்தக் குழந்தையின் தாய் ஆனந்தமடைந்தாள். பையனின் பசி

தீர்ந்து விட்டிருக்கும் என்ற எண்ணத்தில் அப்போது தாய்க்கும் பசி உண்டாயிற்று.

''என்னடா, தம்பி! என்ன சாப்பிட்டாய்?'' என்று ஆவலோடு கேட்டாள் தாயார். குயிலிக்குத் திக்கென்றது. இதுவரையில் குயிலியின் தோள் மீது குஷியாக உட்கார்ந்து கொண்டு சென்றதினால் பையன் பசியை மறந்திருந்தான். ''என்ன சாப்பிட்டாய்?'' என்று தாய் கேட்டதும் பசியால் முனக ஆரம்பித்தான். குயிலிக்கு என்ன செய்வது, யாரிடம் போவது என்ற புரியாத நிலைமை ஏற்பட்டது. அவள் வாயில் இருந்து பொய்யும், புளுகும், நெய்யும் பாலும் போல் வரலாயிற்று.

''அந்த மாடி வீட்டில் என் அக்கா இருக்கிறாங்க. அங்கே கூட்டிக்கிட்டுப் போய்த் தம்பிக்குச் சோறு போடலாம்னு பார்த்தேன். பார்த்தால் அவங்க வீட்டுப் பால் மாட்டைக் காணுமாம். கதவைச் சாத்திப் பூட்டிக்கிட்டுத் தேடப் போயிருக்கிறாங்க'' என்றாள்.

குழந்தையின் தாயாருக்கு மாடி வீட்டுக்குச் சென்றும் தன் மகனின் பசி தீரவில்லையே என்ற வருத்தம் வந்தது.

செல்வர்களுக்கு ஆத்திரம் வந்தால் வேலைக்காரர்களைக் கோபித்துக் கொள்வார்கள். ஏழைகளுக்கு ஆத்திரம் வந்தால் விதியைத்தானே கோபிக்க முடியும் ?

''எனக்குப் பிறந்தது இல்லே. என் நிழலும் அதுகூட வந்திருச்சு. அதனால் தான் திறந்து இருந்த கதவும் பூட்டிக்கிட்டுது'' என்றாள் அவள்.

''ஏம்மா, குழந்தையைத் திட்டுறீங்க ?''

''நீ சும்மா இரு, பொண்ணு. அவன் பசிபசின்னு என்னையே தின்னுடுவான் போலே இருக்கு. அது என்ன பசியோ? இது வவுத்திலே என்ன பூதம் இருக்கோ ?''

''அம்மா ! பசியைத் திட்டாதீங்க, அம்மா. அதுதான் மனுசனோடு கூடப் பிறந்தது. நம்ம கைகால் மாதிரி அதுவும் ஒண்ணு. சாப்பாடு இருக்குதே, அது விருந்தாளி மாதிரி. எப்பவாவது அதுவா வரும். கொஞ்ச நேரம் இருந்துட்டுப் போயிடும்.''

''அப்படியான்னா பசியாகவே இருந்திடச் சொல்லி உபதேசம் செய்யுறே. சோறு கிடைக்காதுன்னு சொல்லிடுவே. ஏன் கத்தி வளைக்கிறே?''

''என்ன சோறு கிடைக்காதுன்னு சொன்னேன்? அக்கா வீடு பூட்டிக் கிடந்தா என்ன? இதோ, அரை நொடியிலே எங்க வீட்டுக்குப் போய் வட பாயசத்தோடே சாதம் எடுத்துக்கிட்டு வரேன். அட தம்பி. உங்க அம்மாகிட்டே கொஞ்சம் உட்காருடா. நம்ப தஞ்சாவூர் நெல் களஞ்சியம்டா.''

இதைக் கேட்டுக் கொண்டிருந்த சின்னத் தம்பி சிரிப்பை அடக்க முடியாமல் தவித்தான். ''குயிலி! குருணி நெல்லைக் கொண்டு வந்து கொட்டி விடாதே. குழந்தை வயிற்றுக்கு ஆகாது. சாப்பாடுதானே கொண்டாறப் போகிறாய்?'' என்றான்.

குயிலி சின்னத்தம்பியிடம் 'நம் குட்டை உடைத்துக் காட்டிக்



கொடுத்து விடாதேடா' என்று தன் கண்ணுல் கெஞ்சினுள். ஆனுல் வார்த்தையிலோ, ''என்னடா, நினேச்சுக்கிட்டே நீ, இந்தக் குயிலி நினேத்தால் கோடிப் பேருக்குச் சாப்பாடு போடுவேண்டா! உனக்குத் தெரியுமில்லே?'' என்ருள்.

''ஆ, தெரியும். தெரியும். நானே உன் சாப்பாடுதானே சாப்பிடறேன்!''

இவர்கள் பேசிக் கொண்டிருக்கும் ஒவ்வொரு பேச்சும், குழந்தையின் தாய்க்குப் பசியையும், ருசியையும் அதிகப் படுத்தியது.

''ஏம்மா. வீடு ரொம்பத் தொலே விலே இருக்காம்மா?''

''இல்லேயே. இந்தா அரண்மனே யில்ல. அதுக்குப் பக்கத்திலே பெரிசா ஒரு வீடு தெரியுதே, அதுதான்.

''டேய், சின்னத்தம்பி, நான் போயிட்டு வரக் கொஞ்சம் நேரம் ஆனுலும் ஆகும். அவங்களே ஜாக்கிரதையாக் கவனிச்சுக்கோ. குழந்தை அழுதா மரத்தில் இருந்து நாவல் பழத்தைப் பறிச்சுக் கொடு. நான் வர வரைக்கும் தின்னுக்கிட்டு இருக்கட்டும்'' என்று உத்தரவிட்டுவிட்டுக் குயிலி அல்லிராணி போல் நடந்தாள்.

குயிலி போவதைப் பார்த்து அவள் சீக்கிரம் வந்துவிட வேண்டுமே என்று பிரார்த்தனே செய்தாள் குழந்தையின் தாயார். ஆனுல் ஏழை சின்னத் தம்பியின் இதயம் இளகியது. ''அடேய்! குயிலி வாழ்க்கையில் பிச்சைக்காரி.



மனசிலே ராசாத்திடா. அதுக்கு இருக்கிற இரக்கம் ஒருவருக்கும் கிடையாதுடா'' என்று இரகசியமாக இன்னொரு பையனிடம் கண்ணில் நீர் ததும்பச் சொன்னான்.

''வட, பாயசத்துக்கு எங்கேடா போரும்?'' என்றான் அந்தப் பையன்.

''அடிபடாமல் வந்தாப் போதும்.''

''இப்படி நாம் எல்லாம் பயந்து ஓடினா அது அடிபடத்தான் படும். அந்தச் சவுக்கை எடுத்து அந்தக் குதிரைக்காரனை நாலு கொடுக்காட்டி நான் மாங்கொட்டை இல்லே.''

''தம்பி, மாங்கொட்டை! வேண்டாம். அது துவர்க்கும். நாகப் பழத்தைப் பறித்துக் கொண்டு வாடா'' என்று சின்னத் தம்பி கூறினான்.

நான்கு பையன்கள் அருகில் இருந்த நாவல் மரத்தில் ஏறினார்கள்.



''பீமராவ் உணவுச் சாலை'' என்ற பலகையின் முன் வீதியில் நின்று கொண்டிருந்தாள் குயிலி. உள்ளே நடந்து கொண்டிருந்த மராட்டியச் சமையலின் வாசனையையே அவள் மூக்கால் ரசித்துச் சாப்பிட ஆரம்பித்தாள். ''ஆகா! என்ன வாசனை! கமகம என்று இருக்கிறதே. காசு இருந்தால் பூந்து விளையாடுவேன்.''

'மராட்டியச் சமையல் ரொம்ப நல்லா இருக்குமாமே. மத்தவங்க கடைக்கெல்லாம் பலகை வேணும். இவங்க கடைக்குப் பலகை எதற்கு? வாசல் தாண்டி உள்ளே போகவே பயமாக இருக்கிறதே. இதுலே ஜம்பமா வேறே வட பாயசத்தோடு சாப்பாடு கொண்டு வரேன்னு சொல்லி விட்டேனே!

'ஆத்தா பெரியநாயகி! எல்லாரும் என்னைக் குயிலின்னு கூப்பிடுறாங்களே. எனக்கு இரண்டு இறகு முளைக்க வைச்சுடேன். குயிலாகவாவது பறந்து போய் மூக்கில் வடையையும், காலில் பாயசத்து வாளியையும் கௌவிக்கிட்டுப் போயிடுவேன்.

'உனக்கு என்னடி வந்தது? அந்த அம்மா யாரோ? உன் கூடப் பிறந்தவங்களா? பசி பசின்னு அழுகிறவங்களைப் பணக்காரர்கள் எல்லாம் பார்த்துக்கிட்டுப் போற போது ஊர் வம்பை நீ ஏன் விலைக்கு வாங்குறே. யாருகிட்டே சில்லறை கேட்கிறது? கேட்டாக் கொடுப்பாங்களா? ஒண்ணும் புரியவும் மாட்டேங்குது' என்று அவள் யோசித்துக் கொண்டிருக்கும் போது உள்ளே பரிமாறுபவர் கூறிய பலகாரங்களின் பெயர்ப் பட்டியல் அவள் காதில் கேட்டது. அக் காலத்தில் உணவை விற்பது பாவம் என்று தமிழ் நாட்டில் கருதப்பட்டதால் நம்மவர்கள் உணவு விடுதிகளை வைப்பதில்லை. தஞ்சாவூர்ச் சீமையில் அது இழிவாகவும் கருதப்பட்டது.

'என்னென்னமோ பேசறாங்களே, கடையிலே. பக்கோடா, பஜ்ஜி, குஞ்சலாடு, பாசந்தி, தூத்பேடா, பேணி, பூரி, தர்க்காரி, என்னவெல்லாமோ சொல்கிறாங்களே? ஒன்றுகூடச் சாப்பிடும் பொருளாத் தெரியலையே? ஒண்ணும் நம்ப ஊர்ப் பேரா இல்லையே. வடை, முறுக்கு, அதிரசம், தேன்குழல், புட்டு, இடியாப்பம், இட்டிலி, தோசை, சுகியன், பணியாரம் ஒண்ணையும் காணோமே? இது பலகாரக் கடைதானா? இல்லே, கஜானாவா? பலகையில் என்ன எழுதி யிருக்காங்களோ? படிக்கவும் தெரியல்லே. நெய் மணக்குது. பலகார வாசனை மூக்கைத் துளைக்குது. பரிமாறரவங்க சொன்னதெல்லாம் அவங்க சீமைப் பலகாரம் போல இருக்கு. எங்கிருந்தோ வந்து நம்ம ஊரில் கொடி போட்டுட்டாங்க. போகட்டும். 'எம் பாஷையைக் கத்துக் கோடா'ன்னு பள்ளிக்கூடம் வைக்காமல் புதுசு புதுசா பலகாரம் கொண்டாந்தாங்களே. அந்தவரை நல்லவங்க! அடி, குயிலி நேரமாகுதடி உனக்கு! வாசனையிலேயே உன் வயிறு ரொம்புது. அந்த அம்மாவும் மகனும்?'



குயிலி கடையின் ஓரத்தில் வந்தாள். வெளியே தொங்கிக் கொண்டிருந்த விளாமிச்சை வேர் தட்டிகளின் வழியாக உள்ளே பார்த்தாள். அந்த விளாமிச்சை வேரிலும் வெங்காய வாசனை அடித்தது. நாக்கை ஒரு முறை நப்புக் கொட்டிக் கொண்டாள். அவள் பார்வை விடுதிக்குள் ஒரு வரிசையில் அமர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்த ஒருவர் மேல் விழுந்தது. இன்னும் உச்சி வேளைகூட ஆகவில்லை. எதிர் எதிராக இருவரே உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். அதில் ஒருவர் ஆஜானுபாகுவான தோற்றம் உடையவர். நெற்றியிலே அழகாகத் திருமண் தரித்துக் கொண்டு

# தலைவலியா?



# அவேதன்



## சாப்பிட்டு உடனடியாக நிவாரணம் பெறுங்கள்

SQUIBB

SARABHAI CHEMICALS






அற்புத 'எபேப்' அடங்கிய அவேதன தலைவலி, ஜலதோஷம், ஃப்ளூ மற்றும் இதர சாதாரண வலிகளிலிருந்தும் நோவுகளிலிருந்தும் துரிதமான, தீமையற்ற, நிச்சயமான நிவாரணத்தை அளிக்கிறது.

Shilpi SC 51A/67 Tam

# படியப்படிய வாரிய கேசம், பளபளப்பான கேசம் !

## டாடா *நறுமண* கேஸ்டர் ஹேர் ஆயில் !

*நாள்முழுதும் கேசம் கலையாமலிருக்கச் செய்கிறது*

கேசப் பராமரிப்பு ஓர் அரிய கலை. அழகாய் அமைந்த கேசம் அலாதி தன்னம்பிக்கையை அளிக்கிறது. நாள் முழுதும் கலையாமல் இன் மணத்துடனும் ஆரோக்கியமுடனும் உங்கள் கேசம் மிளிர டாடா நறுமண கேஸ்டர் ஹேர் ஆயில் உபயோகியுங்கள்... எழில்மிகு தோற்றம் பெற

*டாடா கேஸ்டர் ஹேர் ஆயில்...*

**கண்கவரும்**
**புதிய புட்டி**
**3 சைஸ்களிலே**
**கிடைக்கிறது**




ஆரோக்கியமான படிந்த கேசத்துக்காக.

தங்கக் கம்பி கட்டிய வல்லத்து வில்லைகளை மூக்குக் கண்ணாடியாக அணிந்து கொண்டு அமர்ந்திருந்தார். ஒழுங்காக வெட்டி விடப்பட்ட மீசை, மீசையும் தலையும் நரைத்திருந்தாலும் முகத்தில் தேஜஸ் ஒளி வீசிக்கொண்டிருந்தது. அவர் காதுகளில் பச்சைக் கல் கடுக்கன், அதன் மேலே பூங்காதில் முத்துக் கட்டிய முறுகும் தொங்கிக் கொண்டிருந்தது. கழுத்தில் தொங்கிய கரிய துளப மணிமாலையோடு இரட்டை வடம் தங்கச் சங்கிலி ஒன்றும் தெரிந்தது. அவர் மேலே போர்த்தியிருந்த சால்வையும், ஜரிகைத் தலைப்பாகையும் அவருக்கு அருகே ஒரு தடுக்கின் மீது வைக்கப்பட்டிருந்தன. ஆஸ்தான வித்துவானோ அல்லது அயல்நாட்டுத் தூதுவரோ என்று எண்ணும் வண்ணம் அவரது தோற்றம் இருந்தது. குயிலியின் கண்கள் அவரை நோக்கின. அந்த முகத்தில் இரக்கம் இருப்பதைக் கண்டாள். அவரிடம் கேட்டால் ஏதேனும் தருமமாகக் கொடுப்பார் என்று எண்ணினாள். ஆயினும் இவ்வாறு பலரைக் கேட்டு ஏமாந்திருப்பதால் அவள் மனத்தில் ஐயமும் ஏற்பட்டது. அப்பொழுது அவருக்கு முன் அமர்ந்து உணவு அருந்திய சாயவேட்டிக்காரர் எழுந்து தட்டி அடைப்பின் முன் நின்றபடியே பளபளவென்று தேய்த்து வைக்கப்பட்டு இருந்த தவலையில் இருந்த தண்ணீரைச் சொம்பில் எடுத்துத் தம் கையை வெளியே நீட்டிக் கழுவிக் கொண்டு வெளியே வந்தார். அவரையும் அந்த நாமக்காரரின் உருவம் கவர்ந்திருந்தது. ஆதலால் போகும் பொழுதே அவரைக் கண்ணால் ஒரு முறை பார்த்துவிட்டுப் பராக்குப் பார்த்துக் கொண்டே நடந்தார். அவர் மடியிலிருந்து ஒரு தஞ்சாவூர்ப் பொடி டப்பி தவறிக் கீழே விழுந்தது. அதைக் குயிலி கண்டாள்.

அக்காலத்தில் தஞ்சாவூரில் கங்கணம் செய்வது போல் அரக்கும், மண்ணும் கலந்து அழகிய நிலைக் கண்ணாடிகளை ஒட்டிக் கண்ணைக் கவரும் வண்ணம் பொடி டப்பிகளும் செய்து வந்தார்கள். சிங்கபூர், கடாரம், சிங்களம், ஐராவதம் முதலிய கடல் கடந்த நாடுகளுக்கு நாகை வழியாக அவை அடிக்கடி ஏற்றுமதி செய்யப்பட்டன.

பொடி டப்பியைக் கவனிக்காமல் விடுவிடு வென்று அவர் வெளியே நடக்கவே குயிலி அவரைக் கேட்டால் பிரயோசனமில்லை என்று கருதினாளோ, வேறு என்னதான் சூழ்ச்சி செய்ய எண்ணினாளோ? வேகமாக உள்ளே வந்தாள். அந்தப் பொடி டப்பியைத் தன்



"'18 வயதில் டைபிஸ்ட் தேவை'ன்னு விளம்பரம் பண்ணச் சொன்னா '18 டைபிஸ்ட்டுகள் தேவை'ன்னு விளம்பரம் பண்ணி இருக்கிறீர்! வாசலில் ஒரே கிழவிகள் கும்பல்!"

வலது பாதத்தால் மூடிக் கொண்டு கடைக்காரரிடம், "ஏனய்யா! சாப்பாடு இருக்கிறதா?" என்றாள்.

"இருக்கம்மா!"

"இரண்டு பேருக்குச் சாப்பாடு இருக்குமா?"

"இரண்டாளு சாப்பாடும் நீங்க சாப்பிட்டாலும், ஓர் ஆளு சாப்பாடு பணம் கொடுத்தால் போதும்!"

"வடை பாயசம் உண்டா?"

இதுவரை அவளை அவ்வளவாகக் கவனிக்காமல் இருந்த அந்த வைணவர் அவளுடைய மதுரமான குரலைக் கேட்டவுடன் நிமிர்ந்து நோக்கினார். அவளும் அவரைக் கடைக்கண்ணால் கவனித்தாள். "பாவம், அப்பாவி" என்று நினைத்தாள்.

"என்னம்மா, சாப்பிடுவதென்றால் உட்காரு" என்றார் பரிமாறுபவர்.

"இரண்டு ஆளு சாப்பாடு, வடை-பாயசத்துடன் கட்டிக் கொடுங்கள்" என்றாள் குயிலி.

"பாத்திரம் எங்கே?" என்று கேட்ட பிறகுதான் குயிலிக்குச் சாப்பாடு வாங்குவதென்றால் பாத்திரமும் வேண்டும் என்பது தெரிந்தது. இருந்தாலும் தன் ஒயிலை விடாமல், "என்னையா, என்னையே கேள்வி கேட்கிறீங்க? இந்தத் தஞ்சாவூர்ச் சீமையிலே தாட்டு இலைக்கா பஞ்சம்?" என்றாள்.

"பாயசத்தை இலையில் கட்ட முடியுமா?" என்று கேட்டார் பரிமாறுபவர்.

''தொன்னையில் வைத்துக் கொடு. இதுகூடத் தெரியலே!'' என்று அதிகாரம் செய்தாள்.

குரல் மட்டும் அல்ல. அவளது சாதுரியப் பேச்சிலும் அந்தப் பெரியவர் மயங்கினார்.

இதற்குள் பரிமாறுபவர் சாதம்; கறி முதலியவைகளைப் பொட்டலமாக இலையில் கட்டி, ஒரு தொன்னை நிறையப் பாயசத்துடன் வந்தார். வரும்போதே ''பணம் கொடு அம்மா!'' என்றார்.

''என்னையா அவநம்பிக்கை? கொடுக்காமல் ஓடிப் போயிடுவேன் என்று பார்த்தீர்களா?'' என்று சொல்லிக் கொண்டே அவசரமாக இடுப்பில் கையை வைத்துத் தேடினாள், தேடினாள், தேடினாள். பாவாடையில் சொருகியிருந்தால்தானே பணம் அகப்படும்? பரபரவென்று முந்தானையின் தலைப்பைப் பார்த்தாள். முடிந்து வைத்திருந்தால் அல்லவா இருக்கும்? அவள் முகத்தில் குபீரென்று துயரம் படர்ந்தது. 'ஐயோ! எங்கள் எஜமானி அம்மாளுக்கு என்ன சொல்வேன்?' என்று முகமுசென்று அழுதாள். இதைப் பார்த்த பெரியவருக்கு ஆச்சரியம் வந்தது. ' என்னம்மா, ஏனம்மா, அழுகிறாய்?'' என்றார்.



மரங்களுக்கு வயதானால் இலை சிறுக்கும். மனிதர்களுக்கு வயதானால் ஆசைகள் குறையும். ஆனால் இதற்கு மாறாக விளங்கினார் அவர்.

''ஏனம்மா அழுகிறாய்?'' என்று அவர் அளவுக்கு மீறிய பரிவுடன் கேட்டதைப் பார்த்து, குயிலி பின்கண்டவாறு எண்ணினாள்:

'ஆன வயசுக்கு அடையாளம் வேண்டாமா? கிழவனின் வாய் நம்மைச் சமாதானப்படுத்தினாலும் கண்கள் எங்கெங்கோ தாவுகின்றதே? முதலில் இவர் வயசுக்கு இவர் உணவு விடுதிக்கு வந்திருக்கவே கூடாது. இங்கே வந்திருப்பதைப் பார்த்தால் நாக்கைக் கட்டத் தெரியாதவர் என்று தோன்றுகிறது. ஆளைப் பார்த்தால் அரண்மனை வித்வான் போல இருக்கிறார். மரியாதையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டாமா? கடையில் வந்து உட்கார்ந்து கண்டவர்களுடன் சாப்பிடலாமா? சன்னியாசம் வாங்கிக் கொள்ள வேண்டிய வயதில் சரிகைத் தலைப்பாகையும், பட்டு வேட்டியும் யாரு கட்டச் சொன்னாங்க? ஆடை பளபளப்பா யிருந்தா ஆளுக்கு வயது குறைந்து போகுமா? கடுக்கனும், முறுகும், கழுத்திலே சங்கிலியும் என்ன வேண்டியிருக்கிறது அலங்காரம்? இப்படியெல்லாம் போட்டுக் கொண்டால் ஊரை ஏமாற்றிவிடலாம் என்ற எண்ணமா? கிழவன் கண்களைப் பார். ஒரு வி நா டி முகத்தைப் பார்க்கிறான்; அடுத்த விநாடி புஜத்தைப் பார்க்கிறான். சே, கொஞ்சம் கூட நல்ல குணமே இல்லாதவர் போல் இருக்கிறதே' என்று எண்ணிக் கொண்டே அவள் மேலும் அழுதாள்.

''நிறுத்தம்மா. ஏன் அழுவறே? உங்க யஜமானியம்மா யார்?'' என்று மிகுந்த ஆவலுடன் கேட்டார் அந்தப் பெரியவர்.

''ஏன், அவுங்களையும் தெரியணுமோ உங்களுக்கு? என் தப்பு நான் அழுகிறேன்'' என்று கண்களைத் துடைத்துக் கொண்டே கடைக்கண்ணால் கிழவனை ஒருமுறை பார்த்தாள் குயிலி.

''இல்லையம்மா. நான்கு பெரிய மனிதர்கள் வந்து சாப்பிடும் இடத்தில் நீ நின்று அழுது கொண்டிருந்தால் சரியாக இருக்குமா?''

''ஏன் பெரிய மனிசங்க மட்டும் அழுகை வந்தால் சிரிப்பாங்களோ?'' என்றாள் துடுக்காக.

இந்த வார்த்தையை அவள் சொல்லும்போது அவள் உடம்பில் ஏற்பட்ட நெளிவுகளை அந்த மனிதர் கவனித்தார்.

''இந்தா. அமத்தலாப் பேசாதே. உனக்கு என்ன கஷ்டம்?''

''சொன்னா குடுத்துடுவீங்களாக்கும்? எங்க எஜமானியம்மா டப்பி நிறைய மூக்குத் தூள் வாங்கிக்கிட்டு வடை பாயசத்தோட இரண்டு பேருக்குச் சாப்பாடு வாங்கிக்கிட்டு வான்னு சொல்லி ஒரு வராகனைக் கையிலே கொடுத்தாங்க. ரவுத்துக் கடையிலே பொடி வாங்கிண்டு இங்கே வந்து பார்த்தால் பாக்கிப் பணத்தைக் காணோம். ஹூ... ஹூ... ஹூ....''

''நீ அந்தக் கடையிலே சில்லறை வாங்கினியா?''

''நாங்க என்ன உங்களைப்போல பணக்காரருங்களா? அப்படி வாங்காமக் கூட விட்டுடுவாங்களா?'' என்று அவரையே கோபித்துக்கொண்டாள் குயிலி.

''முட்டாள்தனமாகச் சில்லறையை விட்டுட்டு வந்துட்டே. பேச்சிலே ஒண்ணும் குறைவில்லையே.''

''அட என்னய்யா. நான் படற கஷ்டத்திலே நீங்க வேறே திட்டறீங்க. இந்த ஊர்ப் பணக்காரங்களுக்கெல்லாம் ஏழையைத் திட்டறதே வழக்க

மாப் போச்சு'' என்று தன் தாவணி யின் முன் தலைப்பை மறுபடியும் தேடினாள் குயிலி.

அந்தப் பெரியவருக்குத் துடுக்காகப் பேசி ஏமாற்றப் பார்க்கிறாளோ என்று சந்தேகம் வந்தது.

''சரி. பொடி வாங்கினே இல்லே?''

''ஆமாம். வாங்கினேன். ஏன்? ஓசிப்பொடி கேட்கலாம்னு பார்க்கி றீங்களா?''

அவர் சிரித்தார். ''நீ சொல்றதை எப்படி நம்பறது? அந்தப் பொடி மட்டை யைப் பார்ப்போம்!''

''இதுக்குக்கூடவா பொய் சொல்லு வாங்க? இந்தாங்க'' என்று அழுது கொண்டே அவசரமாகத் தன் இடை யில் கையை வைத்து அதை எடுக்கப் போனாள் குயிலி. அந்த மனிதர் ஆவ லோடு பார்த்தார்.

''ஐயய்யோ! அதையும் காணோமே!'' என்று அலறினாள் அந்தச் சாகசக்காரி.

இதற்குள் கடையில் இருந்த சிலர் அங்கே கூடிவிட்டார்கள். அந்தப் பெரியவருக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது.

''முளைத்து மூன்று இலை விடவில்லே. வயசு பதினறுகூட இருக்காது. வாயிலே பதினாயிரம் பொய் வருது. யாரை ஏமாத்தலாம்னு பார்த்தே? போ வெளியிலே'' என்று கத்தினார்.

''நீங்க யாரையா என்னைப் போகச் சொல்ல? உங்க கடையா? வவ்வவ் வே...'' என்று முகத்தைக் கோணி அவரை அழகு காட்டிவிட்டுக் குயிலி வேகமாகத் திரும்பி நடந்தாள். அவள் முகத்திலே ஒரு புன்சிரிப்பு மின்னல் போல் வந்தது. அந்தப் பெரியவர் ஆத்திரத்தோடு அவளையே பார்த்தார். அப்போது உணவுப் பொட்டலத்தைக் கையில் வைத்திருந்த பரிமாறுபவர், ''ஐயா! அதோ பாருங்க!'' என்று இதுவரை குயிலி நின்று கொண்டிருந்த இடத்தைச் சுட்டிக் காட்டினார். உடனே பெரியவர் கவனித்தார்.

அங்கு பளபளவென்று கண்ணாடி வில்லைகளால் அலங்கரிக்கப்பட்ட பொடி டப்பி ஒன்று அவரைப் பார்த்துச் சிரித் தது. அந்தப் பெரிய மனிதர் குனிந்து அதை எடுத்தார். அவர் முகத்தி லிருந்த கோபம் மறைந்தது. குயிலி போன திக்கில் பார்த்து, ''ஏ... பெண்ணே...'' என்று பதற்றத்துடன் கூப்பிட்டுக் கொண்டே சென்றார்.

''ஏன்? மறுபடியும் திட்டப் போறீங் களா?'' என்றாள் குயிலி.

''பெண்ணே! நீ உண்மையைத்தான் சொன்னாய். நான் கோபித்துக் கொண் டதுதான் தவறு. உன் பொடி டப்பி கீழே கிடந்தது அம்மா. இந்தா...'' என்று அதை அன்புடன் கொடுத்தார்.

''கீழே கிடந்ததா? நல்லதாப் போச்சு. இல்லாவிட்டால் என்னைத் திருடின்னுதானே நினைத்திருப்பீங்க!'' என்று குழைந்து அழுதாள் குயிலி.

''சே... சே... அப்படியெல்லாம் உன்னை நினைப்பேனா? ஏண்டா கோபிச் சுக்கிட்டோம்னு எனக்கே வருத்தமா இருக்கு. இந்தா'' என்று தன் இடுப் பில் தொங்கவிட்டிருந்த பட்டுப் பையை எடுத்து அதன் சுருக்கை விலக்கி, அதற் குள்ளிருந்து பளபளவென்று மின்னிக் கொண்டிருந்த ஒரு தங்க வராகனை எடுத்து அவள் கையில் வைத்தார். அந்த வராகனுக்குத்தான் எத்தனை சக்தி. இதுவரை அம்மாஞ்சி ஒரு காசையே பார்த்தறியாத குயிலி அதைப் பார்த்தவுடன் பிரமித்தாள். உடனே ஓட ஆரம்பித்தாள். **(தொடரும்)**

## பேராசிரியர் காயிம் ராபின்

தமிழ் மாநாட்டுக் கருத்தரங்கில் சுறு சுறுப்பாக அங்கும் இங்கும் நடந்து கொண்டிருந்த மற்றோர் ஆசாமி இஸ்ரேல் நாட்டைச் சேர்ந்த பேராசிரியர் காயிம் ராபின். சற்றுக் கட்டை குட்டையான உருவம். பின்னால் பறக்கும் கிராப் தலை. 'பஞ்ச்' பத்திரிகையில் அவ்வப்போது வெளியாகும் கார்ட்டூன்களை நினைவுபடுத்தும் தோற்றம்.

1915ம் ஆண்டு ஜெர்மனியில் பிறந்த இவர், லண்டன், ஆக்ஸ்போர்ட் சர்வகலாசாலைகளில் படித்து ஏராளமான பட்டங்களைப் பெற்றிருக்கிறார்; ஹீப்ரு, அரபு, கீழ்த் திசை மொழிகள் முதலியவற்றில் சிறந்த பயிற்சி உண்டு. ஹீப்ரு மொழி தன் வளர்ச்சிக்கு, திராவிட மொழிகள் பலவற்றிலிருந்து எந்தெந்த வார்த்தைகளை ஏற்றிருக்கிறது என்பது பற்றி ஆராய்ச்சி செய்து நூல்களும் வெளியிட்டிருக்கிறார். டாக்டர் பட்டமும் பெற்றிருக்கிறார். இது சம்பந்தமாகத்தான் இந்த மாநாட்டுக்கும் ஒரு வெளியீடு சமர்ப்பித்திருந்தார்.

# தமிழ் வலம் வந்த தூதுவர்கள்

கருத்தரங்கில் அவ்வப்போது கேள்விகள் போட்டு வந்த இவர் கடைசி நாள் காலை நிகழ்ச்சியின் போது பல நண்பர்களின் கவனத்துக்கு உள்ளானார். ''ஹீப்ரு மொழியை நாங்கள் எவ்வித சிரமமுமில்லாமல் எங்கள் நாட்டில் போதன மொழி ஆக்கிவிட்டோமே? தமிழையும் நீங்கள் ஏன் அப்படி ஆக்க முடியாது?'' என்று இரு சந்தானத்திடம் அவர் கேட்ட போது அரங்கம் கோஷத்தால் அதிர்ந்தது.

சில நிமிஷங்கள் கழித்து அவர் வெளியே வந்து காபி அருந்திக் கொண்டிருந்த போது அவருடைய 'சகாவான மற்றொரு இஸ்ரேல் நாட்டுப் பிரதிநிதி டாக்டர் டேனியல் ஆர்காவ் சிரித்துக் கொண்டே டாக்டர் காயிமை நெருங்கி, ''டாக்டர்! அடுத்த ஆண்டு நீர் சென்னைக்கு வரும் போது மரீனாவில் உம்முடைய சிலையையும் பார்ப்பீர் என்று நம்புகிறேன்!'' என்று ஒரு போடு போட்டாரே, பார்க்கலாம்!

டாக்டர் காயிம் ராபின் ஜெருசலத்திலுள்ள ஹீப்ரு சர்வகலாசாலையில் ஹீப்ரு மொழிப் பேராசிரியராகப் பணியாற்றுகிறார். கி. மு. சகாப்தத்தில் பல நூற்றுண்டுக்கு முன்பே, ஹீப்ரு மொழியில் தமிழ்ச் சொற்கள் கலந்திருக்கின்றன என்பது இவருடைய வாதம். இவருக்குத் தமிழ் நன்கு படிக்கத் தெரியும். எழுத இன்னும் பழகவில்லை. கடந்த இரண்டு வருடங்களாக மலையாளமும் பயின்று வருகிறார். மலையாள மொழியைப் பேசியும் பயிற்சி பெற இவருக்கு வாய்ப்பு உண்டு. ஜெருசலத்தில் மலையாளிகள் இருக்கிறார்கள். ஆனால் தமிழில் பேச அங்கு யாரும் இல்லை. ''நானேதான் என்னுடன் பேசிக் கொள்ள வேண்டும். பார்ப்பவர்கள் என்னைப் பைத்தியக்காரன் என்று நினைத்துவிடக்கூடாதே என்று பயப்படுவேன். ஆனால், இந்த மாதிரி சந்தர்ப்பங்களில் நான் ஆசை தீரத் தமிழில் பேசிப் பார்த்துவிடுகிறேன்'' என்றார்.

பாரதத்துக்கு நான்காவது தடவையாக வந்திருக்கும் இவர் சென்னைக்கு இரண்டாவது தடவையாக விஜயம் செய்திருக்கிறார். மாநாட்டுக் கருத்தரங்கு ஏற்பாடுகள் இவரை வெகுவாகக் கவர்ந்திருக்கின்றன.

## செர்கில் எமில் டெமித்திரியன்

மாநாட்டுக் கருத்தரங்கில், காந்திக் குல்லாயுடன் செக்கச் செவேரென்று ஒரு நபர் அடிக்கடி தென்பட்டுக் கொண்டிருந்தார். வட இந்திய சர்வகலாசாலைகளிலொன்றைச் சேர்ந்த பிரதிநிதியாக இருக்கலாம் என்றுதான் நினைத்திருந்தேன். ஆனால் சாப்பாட்டு நேரத்தில் அவர் என் அருகில் நின்றிருந்தபோது அவர் சட்டையில் மாட்டியிருந்த அடையாளச் சீட்டில் 'ருமேனியா' என்ற வார்த்தை என் பார்வையில் பட்டது.



அவர் பெயரும் எஸ். டெமித்திரியன் என்று குறிப்பிட்டிருந்தது.

தலையைப் பார்த்தேன். அது பட்டுக் குல்லாய், கதர் அல்ல! அமைப்பும் வேறு மாதிரி!

ருமேனிய நாட்டிலுள்ள புக்காரெஸ்ட் சர்வகலாசாலை மருத்துவ இயல் பிரிவு உதவிப் பேராசிரியராகப் (உடற்கூற்றுத் துறை) பணியாற்றும் இவருக்கும் தமிழ் ஆராய்ச்சிக் கருத்தரங்குக்கும் என்ன உறவு இருக்கக்கூடும் என்று நான் சிந்திக்க ஆரம்

ஹாய்ம் ராயின்



பிக்கும் போதே அவர் விளக்கம் கொடுக்க ஆரம்பித்து விட்டார்.

இந்தியக் கலாசாரத்தில் இவருக்கு அதிக ஈடுபாடு உண்டு. இதனால் கீழ்த் திசை வேதாந்த சாத்திரங்கள் பற்றித் தெரிந்து கொண்டார். அதன் விளைவாக ராஜாஜியின் ராமாயணத்தை ஆங்கில மொழிபெயர்ப்பு உதவி கொண்டு ருமேனிய மொழியில் மொழி பெயர்த்திருக்கிறார். 'எவ்வெரி மான்ஸ் லைப்ரரி' என்ற நிறுவனம் சென்ற ஆண்டு ஐம்பத்தி ஆறாயிரம் பிரதிகளை முதல் பதிப்பாக வெளியிட்டிருக்கிறது. அந்தப் புத்தகத்துக்குச் சிறந்த வரவேற்பும் இருக்கிறது. சூட்டோடு சூடாக இப்போது மகா பாரதத்தையும் மொழிபெயர்த்துக் கொண்டிருக்கிறார்.

''எனக்குத் தமிழ் எழுத்துத் தெரியாது. ஆங்கிலத்தின் உதவியைத்தான் நாடுகிறேன். எழுத்துக்களைக் கற்றுக் கொள்ளும் நேரத்தில் மேலும் பாரதத்தைப் பற்றியும் தமிழ் நாட்டைப் பற்றியும் பல விஷயங்களைப் பிற அறிஞர்கள் எழுதி வைத்திருப்பதைப் படிப்பதன் மூலம் கற்றுக் கொண்டு விடலாம் என்று நம்புகிறேன்'' என்கிறார் டெமித்திரியன்.

சென்னையில் ராஜாஜி அவர்களை நேரில் சந்தித்தபோது அவருக்கு வால்மீகியையும் வியாசரையுமே நேராகச் சந்தித்தது போன்ற உணர்ச்சி ஏற்பட்டதாம்.

இந்தியாவுக்கு இப்போதுதான் முதல் தடவையாக வந்திருக்கிறார். ''என் கற்பனை பொய்யாகவில்லை. பண்பு நிறைந்த மக்களிடையே வந்திருக்கிறோம் என்று பெருமிதம் அடைகிறேன்'' என்கிறார்.

டெமித்திரியன் ஓர் உற்சாக புருஷர். கலகலப்பான மனிதர்! ''அடுத்த தடவை வரும்போது நிச்சயமாகத் தமிழிலேயே கையெழுத்துப் போடுவேன்'' என்று சொல்லிக் கொண்டே ஆங்கிலக் கையெழுத்தைப் போட்டுக் கொடுத்தார்.

## அர்கேலியா டி பார்வியே

ஏற்கனவே ஓரளவு சிவந்திருந்த முகம் குங்குமச் சிவப்பாக மாறியது. பரபர வென்று அந்த அம்மையார் நின்று கொண்டிருந்த பஸ்ஸிலிருந்து இறங்கினார்.

''என்ன விஷயம்? எதையாவது காணாமற் போக்கி விட்டீர்களா?'' என்றேன்.

''நான் கோபமாக இருக்கிறேன். பேச மாட்டேன்'' என்றார் அவர். ஆனால் நல்ல வேளையாக அவரே தொடர்ந்து, ''என் பெண் பஸ் நிற்கும் இடங்களிலெல்லாம் இறங்கி இறங்கி எங்கோ வேடிக்கை பார்க்கப் போய் விடுகிறாள்'' என்று கோபத்தின் காரணத்தையும் சொல்லி விட்டார்.

அடுத்த நிமிடத்திலேயே அவருடைய பெண் — இளம் சிறுமியல்ல; இருபத்தைந்து



Argelia de Barre

வயதுக் குமரிதான். — வந்து விட்டாள். தாயின் முகத்திலிருந்த குங்குமச் சிவப்பு போன இடம் தெரியவில்லை. ''பேபி! இனி மேல் நீ பஸ்ஸை விட்டுக் கீழே இறங்கக் கூடாது'' என்று உத்தரவிட்டார் ஒரு தாயின் கண்டிப்புடன்!

இந்த அம்மையார் தென் அமெரிக்க நாட்டில் உள்ள போனஸ் அயர்ஸ் நகரத்திலிருந்து உலகத் தமிழ் மாநாட்டுக் கருத்தரங்குக்குப் பிரதிநிதியாக வந்திருந்த திருமதி அர்கேலியா டி பார்வியே என்பவர். பிரதிநிதிகள் சிலர் மாமல்லபுரத்துக்குப் பஸ்ஸில் செல்கையில் நடைபெற்ற நிகழ்ச்சி இது.

இந்த மாநாட்டில், வயதை மறந்து உற்சாகத்துடன், தன் மகளைத் தோழியாகவே கருதி அவள் கரத்தைப் பிடித்த வாறே, 'விசுக்' 'விசுக்' என்று வந்து போய்க் கொண்டிருந்தவர் திருமதி அர்கேலியா டி. பார்வியேதான் !

மகாபலிபுரத்தில் இவர் இரண்டு சிறு சங்குகள் வாங்கினார். கடைக்காரர் எளிதாக எட்டணா பெறுமான சங்கை இரண்டு ரூபாய் விலைக்குத் தள்ளிவிட்டிருந்தார்.

பஸ் புறப்பட்டது. திருமதி பார்வியே முகத்தில் ஒரே ஆனந்தம். "பார்த்தீர்களா? இந்த வொண்டர்புல் சங்குகளை? லார்ட் கணேசாவுக்கு மிகவும் பிடித்தமானது" என்று அவர் ஆரம்பித்ததும் எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவர் ஆங்கிலத்தில் தான் பேசினார்.

"இங்கே கொடுங்கள், பார்க்கலாம் !" என்றேன்.

"நோ....! நீங்கள் புகை பிடிக்காதவர் என்று தெரிந்தால்தான் உங்களைத் தொட அனுமதிப்பேன். இது பவித்திரமானது. பூஜைக்கு உபயோகப்படுத்த வேண்டியது" என்றார். நான் புகை பிடிப்பவனல்ல என்ற உறுதிமொழி அளித்து அதை வாங்கிப் பார்த்தேன்.

"நீங்கள் எப்படி இதைப் பூஜைக்கு உபயோகப்படுத்துவீர்கள்? லார்ட் கணேசாவை நீங்கள் எப்படித் தெய்வமாகத் தேர்ந்தெடுத்தீர்கள்?" என்றேன்.

"வாட் !.... இந்தச் சங்கு அமைப்பே லார்ட் கணேஷ் மாதிரி இல்லையா?... போகட்டும். உங்களுக்கு சம்ஸ்கிருதம் தெரியுமா?" என்றார். தெரியும் என்பதற்கு அறிகுறியாகத் தலையை ஆட்டினேன். அவ்வளவு தான். மடமடவென்று விநாயக தோத்திரத்தை வடமொழியில் பொழிந்து தள்ளினார். கணேச பூஜையும் செய்வாராம்.

அர்கேலியா டி. பார்வியே ஸ்பானிஷ் மொழியில் கலைக் களஞ்சியம் தயாரிப்பதில் ஈடுபட்டிருக்கிறார். அதற்காகத் தென்னிந்திய ஆழ்வார்களைப் பற்றி ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறாராம். தென்னிந்திய கலாசாரம் அவரை வெகுவாகக் கவர்ந்துவிட்டதாம். இவருக்குத் தமிழ் எழுதவோ பேசவோ வராது. ஆனால் தமிழ் மக்களை நன்கு புரிந்து கொண்டிருக்கிறார்.

இல்லாவிடில், அவருடைய பெண் மீர்டா பார்வியேயைச் சில ஆண்டுகளுக்குமுன் அடையாறு கலாக்ஷேத்திரத்திற்குப் பரத நாட்டியம் பயில அனுப்பியிருப்பாரா?

ஸ்பானிய மொழியில் இந்த அம்மையாரின் முழுப் பெயரையும் எழுத வேண்டுமானால் ஐந்தாறு வரிகளின் நீளத்தை எட்டும். ஒரு சந்தர்ப்பத்தில் கெய்ரோ நகர் ஹோட்டலில் இவர் முழுப் பெயரையும் எழுதிப் பதிவு செய்து கொண்டபோது, இவருடன் பல நபர்கள் வந்திருக்கிறார்களாக்கும் என்று நினைத்து நான்கு அறைகள் ஒதுக்கினார்களாம். இவர் இப்போது பாரதத்துக்கு மூன்றாவது தடவையாக வந்திருக்கிறார்.

இந்த அம்மையார் எப்போதும் கழுத்தில் அணிந்திருப்பது சாதாரண பளிங்குக் கல் மாலையல்ல! அசல் துளசி மணி மாலை! – மேனு

படங்கள்: **விசுவநாதன்**



# பாதுகாப்புக் கண்காட்சி

'மூர்த்தி சிறிதானாலும் கீர்த்தி பெரிது' என்பார்கள். 1965ம் வருஷம் பாகிஸ்தான் போரில் இந்தியாவுக்கு மாபெரும் வெற்றி தேடித் தந்ததில் 'நாட்' விமானங்களுக்குப் பெரும் பங்கு உண்டு. பாகிஸ்தானின் மிகப் பெரிய ஸாபர் விமானங்களையும் சுட்டு வீழ்த்தின. 'ஸாபர் கொல்லி' என்ற புகழைப் பெற்று விட்டது நாட். இந்த நாட் விமானங்களை பெங்களூர் ஏரோநாட்டிக்ஸ் ஸ்தாபனம் தயாரித்தளிக்கிறது என்பது தென்னிந்தியாவுக்கே பெருமை. அந்தச் சிறிய நாட் விமானம் மலையத்தனை சாதனைகளைச் செய்துவிட்டுப் பாதுகாப்புக் கண் காட்சியில் பரம சாது மாதிரி அமர்ந்திருக்கிறது !

இமய மலைப் பிரதேசங்களில் இருபதினாயிரம் அடி உயரத்தில் நம் இந்திய வீரர்கள் சூரிய ஒளியைப் பயன்படுத்தி டிரான்சிஸ்டர் ரேடியோவில் பாட்டுக் கேட்கிறார்கள் என்ற செய்தி திகைக்க வைக்கிறது. இந்தப் பாட்டரி பஞ்ச காலத்தில் பாட்டரி இல்லாமலே சூரிய வெளிச்சத்தினால் இயங்கும் ஸிலிகன் செல் டிரான்ஸிஸ்டர்கள் ரொம்ப வசதி தானே! இந்த டிரான்ஸிஸ்டர்கள் இந்தியாவிலேயே தயாரானவை என்பதும் மகிழ்ச்சி அளிக்கிறது.

நமது முப்படைகளும் பணியாற்றும் முறைகளையெல்லாம் ரயிலில் நடக்கும் பாதுகாப்புக் கண்காட்சிக்கு ஒரு தடவை சென்றால் தெரிந்து கொண்டு விடலாம். ஒரு கல்லில் மூன்று மாங்காய் கணக்குத் தான். ஆனால் ஒன்று: நாலாவது மாங்காய்க்கும் ஆசைப்பட்டு ரயிலில் பிரயாணமும் செய்ய நினைக்கக் கூடாது !

- பி. எஸ். எம்.

# விளையாட்டில் வீராங்கனை

## அக்கா ரோஸம்மா பற்றி அக்னஸ் :

"என் அக்கா படித்தது பி. யு. சி. கோட்டயத்தில் உள்ள செயின்ட் தாமஸ் கல்லூரியில்! சிறு வயதிலேயே அவள் மனத்திலே விளையாட்டுக் கலைகள் இடம் பிடித்துக் கொண்டு விட்டன. பரீட்சை என்ருல் அவளுக்கு எட்டிக்காய்! லாங் ஜம்ப் ஹர்டில்ஸ், ஹை ஜம்ப் என்று விளையாட்டு மைதானத்தைக் கட்டிக் கொண்டு பயிற்சியில் மூழ்கியிருப்பாள். பி. யு. சி. பரீட்சை அவளது பராமுகத்தைக் கண்டு கோபித்துக் கொண்டு பெயிலைக் கொடுத்து விட்டது! விட்டாளா, அதை! ஆசிரியை ஆகி அதன் கொட்டத்தை அடக்க நினைத்தாள்! திருவனந்தபுரம் உடல் பயிற்சிக் கல்லூரியில் உடல் பயிற்சி ஆசிரியைப் பயிற்சிக்கான வகுப்பில் ஒரு வருஷம் சேர்ந்து படித்தாள். ஒரு வருஷம் படிப்பு முடிந்ததும் என் அக்கா ரோஸம்மா ஆசிரியை ஆகியிருப்பாள் என்று தானே நினைக்கிறீர்கள்? இல்லை, அவள் விளையாட்டுத் திறமையைக் கண்டு திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ்தான் இழுத்துப் போய்த் தன் தலைமைக் காரியாலயத்தில் வேலைக்கு அமர்த்தி விட்டதே!

என் அக்கா ரோஸம்மா 1963ம் வருஷம் தேசிய விளையாட்டுப் போட்டிகளில் கலந்து கொண்டாள். தேசிய வீராங்கனையாக இவளுக்குக் கடும் போட்டி! லீலாபோல் லாங் ஜம்பில் கடைசிவரை இவளைப் பரீட்சித்து வந்தாள். கடைசியில் என் அக்காவுக்கே வெற்றி; தேசிய வீராங்கனைப் பட்டம். 'பெண்டாத்லின்' சாம்பியன் என் அக்கா. தூரம் தாண்டல், உயரம் தாண்டல், —

## பாய்வதிலே பாஸ் பரீட்சையிலே....?

ஹர்டில்ஸ், குண்டு வீச்சு, இருநூறு மீட்டர் ஓட்டப் பந்தயம் ஆகிய ஐந்து போட்டிப் பரீட்சைகளிலும் யார் அதிக மார்க்கு வாங்குகிருர்களோ, அவர்களுக்குத்தான் அந்தச் சாம்பியன் பட்டம்! என் அக்கா இந்தப் பரீட்சைகளிலே எல்லாம் அதிக மார்க்கு. அகில ரயில்வே போட்டிப் பந்தயங்களிலே என் அக்கா தூரம் தாண்டலில் மேற்கு வங்காள ஆட்டக்காரி ரூபிநந்தியைத் தோல்வியடையச் செய்தது மறக்க முடியாத நிகழ்ச்சி! என் அக்காவுக்கு மலையாளப் பாட்டுக்களும், ஹிந்திப் பாட்டுக்களும் பாடுவதென்ருல் அதிகப் பிரியம்!"

இந்தச் சமயத்தில் அங்கு வந்த விளையாட்டு விமரிசகர் ஸி.எப். டுயர், "ரோஸம்மா விளையாட்டுப் பந்தயங்களில் ஆல்ரௌண்டர். 1967ம் வருஷம் தூரம் தாண்டலில் ஒரு புதிய ரிக்கார்ட் ஏற்படுத்தியிருக்கிருள்! இந்திய — ஜெர்மன் விளையாட்டுப் போட்டிகளிலும் ரோஸம்மா கலந்து கொண்டிருக்கிருள். அவளுக்கு ஹாக்கி, வாலிபால் விளையாட்டுக்களும் தெரியும். 1968 தேசியப் பந்தயத்திலும் வெற்றி அவளுக்கே!" என்று நேர்முக வர்ணனையை ரேடியோவில் வழங்குவது மாதிரி தந்தார்.



ரோஸம்மா

## அக்னஸ் பற்றி வீராங்கனை ரோஸம்மா

"இவள் என் தங்கை அக்னஸ். பி.யு.சி. பரீட்சை ரிஸல்ட் வந்ததும் என்ன சொன்னுள் தெரியுமா? 'அக்கா! நானும் உன் கோஷ்டியில் சேர்ந்து விட்டேன். எனக்கும் பி.யு.சி. பெயில்! உன்னைப் போல் விளையாட்டுப் பந்தயங்களில் நானும் ஈடுபடப் போகிறேன்!' என்று அடம் பிடித்து விளையாட்டு மைதானமே கதியாகக் கிடக்கத் தொடங்கினுள். சென்னை தேசியப் போட்டிகளில் நானூறு மீட்டர், எண்ணூறு மீட்டர் ஓட்டப் பந்தயங்களில் கலந்து கொள்கிருள்!"

"போதும், நிறுத்து அக்கா! நானும் தேசிய வீராங்கனையானப்புறம் என்னைப் பற்றி விவரமாகச் சொல்லலாம்!" என்று கூறிவிட்டுப் பயிற்சியில் ஈடுபட ஓட்டம் பிடித்தாள் அக்னஸ்!

— குண்டுமணி


அக்னஸ்

அந்தக் கோவிலின் முதல் கோபுரத்தைத் தாண்டிச் சென்று வான் முகட்டைத் தொட்டுக் கொண்டு நிற்கும் கோபுரத்தையும், ராட்சஸப் பிறவியாய் உருவாகியிருக்கும் நந்தியையும் விளையாட்டு மைதானங்களை நினைவூட்டும் பிராகாரங்களையும் கண்டதுமே நமக்குப் பிரமிப்புத் தட்டுகிறது! அந்த உணர்வின் வெளியீடாக, 'அப்பா! எவ்வளவு பெரிய கோவில்!' என்று பிறர் செவியில் படும்படியே சொல்லி விடுகிறோம்.

''ஆமாம், சார். இதுக்குப் பெயரே பெரிய கோவில் தான்!''

ஒத்துப் பாடுகிறவரைத் திரும்பிப் பார்க்கிறோம். முதுமையான மெலிந்த சரீரம். கொத்திக் கொண்டு போகத் துடிக்கும் கண்கள். அத்துடன் ''தயவுசெய்து உங்களுக்கு உதவ அனுமதி தாருங்கள்'' என்ற ஒரு வேண்டல். கையில் கருட்டிய காகிதம் செய்தித் தாளோ, வார இதழோ?

''நீர் யார்?'' என்று நாம் கேட்க வேண்டியதில்லை. அவர் பக்கம் செலுத்திய பார்வையே போதும்.

''நான்தான் சார், கைடு. பேர் நடேசன்.....அதோ, கோபுரத்தைப் பார்த்தீர்களா? ரொம்பப் பெரிசு. டாலஸ்ட் இன் இண்டியா. இருநூத்தி ஐம்பது அடி. நிழல் விழாத கோபுரம். வருஷத்துக்கு ரெண்டு தடவை — மார்ச், இருபத்தியொண்ணு, செப்டம்பர் இருபத்தி மூணு — அதாவது அயன காலங்களிலே, ஒரு ரெண்டு நிமிஷத்துக்கு நிழல் விழும்...''

நமக்கு ஒரு திகைப்பு. 'விளக்கங்கள் கூறும்படி நாம் அவரைக் கேட்டுக் கொள்ள வில்லையே!' என்ற வியப்பு. 'கடைசியில் என்ன கேட்பாரோ?' என்ற ஐயம். கோபுரத்

**திரு நடேசனுடைய கற்பனை வளத்தை வியக்காமல் இருக்க முடியாது: ஆனால் அவரிடமிருந்து எப்படிப்பட்ட உண்மைகளும் வெளியாகின்றன!**



''நான்தான் கைடு'' - நடேசன்

# நான் ஒரு கைடு

தைப் பார்க்காமல் அவர் முகத்தையே பார்த்துக் கொண்டிருப்பதை நடேசன் கவனித்து விடுகிறார். நம் மனத்தில் ஓடும் எண்ண அலைகள் அவருக்குப் புரிந்து விடுகின்றன. எத்தனை ஆண்டுகள் அனுபவம்! ''பத்து வருஷங்களுக்கு மேலே ஆச்சு, சார் நான் இந்தப் பெரிய கோவிலுக்குள்ளே புகுந்து. என் சொந்த ஊர் இதுவேதான். தஞ்சாவூர்....அதுக்கு முன்னாலே பரோடா ரயில்வேயில் ஸ்டோர்ஸ் இலாகாவில் வேலை செய்தேன். என்னமோ விட்டுப்பிட்டு வந்திட்டேன்....''

''உமக்குக் கட்டணம்...?''

''அட, என்ன சார், நீங்க!...மனசார நீங்க கொடுக்கிறதை வாங்கிக்க வேண்டியதுதான்!....''

'பிக் புல் ஆஃப் ஒன் ஸ்டோன்.'

நடேசன் இப்படிச் சொல்கிறாரே தவிர, எட்டணுவுக்குக் குறைந்து யாருமே கொடுத்ததில்லையாம். அப்படிக் கொடுப்பவர்கள்கூட, தமிழ் நாட்டினர்தான். இவரும் வேறு கிராக்கி இல்லாவிட்டால்தான் தமிழ் பேசுகிறவர்களுக்கு வழிகாட்டப் போவாராம். ''நம்ப பக்கத்து ஜனங்களுக்குத்தான் இந்தக் கோவிலைப் பத்தி



நல்லாத் தெரியுமே? நான் என்ன சொல்லக் கிடக்கு?''

வட நாட்டிலிருந்தும், வெளி நாடுகளிலிருந்தும் தஞ்சைப் பெரிய கோவிலைக் காண்பதற்காக வந்து கொண்டேயிருக்கிறார்கள். நடேசன் அவர்களையும் சமாளிக்கிறார். பரோடாவில் வேலை பார்த்திருப்பதால், மராத்தி, குஜராத்தி, ஹிந்தி ஆகிய மொழிகளில் சிறிதளவு பயிற்சி உண்டு. எனவே, இம்

மூன்றையும் தொகுத்துக் கதம்ப மொழியாகத் தமக்கென்று ஒரு பாஷையை உருவாக்கியிருக்கிறார் கைடு நடேசன். இந்தக் கதம்ப மொழி, அவருக்குக் கை கொடுத்து வருகிறது. பம்பாய், கல்கத்தா, கௌஹாத்தி, தில்லி பாட்னு, ஸ்ரீநகர், ஜெயப்பூர் ஆகிய எந்தப் பிரதேசத்துப் பயணியாக இருந்தாலும் சரி, நடேசனின் கதம்ப மொழிக்குக் கட்டுப்பட்டே ஆக வேண்டும்.

''இஸ் மந்திர் கா விசேஷ் ஹை.... ஏக் கே பத்தர் விமான்... பகூத் ஊஞ்ச் ஹை...யஹ் கார்த்திக் மந்திர் ஹை... ஸப் காலா பத்தர்... மோட நந்தீ ஹை.பாரஹ்புட்.''

அமெரிக்கா இங்கிலாந்து ஆகிய நாடுகளிலிருந்து வரும் யாத்திரீகர்களிடம் ஆங்கிலத்தில் பேசுகிறார் நடேசன்.

## டி. எஸ். கே.



''திஸ் இஸ் டிரவிடியன் ஸ்டைல் ஸ்கொயர் டெம்பிள்....விமான் எலோன் ஆஃப் ஒன் ஸ்டோன்.... திஸ் இஸ் ஸாடர்ன்..... தட் இஸ் க்ரோ.... திஸ் இஸ் ஸ்டுபா, புத்திஸ்ட் எம்ப்ளம்.... ஸீ ஹியர், டான்ஸிங் போஸ் ஆஃப் மேல்ஸ்.... த்வாரபால் ஆஃப் ஒன் ஸ்டோன்.... யூ ஸீ, பிக்கஸ்ட் ஸ்டாண்டிங் கணேசா அட் கஜுூரா ஹோ....''

இந்த மொழியைக் கேட்டு, நம் சிற்பக் கலையையும் கலாசாரத்தையும் புரிந்து கொண்டுவிட்டதாகப் பாவனை செய்யும் வெளிநாட்டார் யாரும் — நாம் பொதுவாக எண்ணிக் கொண்டிருப்பதைப் போல — தாராளமாகப் பணத்தை அள்ளிக் கொடுத்து விடுவதில்லையாம். நியாயமான தொகைதான் கொடுப்பார்களாம். அவர்கள் எல்லோரும் விவரப் புத்தகம் இல்லாமல் வருவதில்லை. வழிகாட்டி, ஒரு பேச்சுத் துணைக்கு.

நடேசன், மிக அதிகமாக ஒருவரிடமிருந்து பெற்ற தொகை ரூபாய் இருபத்தைந்து. அமெரிக்கத் தகவல் இலாகாவைச் சேர்ந்த ஒருவர் — கையில் பல காமிராக்களுடன் வந்தவர் — கொடுத்தாராம்.



''கோபுரத்துக்குத்தான் மதிப்பு; சாமிக்கு இல்லே!''

தஞ்சைக் கோவிலைப் பற்றிய விவரங்கள் உள்ள புத்தகங்களை நடேசன் படித்திருக்கிறார். தஞ்சை மன்னர்கள் சரித்திரம், சோழர் சரித்திரம் எல்லாம் தலைகீழ்ப் பாடம். (நிஜமாகவே தலைகீழ்ப் பாடம்தான். சதாசிவப்பண்டாரத்தாரும் நீலகண்ட சாஸ்திரியாரும் நமது நடேசனின் வரலாற்று ஆராய்ச்சிகளைக் கேட்டால், கதிகலங்கிப் போவார்கள்!) அதுவும், ''மகாராஷ்டிரா டைனஸ்டியைப் பத்தி நான் நிறையத் தெரிஞ்சு வச்சிருக்கேன், ஸார்!'' என்கிறபோது, அவருடைய கற்பனை வளத்தை வியக்காமல் இருக்க முடியாது!

ஆனால் அவரிடமிருந்து எப்படிப்பட்ட உண்மைகளும் வெளியாகின்றன?

''....சார்! இந்தக் கோவில்லே, கோபுரத்துக்குத்தான் மதிப்பு. லிங்கத்துக்குஇல்லே. ஏன் சார், கோபுரத்துக்காக லிங்கமா? இல்லே, லிங்கத்துக்காகக் கோபுரமா?''

''இங்கே வர்றவங்களிலே முக்கால்வாசிப் பேர், பெருமைக்காகத்தான் வர்றாங்க! 'அடாடா! தஞ்சாவூர்க் கோயிலா! என்ன உசரம்!' என்று வெறுமனே புகழறத்துக்காகத்தான் வர்றாங்க. வெள்ளைக்காரங்களுக்கு உள்ள ரஸனை, நமக்கு இல்லே, ஸார்...''

நடேசன் நம்மிடம் பேசிக் கொண்டிருக்கும் போதே, அவருடைய பார்வை கோபுர வாசலுக்கு அடிக்கடி பாய்கிறது. உறுமீனுக்காகத் தவம் செய்யும் கொக்குப் பார்வை.

''இதோ வந்துட்டேன், சார்!'' என்று சொல்லி விட்டுப் பரபரப்புடன் நடக்கிறார் நடேசன். நுழை வாயிலில், எலுமிச்சம் பழ நிறத்துக்கு ஐந்தாறு உருவங்கள். கோட்டும் கால் சராயும் அணிந்த உருவங்கள் மூன்று; மற்றவை முழங்காலுக்குக் கீழும், தோள் பட்டைக்கு மேலும் வெண்ணெயால் செய்யப்பட்டவை.

''...திஸ் இஸ் இ டாலஸ்ட் டெம்பிள்...ட்ரவிடியன் ஸ்டைல். பிக்கஸ்ட் புல் ஆஃப் ஒன் ஸ்டோன்...''

ஓ! அது நடேசன்!

உடல் வளர்ச்சிக்கு மரக்கறி உணவு சிறந்ததா? அல்லது புலால் உணவு உகந்ததா? இது பற்றித் திருநெல்வேலி மருத்துவக் கல்லூரி அறுவைச் சிகிச்சை 'ரீடர்' டாக்டர் ஓ. தேவராஜன் எம். எஸ். அவர்களின் கருத்தினைக் கேட்டோம். மரக்கறி உணவைவிடப் புலால் உணவே பல வகைகளிலும் சிறந்தது என்பதைத் தக்க சான்றுகளுடன் அவர் விளக்குவதைப் பாருங்கள் : ★

# புரதச்சத்துக்குப் புலால் உணவு

"சீரிய உடல் வளர்ச்சிக்குப் புரதச் சத்துக்கள், கொழுப்பு, கார்போஹைட்ரேட், உலோகச் சத்துக்கள், விடமின் சத்துக்கள் இவை இன்றியமையாதவையாகும். கார்போஹைட்ரேட், சர்க்கரை உருளைக் கிழங்கு, அரிசி இவைகளிலிருந்து கிடைக்கும் சத்துப் பொருள். புரதச் சத்துக்கள் பருப்பு வகைகளிலிருந்தும் இறைச்சியினின்றும் கிடைக்கின்றன. அதேபோல் கொழுப்புச் சத்தும் தாவர எண்ணெய்களிலிருந்தும், விலங்குகள், மீன்களிலிருந்தும் கிடைக்கின்றது. ஆனால் ஒரு வேறுபாடு. தாவரப் பொருள்களிலிருந்து கிடைக்கும் இச்சத்துப் பொருட்கள் தரத்தில் குறைந்தவை. இறைச்சியினின்று கிடைக்கும் சத்துப் பொருட்கள் உடலுக்கு அதிக ஊட்டம் அளிப்பவை."

"அப்படியென்றால், தாவரங்கள் அளிக்கும் சத்துப் பொருட்களை அதிக அளவில் உட்கொண்டு புலாலை ஒதுக்கிவிடலாம் அல்லவா ?"

"நியாயமான கேள்விதான். உடலுறுப்புக்களின் இயக்கத்தினால் மிகுதியான புரதச் சத்து அழிந்துபடுகின்றது. இவ்விதம் செலவாகும் சத்துக்களை ஈடு செய்யவும், மேற்கொண்டு வளர்ச்சிக்குத் தேவையான சத்துக்களை அளிக்கவும் மனிதன் மிகுதியான புரதச் சத்துக்களை உட்கொள்ள வேண்டும். வளரும் குழந்தைகளுக்கு அதிகமான புரதச் சத்துக்கள் தேவைப்படுகின்றன. நோய்வாய்ப்பட்டவர்களின் உடல் மீண்டும் வளர்ச்சி பெறவும் இச்சத்து மிகுதியும் தேவைப்படுகிறது. எனவே, தரத்தில் உயர்ந்த புரதச் சத்து நல்ல பலனை அளிக்குமல்லவா? தாவரப் புரதத்தில் நீர் அதிகம்; நூற்றுக்கு முப்பது வீதம்தான் நல்ல புரதச் சத்து உடலுக்குக் கிடைக்கிறது. ஆனால் புலால் புரதத்தில் நூற்றுக்குத் தொண்ணூறு வீதம் சத்துக் கிடைக்கிறது. இதில் தண்ணீர் பத்து சத வீதமே. அது தவிர, நாம் உட்கொள்ளும் சத்துக்களை உடல் எந்த அளவுக்கு ஏற்றுக் கொள்ளுகிறது என்பதும் முக்கியம். உடலுக்குள் செல்லும் தாவரப் புரதச் சத்துக்களில் 85 சதவிகிதமே உடலால் ஜீரணிக்கப்படுகிறது. ஆனால் புலால் புரதத்தில் 95 சதவிகிதம் சத்துக்களை உடல் ஏற்றுக் கொண்டு விடும். உடலுக்கு அன்றாடத் தேவையான உஷ்ணத்தைப் புலால் உணவு எவ்விதம் அளிக்கிறது, பாருங்கள் :

| | | |
|---|---|---|
| 100 | கிராம் | புரதம் |
| 100 | '' | கொழுப்பு |
| 400 | '' | கார்போஹைட்ரேட் |
| 600 | கிராம் | சத்துக்கள் |
| 400 | கலோரி | உஷ்ணம் |
| 950 | '' | '' |
| 1600 | '' | '' |
| 2950 | கலோரி | உஷ்ணம் |

புலால் உணவு அளிக்கும் சத்துக்கள் 2950 கலோரி உஷ்ணத்தை உடலுக்குத் தருகிறது. இந்த அளவு உஷ்ணத்தைத் தாவர உணவுச் சத்துக்களின் மூலம் மனித உடல் பெற வேண்டுமாயின், புலால் உண்பவனைப் போல் மும்மடங்கு உணவை உட்கொள்ள வேண்டும், தாவர உணவுக்காரன்."

## சுவையான சர்ச்சைகள்



டாக்டரும் அவரது குழந்தைச் செல்வங்களும்

"அப்படியென்றால், சைவ உணவுக்காரன் சாப்பாட்டுராமன் என்று கூறுகிறீர்கள்?"

"அதுதான் பொருள். தாவர உணவுப் பழக்கமுள்ளவர்கள் தரக் குறைவான சத்துக்களை உடலுக்கு அளிப்பதால், புலால் உண்பவர்களைப் போல் மும்மடங்கு புசித்தால்தான் உடல் தேவையான உஷ்ண சக்தியைப் பெற இயலும். டைரோஸின், லைஸின் முதலிய பல்வேறு அமினோ ஆஸிட் வகைகள் புரதத்தில் அடங்கியுள்ளன. புலாலிலிருந்து கிடைக்கும் புரதத்தில்தான் இச்சத்துக்கள் மிகுதியாக உள்ளன. தாவர உணவை நம்பியிருப்பவர்கள் மிகுதியான அளவு உண்ண வேண்டியிருப்பதால், ஜீரண உறுப்புக்களுக்கு வேலை அதிகம். எனவே, அவை விரைவில் நலிந்து விடுவதில் வியப்பில்லை."

''ஒரு சந்தேகம், டாக்டர்! உடல் வளர்ச்சிக்குப் புலால் உணவு சிறந்தது என்று நீங்கள் ஆணித்தரமாகக் கூறுவதை ஏற்றுக் கொண்டாலும், புலால் உண்ணுதவர்களே புத்திசாலிகளாக இருக்கிருர்கள் என்ற கருத்து உண்மைதானு? தாவர உணவு மூளை வளர்ச்சிக்குப் பெரிதும் உதவுகின்றது என்ற நம்பிக்கை சரிதானே?'' என்றேன்.

''அதுதான் இல்லை. மூளையின் வளர்ச்சிக்குத் தேவையான நைட்ரஜன் பெருமளவு புலால் உணவிலிருந்துதான் கிடைக்கிறது. உலகில் சிறந்த விஞ்ஞானிகளையெல்லாம் பாருங்களேன்! ரயில், தந்தி, தொலைபேசி, ஆகாய விமானம், ரேடியோ, அணுசக்தி— இவைகளை யெல்லாம் கண்டுபிடித்தவர்கள் தாவர உணவு உட்கொண்டவர்களா? விலங்குகளையே எடுத்துக் கொள்ளுங்கள். தாவரம் புசிக்கும் ஆடு, மாடுகளைப் போலில்லாமல் மாமிசப் பட்சிணிகளான புலியும் சிங்கமும் எவ்வளவு வலிவுள்ளவையாக இருக்கின்றன? மின்வெட்டும் நேரத்தில் சீறிப் பாயவும் தாக்கவும் செய்கின்ற இவ்விலங்குகளின் உடல் வலிமை தவிர புத்தியின் கூர்மையும் வியப்புக்குரியதல்லவா? முடிவாக ஒன்று கூறுவேன் — நாற்காலியில் உட்கார்ந்தவண்ணம் நாள் முழுதும் பணி புரிகின்றவர்களுக்குப் புலால் உணவு மிகச் சிறந்தது. குறைந்த அளவு உண்டால் போதும். ஜீரண உறுப்புக்களுக்கு வேலை குறைவு. வியர்வை சொட்ட உடலை வருத்தி உழைப்பவர்கள் தனித் தாவர உணவு உட்கொண்டால் பாதகமில்லை. தாவர உணவில் உள்ள மிகுதியான தண்ணீர் வியர்வை மூலம் வெளியேறி விடும். குமாஸ்தாக்கள், எழுத்தாளர்கள் இவர்களுக்கெல்லாம் அந்த வாய்ப்பு இல்லை. புலால் உண்பவர்களுக்கு 'உண்ட களைப்பு' ஏற்படுவதில்லை. சைவ உணவுக்காரர்கள் மிகுதியாகப் புசிக்க வேண்டியிருப்பதால், சாப்பிட்டபின் ஓய்வெடுத்துக் கொள்ள வேண்டும் என்ற உணர்வும் அசதியும் அவர்களுக்கு ஏற்படுகின்றது.''

''புலாலின் சிறப்பினை எடுத்துரைக்கும் நீங்கள்.......''

''ஏன் தயங்குகிறீர்கள்? நானும் புலால் உண்பதுண்டு. என் குடும்பத்தினரும் அப்படியே. என் தந்தையும் அசைவத்தைப் பின் பற்றியவர். ஆனுல், தாயார் சுத்த சைவம். டைபாய்ட் முதலிய நோய்களால் பீடிக்கப் பட்டவர்கள் மீண்டும் பழைய உடல் நலம் பெறுவதற்குப் புலாலில் தயாரான 'சூப்' உணவையே சிபாரிசு செய்கிறேன். உடல் உறுப்புக்கள்—குறிப்பாக, ஜீரண உறுப்புக்கள் அப்போது நலிந்து இருக்குமாதலால் புலால் உணவு நல்ல பலனளிக்கும்'' என்று கூறுகிருர் டாக்டர் தேவராஜன். — பாணன்

**அடுத்த இதழில் திரு ஜி. டி. நாயுடு இதற்குப் பதில் கூறுகிருர்.**

---




''**ஹா!**'' என்ருள் அம்மா. கிட்டத்தட்ட மூர்ச்சையே போட்டு விட்டாள் என்றே சொல்லலாம். ஒன்றுமில்லை, ரேடியோவில், 'பள்ளிக்கூடம் திறக்கும் நாள் 17ந் தேதி வரை தள்ளி வைக்கப்பட்டுள்ளது' என்று அறிவித்ததுதான் காரணம். 'எப்படா பள்ளிக்கூடம் திறக்கும். நிம்மதியாக இருக்கலாம்!' என்று ஏங்கிய அந்த அன்னையை-ஐந்து குழந்தை வால்களின் அன்னையை ஆதரிப்போர் வீட்டில் யாருமில்லை! 'பதினேழாம் தேதியாவது நிச்சயம் திறப்பார்களா?' என்று கேட்டாள், முன்பு மூன்று தள்ளி வைப்புக்களைக் கண்ட அந்தத் தாயார்! அவள் சந்தேகப் பட்டுக் கேட்டது மாதிரியே மீண்டும் காலவரையின்றி ஒத்திவைப்புத்தான்!

☐ ''மாமா! எங்களுக்கு ஜனவரி மாதம் எத்தனை நாள் லீவு தெரியுமா?'' என்று ஆவலுடன் வெளியிடத் துடிக்கிருன் ராஜு.

''வேண்டாம் மாமா, அது ரொம்பக் கஷ்டம். நான் சுலபமாக, எத்தனை நாள் பள்ளிக்கூடம் இருந்தது என்பதை மட்டும் சொல்லிவிடுகிறேன்'' என்கிருன் படுசுட்டி சீதா!

☐ புதுக் காலண்டரில், ஜனவரியில், விடுமுறை நாளுக்கெல்லாம் சிவப்பு வர்ணம் தீட்டினுன் கண்ணன். பென்சில் தீர்ந்து விட்டது!

☐ முன்னேற்றமடைந்த நாடுகளிலும் அமெரிக்காவிலும் வாரம் ஐந்து நாட்கள்தான் வேலை நாட்களாம்!

'இங்கே பாருங்கள், நாம் எவ்வளவு முன்னேறியிருக்கிறோம்! மாதம் ஐந்து நாட்கள் வேலை போதும் என்கிறோமே!' என்கிருர் முன்பு திட்டங்களுக்குப் பிரசாரம் செய்த ஓர் அநுபவஸ்தர்.

☐ ''மாத ஆரம்பத்தில் நிறைய விடுமுறை வருகிறதே என்று சந்தோஷமாகத்தான் இருந்தது!''

''இப்போ என்ன''

''என்னவா? காட்சி என்றும், சினிமா என்றும், எத்தனையோ செலவு! பேசாமல், ஆபீஸ் வேலை இருக்கிறது, வர முடியவில்லை என்று சாக்குச் சொல்லவும் முடியாது!''

''ஐயோ, பாவம்!''

— சிரி - நிவாசன்

# ஓநாய்க் கோட்டை

கதை: வாண்டுமாமா
சித்திரம்: ரமணி..

3




ஆனந்தன் நடத்திச் சென்ற படையிலுள்ளவர்கள் - சுத்த வீரர்களல்ல. திருடர்கள், குற்றவாளிகள், கொலைகாரர்கள், முரடர்கள் ஆகிய சிறைக் கைதிகளைக் கொண்ட கூட்டம் அது. கூட இருந்த வஜ்ரதீர்த்தியோ அவர்களைப் புரட்சி செய்யத் தூண்டிக் கொண்டிருந்தான்...







புரட்சிக்காரன் ஓங்கிய ஈட்டி ஆனந்தனின் மீது பாய்வதற்குள் அவன் முதுகில் மின்னலென அம்பு ஒன்று வந்து பாய்கிறது...




அம்புக்கு உரியவனை ஆனந்தனின் பார்வை தேடிய போது மலை முகட்டிலே வரிசையிட்டு நின்ற உருவங்கள் அவனையே சுட்டெரித்து விடுவது போலப் பார்த்துக் கொண்டிருந்தன...






தொடரும்..



இந்தியாவானாலும் என்ன, ஆஸ்திரேலியாவானால் என்ன? சிறுவர்களின் உற்சாகத்துக்கு அணை போட யாரால் முடியும்? அண்மையில் இரண்டாவது டெஸ்ட் ஆஸ்திரேலியாவில் நடந்தபோது ஸெஞ்சுரி போட்டார் ஜி. சாபல்ஸ். அவ்வளவுதான், சிறுவர் கூட்டம் பிட்சை நோக்கி எடுத்தது ஓட்டம். தங்கள் ஹீரோவைச் சூழ்ந்து கொண்டு பாராட்டினார்கள். முதுகில் தட்டிக் கொடுத்தார்கள்; கை குலுக்கினார்கள்.

அப்போது ஏற்படும் கிளுகிளுப்பு அடடா! அது ஐஸ்கிரீமைவிட ருசியானதல்லவா?

## புரியாத கணக்கும் புரியும்!

பிரபல ரஷ்யப் பத்திரிகைகளான ப்ராவ்தா இஸ்வெஸ்தியா இரண்டையும் மட்டம் தட்டும் வகையில் பரவலாக உலவும் ஒரு ஜோக்:

"பிராவ்தாவில் இஸ்வெஸ்தியா கிடையாது; இஸ்வெஸ்தியாவில் பிராவ்தா கிடையாது!"

இது என்ன ஒன்றும் புரியவில்லையே என்கிறீர்களா?

ருஷ்ய மொழியில் 'ப்ராவ்தா' என்றால் உண்மை எனவும், 'இஸ்வெஸ்தியா' என்றால் செய்தி என்றும் பொருள்.

இப்போது ப்ராவ்தா, இஸ்வெஸ்தியா என்ற சொற்களுக்குப் பதில் உண்மை, செய்தி என்னும் சொற்களைப் போட்டு 'ஜோக்'கைப் படியுங்கள்:

"உண்மையில் செய்தி கிடையாது; செய்தியில் உண்மை கிடையாது" என்பதைப் புரிந்து கொள்வீர்கள்!

—ஜிஷ்ணு

## கா. ந. அண்ணாதுரை அறிஞர் ஜாகிர் ஹுசைன்

அறிஞர் அண்ணாதுரை, டாக்டர் ஜாகிர் ஹுசைன் என்பதற்குப் பதிலாக இப்படித் தவறாகப் போட்டிருக்கிறதோ என்று தலைப்பைப் பார்த்து யாரும் எண்ண வேண்டாம்.





மதுரை பல்கலைக் கழகக் கட்டடத்துக்கு அண்மையில் பாரதக் குடியரசுத் தலைவர் அடிக்கல் நாட்டினரல்லவா? அதற்கான சலவைக் கல் அறிவிப்பிலேயேமேற்கண்டவாறு பெயர்கள் காணப்படுகின்றன.

ஸி. என். ஏ. என்ற அண்ணாவின் ஆங்கில அஞ்சுப் பெயர் காஞ்சீபுரம் நடராஜன் அண்ணாதுரை என்பதன் சுருக்கமாகும்.

—வி. ந. வாசுதேவன்

# லதா! லதா! லதா!




**கா**ரிலிருந்து இறங்கினதும் இறங்காததுமாக, "வெங்கு! இப்படி வாயேன், உன்னிடம் தனியாக ஒரு விஷயம் பேச வேண்டும்!" என்று சொல்லி அழைத்துப் போனார் ஹீரோ பிரபாகர்.

கொஞ்ச நேரம் கழித்து இருவரும் பெரிதாகச் சிரித்துக் கொண்டே செட்டுக்கு வந்து சேர்ந்தார்கள்.

"என்ன வெங்கு, படுகுஷியா இருக்கியே" என்றார் படாதிபதி.

"நம்ம பிரபாகர் இன்றைக்கு என்னுடைய புத்தகத்திலே மேலும் நாலு பக்கத்துக்கு அருமையான விஷயதானம் செய்தார்" என்று கூறிச் சிரித்தான் வெங்கு.

"புத்தகமா? நீயா எழுதறே?"

"ஆமாம், அதைமட்டும் பிரசுரிக்க முடியுமானால் முதல் பதிப்பிலேயே லட்சம் பிரதிகளுக்கு மேலே பிச்சுண்டு போயிடும்! புத்தகத்தின் தலைப்பைக்கூட யோசிச்ச வைச்சுட்டேன். 'நட்சத்திரங்கள் சொன்ன பச்சைக் கதைகள்!'"

"அடப் பாவி!" என்று வாழ்த்திப் படாதிபதி வெங்கு கூறியதை வெகுவாக ரசித்துச் சிரித்தார். மற்றவர்களுக்கும் ஒரே ஆனந்தம்.

சிரிப்பு அடங்குவதற்குள் "ஸார்! ஃபோன்" என்று தகவல் வரவே, "நீங்கள் இருங்க. நான் கேட்டுட்டு வரேன்" என்று படாதிபதியிடம் கூறிச் சென்றான் வெங்கு.

திரும்பி வந்தபோது அவன் முகத்தில் ஈயாடவில்லை. "ஸார்! ரொம்ப டிராஜிக் நியூஸ். நிருபமா தேவிக்கு 'டிஸ்க் ஜாயிண்ட்' விட்டுப் போச்சாம். படுக்கையை விட்டு ஒரு மாதம் எழுந்திருக்கக் கூடாதுன்னு டாக்டர் சொல்லி விட்டாராம்."

உடனே நஷ்டக் கணக்குப் பார்க்க ஆரம்பித்த முதலாளி தலையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்துவிட, டைரக்டர் மட்டும் "என்ன ஜாயின்ட் விட்டுப் போச்சு?" என்று ஆவல் குறுகுறுப்புடன் கேட்டார்.

"அதுதான் சார் முதுகெலும்பினுடைய கீழ்ப் பகுதி. சும்மா இடுப்பைப் போட்டு ஒடி ஒடின்னு ஒடிச்சுக்கிட்டே இருந்தா எப்படி? விட்டுப் போச்சு! டான்ஸ் ஆடறச்சேயும் நடக்கறச்சேயும் பாடறச்சேயும் நிற்கறச்சேயும்கூடக் கடிகாரத்தினுடைய பெண்டுலம் மாதிரி இடுப்பு அசைஞ்சுக்கிட்டே இருந்தா எத்தனை நாளைக்குத் தாங்கும்? டங்குன்னு மெயின் ஸ்பிரிங் ஒடைஞ்சு போச்சு!" என்று விவரித்தான் வெங்கு.

டைரக்டர் படாதிபதியின் நிலையைப் பார்த்து அனுதாபப்பட்டார். "ஒர்ரி பண்ணிக்காதீங்க ஸார்! பிரபாகர் வந்திருக்கிறார். இப்போ போட்டிருக்கிற செட்டை வைச்சுக்கிட்டே படம் எடுத்திடலாம். ஹீரோயின் ஓடிப்போனப்புறம் ஹீரோ அழறான் இல்லையா? அந்தக் காட்சி!"

டைரக்டர் டைலாக் ஃபைலை எடுத்துப் படிக்க ஆரம்பித்தார்.

"லதா, நீ என்ன காரியம் செய்துவிட்டாய்? என்னைத் திருத்த முடியாதென்று நிர்மானித்துக் கடைசியில் நீ என்னை விட்டே ஓடிவிட்டாயா? லதா, இந்த முடிவுக்கு நீ எப்படி வந்தாய்? உன்னைப் பற்றி நான் என்னவெல்லாம் கனவு கண்டு கொண்டிருந்தேன்! லதா! லதா! லதா! நீ எங்கே இருந்தாலும் நான் அங்கே வந்துவிடுவேன்...!"

டைரக்டர் அபிநயங்களோடு வசனத்தைப் படித்துவிட்டு, "இந்த டயலாக் மக்களிடையே பிரமாதப்படும். இதற்கு எதிரொலி 'இபெக்ட்' கொடுத்து அமர்க்களப்படுத்திவிடலாம் என்றிருக்கிறேன். நான் எதிர்பார்க்கிற மாதிரி ஹீரோ இந்தக் கட்டத்திலே பேசி நடிக்கணும். இது ஒன்றை வைத்துக் கொண்டே படத்தை நூறு நாட்கள் ஓட்டிக் காட்டுகிறேனா இல்லையா பாருங்க!" என்று கூறிப் புளகாங்கிதம் அடைந்தார்.

"சார், சார்! மன்னிக்கணும். படம் தானாகவே நூறு நாட்கள் ஓடணும். நாம அதை ஓட்டக்கூடாது!" என்றான் வெள்ளித்திரை வெங்கு.

"போடா போக்கிரி! நீ ஒண்ணும் என் பேச்சுக்கெல்லாம் பாஷ்யம் எழுத வேண்டாம்" என்றார் டைரக்டர்.

"ரைட்! அதை விடுங்க! ஹீரோ சும்மா ஜில்லுன்னு லவ் சீனுக்கு ஏத்த மாதிரி வந்திருக்கிறார். அவர் மேக்கப்பையெல்லாம் கலைச்சு, தலையைக் கலைச்சு அலங்கோலம் பண்ணினாத்தான் சோகக் காட்சிக்குப் பொருத்தமாக இருக்கும். முகத்திலே கொஞ்சம் தாடி, மீசை வேறு ஒட்டியாகணும்."

"நான் அதையெல்லாம் பார்த்துக் கொள்கிறேன். நீ போய் இன்றையக் காட்சிக்கு வேண்டியவைகளையெல்லாம் செட்டிலே தயார் செய்துவை. காட்சி நினைவு இருக்கிறதா? இன்னொரு முறை சொல்லுகிறேன். கவனமாகக் கேட்டுக்கொள். ஹீரோ தன் சகாக்களோடு சேர்ந்துகொண்டு சீட்டாடிக் கெட்டுப் போகிறான். அந்தக்

கெட்ட பழக்கத்தை மாற்ற எவ்வளவோ முயன்று தோற்றுப்போன ஹீரோயின் மனம் உடைந்து எங்கோ போய்விடுகிறாள்...''

''ஸார், ஹீரோயின் வீட்டை விட்டுப் போயிட்டாங்கறதை எப்படி ஹீரோவுக்குத் தெரிவிக்கப் போறீங்க?''

''ஹீரோ ஒரு நாள் ராத்திரி அகாலத்திலே வீட்டுக்கு வருகிறான். அவனைக் கண்டதும் அவன் தாயார் அழுதுகொண்டே 'லதா நம்மை விட்டுப் போய் விட்டாளடா!' என்று கதறுகிறாள். உடனே ஹீரோ, 'அம்மா, நீ என்ன சொல்லுகிறாய்?' என்று மூன்று தடவை கேட்டு அவள் தோள்களைப் பிடித்து உலுக்குகிறான். அவள் உன்னை எவ்வளவு தடவை கெஞ்சிக் கேட்டுக் கொண்டாள்? சீட்டாட்டத்தை விட்டொழியுங்களென்று? நீ கேட்டாயா? அவள் மனம் தாளாமல் வீட்டை விட்டே போய் விட்டாள். நான் எவ்வளவோ எடுத்துச் சொன்னேன்'' என்கிறாள். அவ்வளவுதான். 'லதா, லதா, லதா!' எதிரொலி கிளம்பக் கத்திக் கொண்டே ஹீரோ தலை-மயிரைப் பிடித்துக் கொண்டு ஓடுகிறான். எப்படி நம் ஐடியா?''

''ஊஹூம். இது சரியில்லே, சார். தமிழ்ப் பட ரசிகர்களுக்கு அப்பீல் ஆகாது. இதை விட,'இபெக்டிவ்' வழி ஒண்ணு இருக்கு.''

''சரி. சொல்லேன் பார்க்கலாம்.''

''அதாவது ஹீரோ நள்ளிரவில் வீடு திரும்பியதும் லதாவை வீடு முழுவதும் தேடிவிட்டுக் கடைசியில் மேஜையின் மேல் வைக்கப்பட்டிருக்கும் கடிதத்தை எடுத்துப் பதற்றத்துடன் படிப்பான். 'அத்தான், என்னை மன்னித்துவிடுங்கள்' என்று ஒரு வாக்கியத்தைப் படிப்பான். ஏன்னு ஹீரோவுக்குப் படிக்கத் தெரியும்கிறதைக் காட்டியாகணும் பாருங்க! ஒரு வாக்கியத்தை அவன் படிச்ச பிறகு கடிதத்தின் நடுவில் லதாவின் உருவம் தோன்றி மீதிக் கடிதத்தைக் கூறும். அது தான் நம் சினிமா உலகில் கடைப்பிடிக்கப் பட்டு வரும் ஆகி வந்த வழி. நீங்கள் இதை விட்டு வேறு வழியைக் கடைப்பிடித்தால் மக்களுக்கு ஏமாற்றமாகப் போய்விடும்.''

''அப்படியானும் ஹீரோவினுடைய அம்மாவின் 'ரியேக்ஷ'னுக்கு இடம் இல்லாமல் போய்விடுமே! 'பேத்தாஸ்' குறைஞ்சுடுமே!''

''அதை வேறு விதமாகக் காட்டிடலாம். கடிதத்தின் மூலம் லதாவின் வெளியேற்றத்தைத் தெரிந்துகொண்ட ஹீரோ அம்மாவை அப்புறமாகச் சந்தித்துக் கதறலாமே! அப்படியும் உங்களுக்குப் 'பேத்தாஸ்' போதவில்லையானால் ஹீரோவுடைய அம்மாவையும் அதே காட்சியிலேயே குளோஸ் பண்ணிடுங்க. சோகம் தாங்காமல் சாகட்டும். தாயாரின் டெத் ஸீன் தனியாகவேண்டாம். அதுக்காகப் பிரபாகர் இன்னொரு தடவை அழ வேண்டாம். ஒரே அழுகையாக அழுதால் கிளிஸிரைனாவது மிச்சமாகும்!'' என்றான் வெங்கு.

இதற்குள் நிருபமா தேவி ஒரு மாதம் படுக்கையில் கிடப்பதால் தமக்கு ஏற்படும் நஷ்டத்தைக் கணக்குப் போட்டு முடித்திருந்தார் படாதிபதி. அவருக்குக் கிளிஸிரைன் தேவைப்படவில்லை!



ரொம்பப்
பெரிதும் அல்ல
ரொம்பச்
சிறிதும் அல்ல





# 1½ டன் எடை சாமான் ஏற்றும்

# பார்கோ D-300

சிறிய வண்டிகளிலே பெரிது, பெரிய வண்டிகளின் உழைப்பு, சுருங்கச் சொன்னால் நடுத்தரமான நல்ல வண்டி பார்கோ D-300. அதிகச் சாமான்களை ஏற்றிச் செல்ல அடக்கமான வண்டி பார்கோ D-300. சாலைகளிலே சங்கடமில்லாமல் ஓட்டவும், போக்குவரத்து நெரிசலைச் சுலபமாகச் சமாளிக்கவும் பொருத்தமான வண்டி பார்கோ D-300. பிக் அப்-வான், டெலிவரி வான், ஸ்டேஷன் வாகன், ஆம்புலன்ஸ் ஆகிய எந்த விதத்திலும் உபயோகிக்கலாம். நகரத்திலும் அதன் சுற்றுப்புறங்களிலும் ஆட்களையும் சாமான்களையும் குறைந்த செலவில் ஏற்றிச் செல்ல. இணையற்ற வண்டி பார்கோ D-300.

சக்தி மிக்க 28.35 H.P. பெட்ரோல் என்ஜின் • 3,112 மி.மீ. (123") WB அல்லது 3,366 மி.மீ. (133") WB ஆகிய இரண்டில் விருப்பமானதைத் தேர்ந்தெடுக்கலாம் • சுலபமாகவும் விரைவிலும் ரிப்பேர் செய்ய பானெட் திறப்பு வசதி.

• (பிரீமியர் ஆட்டோமோபைல்ஸ் தயாரிப்பு)

# யாருக்கு அடிமை?

எம். கே. ரங்கசாமி அய்யங்கா

வீட்டின் தலைவி வியாதியின் கொடுமை தாளாமல் அரற்றிக் கொண்டிருந்தாள். அழகிய மலரை உச்சி வெய்யிலில் கிள்ளிப் போட்டதைப் போல அந்த அழகு உடல் வாடிக் கிடந்தது கட்டிலில். வெளுத்த முகம், காய்ந்த உதடுகள், குழி விழுந்த கண்கள், நச்சியான உடல். அந்த நிலையிலும்கூட ஒரு காலத்தில் அவள் அதிரூபவதியாக இருந்தவள் என்பதை யாராலும் சொல்லிவிட முடியும். ஆயாசத்தினால் கண் மூடித் துவண்டு கிடந்த அந்தப் பெண்ணின் அருகே மற்றொரு மங்கை அவளுக்குப் பணிவிடை செய்தபடி இருந்தாள். அழகின் இலக்கணங்கள் என்ன என்று கேட்போருக்கு அவளைச் சுட்டிக் காட்டி விடலாம். அப்படியொரு கட்டான உடல், களையான முகம். ஆனால் எளிமையான தோற்றம்.

''இதைக் குடிக்கிறீர்களா அம்மா?'' என்று கூறியவாறு நோயாளியின் நெற்றியில் இதமாக வருடினாள் பணிவிடை செய்து கொண்டிருந்த பாவை. படுக்கையிலிருந்தவள் தன் மூடிய கண் இமைகளைச் சிரமத்துடன் திறந்தாள். கனிவோடு தன் முகத்தையே நோக்கி நிற்பவளைக் கண்டதும், அவள் இதழ்கள் விரிந்தன. ''நாச்சி! உனக்குத்தான் என்னால் எத்தனை கஷ்டம்?'' என்றாள் ஆயாசத்துடன்.

''எனக்கு எவ்விதக் கஷ்டமும் இல்லையம்மா. தங்களுக்கு இந்தச் சமயத்தில் பணிவிடை செய்யக் கொடுத்து வைத்திருக்கவேண்டாமா? விரைவிலேயே நீங்கள் உடல் தேறி எழுந்து விட்டால் என் கண்ணில் ஒரு காரியத்தையாவது காட்டுவீர்களா?'' என்றாள் நாச்சி என்ற அந்த அழகுப் பதுமை.

நோயாளியிடமிருந்து நீண்டதொரு பெருமூச்சு வெளிப்பட்டது. ''நான் இனிமேல் எங்கே பிழைத்து எழுந்திருக்கப் போகிறேன், அம்மா.''

''ஐயோ, அப்படியெல்லாம் சொல்லாதீர்கள். வைத்தியர் சொல்லி யிருக்கிறார். கட்டாயம் நீங்கள் விரைவிலேயே நடமாடப் போகிறீர்கள்!''

நோயாளி சிரித்தாள், அந்த அசட்டுப் பெண்ணைப் பார்த்துக் கொண்டே.

''என் நோயைப் பற்றி எனக்குத் தெரியாதா, நாச்சி? எனக்குள்ள வேதனையெல்லாம் என் மரணத்தைப் பற்றிக்கூட இல்லை. அவரைத் தனியாகத் தவிக்க விட்டு விட்டுப் போகிறேனே என்ற ஐயம்தான் என்னை இரவு பகலாகக் குடைந்து கொண்டிருக்கிறது'' என்றவளின் மூடிய விழிக் கோடியிலிருந்து நீர் முத்துக்கள் உருண்டு கொண்டிருந்தன.

நாச்சியின் கண்களும் கலங்கின. அவள் மௌனமாகத் தலை குனிந்தபடியே அமர்ந்திருந்தாள்.

''என்னை மணந்து கொண்ட அவருக்கு என்னால் எந்தச் சுகத்தையும் கொடுக்க முடியவில்லை. ஆனாலும் அவருக்கு என் மீதுள்ள அன்புக்கோ எல்லையே இல்லை. என் மரணத்துக்குப் பிறகாவது அவருக்கு வாழ்க்கையில் இன்பம் கிடைக்க வேண்டும், நாச்சி. அதுதான் என் பிரார்த்தனை'' என்று அந்தப் பெண்ணையே, அவள் அழகையே பார்த்துக் கொண்டு பேசினாள் அந்த நோயாளிப் பெண். இரட்டைக் குழந்தைகளைப் பெற்றெடுத்த புண்ணியவதி



அவள். அந்தப் பிரசவமே அவளைப் படுக்கையில் கிடத்தி விட்டது. பக்குவ வயதில் கனக்கு இந்தக் கதி வாய்த்து விட்டதே என் பதை விடத் தன் கணவருக்குத் தன்னுடன் வாழ்க்கை அஸ்தமித்துவிடக் கூடாது என்றே கவலைப்பட்டாள் அவள்.

''அழகும், குணமும், தேக ஆரோக்கியமும் உள்ள ஒரு பெண் அவருக்கு இரண்டாந் தாரமாக வாழ்க்கைப்பட இசைந்தால்தான் என் கவலை தீரும்'' என்றாள் பெருமூச்சுடன்.

''வீணாக ஏனம்மா இந்த உடல்நிலையில் உள்ளத்தையும் வேதனைக்குள்ளாக்கிக்கொள்கிறீர்கள்? உங்கள் கணவரின் நல்ல குணத்துக்கு ஆண்டவன் அவருக்கு எவ்விதக் குறையும் வைக்க மாட்டானம்மா. நீங்கள் குணமாகி எழுந்து விடுவீர்கள்'' என்றாள் நாச்சி.

''அடி, அசட்டுப் பெண்ணே! இந்த ஆசையை இந்த நிலையில் என்னைப் பார்க்கும் நீயுமா வைத்துக் கொண்டிருக்கிறாய்? என் மனத்திலுள்ளபடி ஒரு பெண் இருக்கிறாள். அவருக்கு மறுவாழ்வு அளிக்க. தெரிந்ததா?'' என்றாள் வியாதிக்காரி தன் வாதனையையும் மறந்து மலர்ந்த முகத்துடன்.

''யாரம்மா, அந்தப் பாக்கியவதி? சொல்லுங்கள். நானே அவளை இங்கு அழைத்து வந்து......''

''அவளை அழைத்து வர நீ எங்குமே போக வேண்டாம். அவள் இங்கேயேதான் இருக்கிறாள். அதுவும் என் அருகிலேயேதான்' என்றாள் இரும் மலர.

முகம் சிவக்க நாச்சி, ''என்னம்மா, சொல்கிறீர்கள்?'' என்றாள் குரல் கம்ம.

''என் கணவருக்குத் தகுதியான அந்தப் பெண் நீயேதான் நாச்சி. உன்னையேதான் நான் எண்ணிக் கொண்டிருக்கிறேன்'' என்று கூறினாள்.

நாச்சிக்கு மூச்சே நின்று விடும் போல் ஆகிவிட்டது. ''அம்மா! அவரோ பிராம



ணுத்தமர். நானோ தாசி குலத்தவள். என் மீதுள்ள அன்பினால் நீங்கள் இப்படிக் கற்பனை செய்தாலும் உலகம் இதை ஒப்புக் கொள்ளாதம்மா'' என்றாள்.

இப்போது நாச்சியின் பட்டுப் போன்ற கேசத்தைப் படுக்கையில் கிடந்த அந்தப் பெண் அன்புடன் நீவிக் கொண்டிருந்தாள்.

''அசடே! உன் பெருமை உனக்குத் தெரியாது. உலகம் எப்போதுதான் எதைத்தான் ஒப்புக் கொண்டது? அவரை வேறு யார் மணந்து கொண்டாலும் உன்னைப் போல் அவரது தேவைகளை இத்தனை அக்கறையுடன் கவனிக்க மாட்டார்கள். அதன்பிறகு நீ இங்கு இருக்கவும் முடியாது. உன் அழகிலும் கலையிலும் அசூயை கொண்டு உன்னை இங்கிருந்து விரட்டி விடுவார்கள். என்னையும் இழந்து உன்னையும் பிரிந்து என் குழந்தைகள் தவிக்கும். அதனால்தான் சொல்லுகிறேன், என் கணவர் உனக்குக் கலைகளைப் போதிக்கிறார். அவரிடம் உனக்குப் பக்தியும் மரியாதையும் இருக்கின்றன. ஆகவே, நீ அவரை மணந்து கொள்ளா விட்டாலும், அவருக்கு ஆசை நாயகியாக, என் குழந்தைகளைப் பேணிப் பாதுகாக்கும் செவிலித் தாயாக இங்கேயே இருந்து விடம்மா.''

''அப்படி வாழ்வது தவறு இல்லையாம்மா?'' தவிப்புடன் கேட்டாள் நாச்சி.

''இதில் தவறு ஏதுமில்லை, பெண்ணே! உன் தாயார்கூடத் தனக்கு வித்தை சொல்லிக் கொடுத்தவரையே இப்படித்தான் கணவனாக ஏற்றுக் கொண்டாள். உனக்குத் தெரியாது என்று நினைக்கிறேன். அவர்கூட எங்கள் உறவினர்தான். எங்கள் குடும்பமே ஒரு கலைக் குடும்பம். உன் தாயாருக்கு அவர் சங்கீதம் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தார். இருவரும் உள்ளத்தாலும் ஈடுபாடு கொண்டு விட்டார்கள். உன் தாயாரை அவர் தம் மனைவியாகவே வைத்துக் கொண்டு விட்டார். கடைசிக் காலத்தில் அவருக்குத் தொண்டையில் புண் ஏற்பட்டுப் படுத்த படுக்கையானபோது குடும்பம் ரொம்பச் சிரம தசையில் இருந்தது. அப்போது உன் தாயார் மாணிக்கம், தன் நகைகளையெல்லாம் விற்று அவருக்கு வைத்தியம் பார்த்தாள். உன் தாயார் உத்தமி. பிறப்பினால் தாசியானாலும் பண்பில் உயர்ந்தவள். அதனால்தான் உன்னை எங்கள் குடும்பத்தில் ஒருத்தியாகப் பாவித்து வளர்த்து வருகிறோம்'' என்றாள் மைதிலி என்ற அந்த அம்மாள். அதிகம் பேசியதால் அவளுக்கு இளைப்பு ஏற்பட்டது. அவளை ஆதூரத்துடன் அரவணைத்து உபசரித்தாள் நாச்சி. ''இதற்காக நீங்கள் ஏனம்மா, உங்கள் உடம்பை வருத்திக் கொள்ளுகிறீர்கள்? நீங்கள் வாழத்தான் போகிறீர்கள். அப்படி ஏதாவது இசைகேடாக நடக்குமானால் உங்கள் விருப்பத்தைப் பூர்த்தி செய்கிறேனம்மா. கவலைப் படாமல் கண்ணயருங்கள்'' என்றாள் நாச்சி. மைதிலியம்மாளும் தன் மைவிழிகளை மெல்ல மூடினாள். அவள் சம்மதம் மனத்துக்கு இதமாக இருந்தது.

இன்றைய மகாபலிபுரம் செல்லும் வழியில் திருவிடந்தை என்று ஒரு வைணவ ஸ்தலம். அந்த ஊரின் சந்நிதித் தெருவில் உள்ள ஒரு வீட்டினுள்ளேதான் மேலே குறிப்பிட்ட சம்பாஷணை நடந்தது. திருவிடந்தையில் வராஹப் பெருமான் லக்ஷ்மிதேவியைத் தமது இடப் பக்கத்தில் தாங்கியபடி காட்சி தருவதால் இந்த ஊருக்கு இப்படிப் பெயர் ஏற்பட்டது. இந்தத் திருக்கோயிலில் உள்ள மூர்த்திக்கு நித்திய கல்யாணஸ்வாமி என்று பெயர். தாயார் கோமளவல்லி நாச்சியார். திருமங்கையாழ்வாரால் பாடல் பெற்ற ஸ்தலம் இது. எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னே இந்த ஊர் மிகப் பிரகாசமாக விளங்கி வந்தது. இதற்கு அசுரகுல கால நல்லூர் என்று மற்றொரு பெயரும் உண்டு.

திருவிடந்தை சந்நிதித் தெருவில் உள்ள அந்த வீடு ஒரு கலைக்கூடம். கம்பீரமாக உயர்ந்து விளங்கிய அகன் நீண்ட பெரிய திண்ணையில் ஒரு கலைப் பள்ளியையே நடத்தி வந்தார் கல்யாணராமன் என்ற கலைஞர். சங்கீதம், நடனம், வாத்திய இசை இவைகளில் வல்லுநர் அவர். அவருக்கு இல்லக் கிழத்தியாக வாய்த்த மைதிலியும் கலைகளிலே கரை கண்டவள். இவ்விருவரும் வடமொழியிலும் பிரபந்தத்திலும், நாட்டியக் கலையிலும் வல்லவர்கள். மைதிலிக்கு இனிய சாரீரம். கேட்போர் மெய்ம் மறந்து போகும்படி பாடக்கூடியவள்.

தேவதாசியான மாணிக்கத்தின் மகள் நாச்சி சிறு வயதுமுதலே கல்யாணராமன் குடும்பத்துடன் வாழ்ந்து வளர்ந்து வருபவள். அவளது கொடி போன்ற உருவத்துக்கு நாட்டியக் கலை அபாரமான அழகுடன் விளங்கும் என்று கலியாணராமன் அவளுக்கு நடனம் கற்று வைத்தார். பருவ வயது வந்ததும் அந்தக் கலையில் பூரண தேர்ச்சி பெற்று விட்டாள் நாச்சி. ஆனால் அரங்கேற்றி ஆடி அதனால் பிழைக்க விரும்பவில்லை அந்த வடிவழகி. ஆண்டவனுக்குத் தன் கலையை அர்ப்பணிப்பதிலும் குருநாதரின் வீட்டில் அவருக்குத் தொண்டு செய்வதிலும் குருபத்தினி மைதிலியின் இனிய தோழியாக இருப்பதிலுமே மன நிறைவு கண்டு வாழ்ந்து வந்தாள்.

இந்த நிலையில்தான் மைதிலி இரட்டைக் குழந்தைகளைப் பெற்றுப் படுத்த படுக்கையானாள். இரு குழந்தைகளை மைதிலி பெற்றாளே தவிர, அவைகளை வளர்க்கும் பொறுப்பை நாச்சியேதான் ஏற்றுக் கொண்டாள். மைதிலி பயந்தது போலவே அவள் முடிவும் இருந்தது. இரட்டைக் குழந்தைகளை நாச்சியின் பொறுப்பில் என்றென்றும் விட்டு விட்டு இறைவன் திருவடிகளை அடைந்துவிட்டாள். கலைக்கூடம் சோகக் கூடமாகியது. மனைவியைப் பிரிந்த துக்கத்திலிருந்து விடுபடக் கல்யாணராமனுக்கு இரண்டு மாதங்கள் ஆயின. நாச்சிக்கும் தன் உற்ற தோழியைப் பிரிந்த வேதனை தாங்க முடியாததாக இருந்தது. ஆனால் கல்யாணராமனையும் குழந்தைகளையும் கவனிக்கும் கடமையிலிருந்து அவள் தவறவில்லை. அத்துடன் கோயில் பணியையும் மறந்து விடவில்லை.

ஆடையணி அலங்காரம் ஏதுமின்றி அவள் கோயிலுக்குச் சென்றாலும் அவளது இயற்கை

அழகு எல்லாரையும் ஆகர்ஷிக்கும். தாசி குல மங்கையாதலால் ஊரில் இருக்கும் காளை கள் அவள் அழகில் மயங்கினார்கள். வம்பு செய்யவும் துணிந்தார்கள்.

ஒரு நாள் நாச்சி புஷ்கரணியில் நீராடி விட்டு ஈர உடையுடன் வீடு திரும்பிக் கொண்டிருந்தாள். அப்போது அவள் பருவ அழகு பன்மடங்கு பிரகாசித்துக் கொண் டிருந்தது. எவரையும் கவர்ந்து இழுக்கும் அந்த அற்புத அழகிலே ஒரு கயவன் தன்னை மறந் தான். நாச்சியின் கையைப் பற்றி இழுத் தான். இதை எதிர்பாராத நாச்சி அந்த மூர்க்கனிடமிருந்து தன் கையை விடுவித்துக் கொண்டு அவன் கன்னத்தில் ஓங்கி ஓர் அறை கொடுத்தாள். ஆனால் அந்த வெறியன் பதிலுக்கு அவளுடைய பட்டுக் கன்னத்தில் தன் விரல்களால் கீறிக் காயப் படுத்திவிட்டு ஓடி விட்டான்.

சிவந்த கன்னமும் வெம்மையான கண்ணீரு மாக வந்த நாச்சியைக் கண்ட கல்யாண ராமன் பதறிப் போனார். விம்மலிடையே அவள் நடந்ததைக் கூறியபோது சிலையானார் அவர். செய்வதறியா நின்ற அவர் கால் களில் நாச்சி விழுந்து வணங்கினாள். "என்னை உங்கள் உடைமையாக்கிக் கொள்ளுங்கள். மைதிலியம்மாள் தெய்வமாகி விட்டார்கள். அவர்களுக்கு நான் கொடுத்த வாக்கைக் காப்பாற்றுததனால் வந்த விபரீதம் இது" என்று விம்மினாள் நாச்சி. அவளது வெம்மை யான கண்ணீர் கல்யாணராமனின் கால் களைச் சுட்டது. ஆதரவுடன் அவளை அணைத்துத் தூக்கினார். "நாச்சி, உன்னிடம் மைதிலி வாக்குறுதி வாங்கிக் கொண்டது எனக்கும் தெரியும். இன்று முதல் நீ அவள் ஸ்தானத்தை வகிக்கலாம். போய் ஈர ஆடையைக் களைந்து உலர்ந்த வஸ்திரத்தை உடுத்திக் கொண்டு வா" என்றார். உடை மாற்றி வந்த அவளிடம் மைதிலியின் திரு மாங்கல்யத்தையும், பட்டுப் புடவை ஒன்றை யும் கொடுத்தார். அவைகளைப் பெற்றுக் கொண்ட நாச்சியின் கரங்கள் நடுங்கின. கண்கள் கலங்கின. கணவனாகி விட்ட குருவை வணங்கி எழுந்தாள். கல்யாண ராமனின் மனைவியாகிவிட்ட நாச்சிக்கு அதன் பிறகு ஊரில் உபத்திரவம் ஏதுமில்லை. அவர்கள் வாழ்க்கை இனிதே நடந்து வந்தது —கலிங்கராயர் அவ்வூருக்கு விஜயம் செய்யும் வரையில்!

**ம**ன்னர் கலிங்கராயர் திருவிடந்தைத் தலத்துக்கு வருகை தருவதாக இருந்தார். அவரை வரவேற்க ஊர்ப் பிரமுகர்கள் ஒன்று கூடினார்கள். மன்னரைத் தகுந்த முறையில் கௌரவித்துத் தங்கள் நன்றி யைக் காட்டத் திட்டங்கள் வகுக்கப்பட்டன. கலிங்கராயர் நடனக் கலையில் ரொம்ப ஈடுபாடு உள்ளவர். ஆகவே அவரை மகிழ் விக்க ஒரு நாட்டிய நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்வதென்று தீர்மானித்தார்கள் ஊர்ச் சபையினர். நாட்டியம் என்றதும் நாச்சியின் பெயர்தான் எல்லோருடைய நினைவிலும் பளிச்சிட்டது. கோயில் கைங்கரியம் செய் யும் அவளிடம் இதைத் தெரிவித்தபோது, அவள் ஆண்டவனைத் தவிர யார் முன் னிலையிலும் தான் ஆடமாட்டேன் என்று உறுதியாக மறுத்து விட்டாள் அவள். ஆகவே கலைஞர் கல்யாணராமனின் உதவி யினால்தான் அது சாத்தியமென்று அவரை நாடி வந்தார்கள் ஊரார்.

வந்தவர்களைத் திண்ணையில் அமரச் செய்து உபசரித்தார் கல்யாணராமன். அவர்கள் தங்கள் எண்ணத்தை விளக்கி னார்கள். எப்படியாவது நாச்சியை ஆடும்படி செய்ய வேண்டும் என்று மன்றாடினார்கள்.

"அவள் ஆடுவதை நிறுத்தி ஒரு வருஷ மாகிறதே. அரங்கேற்றத்துக்குக்கூட மறுத்து விட்டாள். இந்த நிலையில்..." என்று குழம்பினார் அவர்.

"நாங்கள் என்ன, இதையேவா தொடர்ந்து தொழிலாக வைத்துக் கொள்ளச் சொல் கிறோம்? ஆண்டவனுக்கு அர்ப்பணம் செய் யும் கலை அது. ஆண்டவனுக்கு அடுத்தபடி அரசன். ஆகவே அவர் மகிழ்ந்தால் நமக்கு நன்மை உண்டு. எப்படியாவது அவள் மனத்தை மாற்ற வேண்டும். உங்கள் ஒருவர் வார்த்தைக்குத்தான் அவள் கட்டுப்படுவாள்" என்றார் ஊர்ப் பெரியவர்.

# செய்தியும் சிந்தனையும்

சமீபத்தில் தமிழ்நாட்டில் 'மயிலி' என்ற பெண்ணுக்கு ஒரே பிரசவத்தில் 5 குழந் தைகள் பிறந்ததைப் போலவே ஆஸ்திரேலி யாவில் முதன் முதலாகக் கடந்த 30-12-67 அன்று திருமதி மேரி பிரகாம் என்ற பெண் மணிக்கு 5 குழந்தைகள் பிறந்தன. இவரது கணவர் ஒரு வழக்கறிஞர்.

மயிலிக்குப் பிறந்த 5 குழந்தைகளும் இறந்து விட்டன. திருமதி மேரி பிரகாமின் 5 குழந்தைகளில் கடைசிக் குழந்தை மட்டும் 3-1-68 அன்று இறந்து விட்டது.

— செய்தி (இந்து 6-1-68)

இச் செய்தியைத் தொடர்ந்து உங்கள் சிந்தனைக்கு ஒரு சிறு வேலை....! ஒரே பிரசவத் தில் கீழ்கண்ட மிருகங்கள் எத்தனை குட்டிகள் போடுகின்றன ?



1. பூனை. 2. நாய். 3. பசு. 4. செம்மறி ஆடு. 5. பன்றி. 6. எலி. 7. குதிரை. 8. கண்டெலி. 9. கழுதை.

ஊம்...! எங்கே சிந்திக்கப் போகிறீர்கள்! திருப்புங்கள் 75ம் பக்கத்தை. — **காழி முருகு**

கல்யாணராமன் யோசித்தார். சட்டென்று அவர் மனத்தில் ஒரு வழி தோன்றியது. ''நமது நித்ய கல்யாண ஸ்வாமிக்கு உற்சவம் ஏற்பாடு செய்யுங்கள். பெருமாளை அலங்கரித்து எழுந்தருளப் பண்ணுங்கள். ஆண்டவனின் குணாதிசயங்களைப் போற்றிப் புகழும் வடமொழி சுலோகங்களுக்கு அபிநயம் பிடித்து அவள் பெருமாள் முன்பு நடனமாடுவாள். அந்த இடத்தில் மன்னர் கலிங்கராயரும் இருக்கட்டும். ஆண்டவன், அரசன் இருவருக்குமே அவள் நாட்டிய விருந்து கிடைக்கும்'' என்றார்.

அதன்படியே ஊரார் ஏற்பாடு செய்தனர். மன்னர் வருகை தரும் அன்று கோயிலை அலங்கரித்தார்கள். பெருமாளை எழுந்தருளச் செய்து வசந்த மண்டபத்தில் கொண்டு வந்து வைத்தார்கள். ஸ்வாமியின் பீடத்துக்குக் கீழே கல்யாணராமன் வீற்றிருந்தார். எதிரிலே மன்னர் கலிங்கராயர் உயர்ந்ததோர் ஆசனத்தில் அமர்ந்திருந்தார். இருபுறமும் குடிமக்கள், ஆன்றோர், சான்றோர் யாவரும் அமர்ந்திருந்தனர். நடுவிலே அரங்கம். அதிலே நடனமாட நாச்சி வந்து நின்றாள். சர்வாலங்கார பூஷிதையாக வந்தவள் ஆண்டவனுக்கு வணங்கித் தன் ஆட்டத்தை ஆரம்பித்தாள். அவள் உள்ளத்திலே அரசனின் நினைவே இல்லை. தன்னை மறந்தாள். பக்தி பரவசமாக ஆடினாள். அற்புதமாக பாவம் பிடித்துக் காட்டினாள். பார்த்தவர் பரவசமானார்கள். ஆண்டவன், கணவன் இருவருமே அவள் பார்வையில் தெரிந்தனர். பக்தியும் காதலும் கலந்து அபாரமாக ஆடினாள் நாச்சி.

மன்னர் கலிங்கராயர் நல்ல ரசிகர். அப்படி ஒரு நாட்டியத்தை அவர் அதுவரையில் கண்டதேயில்லை. நாச்சி நாட்டியத்தை முடித்துச் சபைக்கு வணங்கியதும் ஒரு காசுமாலையை அவளுக்கு வெகுமதியாகக் கொடுத்தார். அதைப் பெற்றுக்கொண்ட நாச்சி நேரே தன் குருநாதனும் கணவனுமான கல்யாணராமனிடம் சென்று அவருக்கு அந்த மாலையை அணிவித்து, வணங்கிவிட்டு மறைந்தாள்.

இந்தச் செயல் மன்னரின் சினத்தைக் கிளறிவிட்டது. நல்ல ரசிகரானாலும் அவர் அகம்பாவி. குணமில்லாதவர். தாம் பரிசாக அளித்ததை அவள் உதாசீனம் செய்து யாரோ ஒருவரின் கழுத்திலே போட்டு விட்டுப் போவதாகத்தான் எண்ணினார். வெகுண்டார். மீசை படபடக்கலாயிற்று. மன்னரின் குறிப்புணர்ந்த ஊர் பெரியதனக்காரர் மன்னரின் அருகில் சென்று நிலைமையை விளக்கினார். ''அந்தப் பெண்ணின் குரு அவர். அத்துடன் அவளை ஆதரிக்கும் கணவனும் கூட. ஆகவே தனக்கு இத்தகைய கலைப் பொக்கிஷத்தை அளித்த அவருக்கு மரியாதை செய்யவே அவள் அப்படிச் செய்தாள். தங்களை உதாசீனப்படுத்த அல்ல'' என்று எத்தனையோ சொன்னார். ஆனால் பிடிவாதக்காரரான மன்னர் மறுநாள் அவள் தம் முன் வரவேண்டும் என்று கூறித் தம் இருப்பிடத்துக்குக் கிளம்பி விட்டார்.

ஊராருக்கு ரொம்ப வேதனையாகப் போயிற்று. ஏதோ நினைக்கப் போய் எப்படியோ ஆயிற்றே என்று மனம் நொந்தார்கள். நாட்டியமாட மறுத்தவளைக் கட்டாயப்படுத்தி ஆடச் செய்து கஷ்டத்துக்குள்ளாக்கி விட்டோமே என்று கலங்கினார்கள். மறுநாள் கல்யாணராமனும் நாச்சியும் மன்னனின் இருக்கைக்குப் போனார்கள். அங்கு நாச்சிக்கு ஒரு புது உத்தரவைக் கொடுத்தார்கள் அதிகாரிகள். அரண்மனையில் அரச குமாரிகளுக்கு நடனம் கற்றுத் தர அவள் உடனே மன்னருடன் கிளம்ப வேண்டும் என்பதுதான் அந்த உத்தரவு.

''தாயில்லாக் குழந்தைகளைப் பாதுகாக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிறேன். அது தவிர கோயில் பணிதான் என் முக்கிய கடமை. நாட்டியத்தைக் கொண்டு நான் பொருளீட்ட விரும்பவில்லை. தயவு செய்து தங்கள் விருப்பத்துக்கு இணங்க முடியாமைக்கு என்னை மன்னித்தருள வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டு விடை பெற்றாள் நாச்சி. அவள் மறுப்பு மன்னரின் கோபத்தைக் கிளறியதோடு அவருடைய பிடிவாதத்தையும் வளர்த்தது. 'ஒரு பெண்ணுக்கு இத்தனையா?' என்ற வீம்பும் வீறாப்பும் அவரது அறிவை மழுங்கச் செய்தன. நாச்சியின் மீது காரணமற்ற குற்றங்களைச் சுமத்தி அவள் மீது அபராதம் விதித்து அதை வசூலிக்கும்படி ஆளை அனுப்பினார். நாச்சி தண்டப் பணத்தைத் தர மறுத்துவிடவே, அவளுக்குச் சொந்தமான நிலத்தை ஏலம் போடும்படி ஏற்பாடு செய்தார். ஊரார் தவித்தார்கள். பலர் பலவிதமாக மன்னரின் கோபத்தைத் தணிக்க முயன்றும் பலனில்லை. அதனால் அந்த அநியாயத்தை எதிர்க்க ஊராரும் முடிவு செய்தார்கள். ஏலத்துக்கு வந்த நிலத்தை யாரும் ஏலம் எடுக்க முன்வரவில்லை. இது மன்னருக்குப் பெருத்த அவமானமல்லவா? ஊர்ச் சபையாரை மிரட்டினார். அவர்கள் தங்களிடம் அதை வாங்குவதற்கான பணமில்லை என்று கூறிவிட்டார்கள். அந்த நிலையிலும் கூட மன்னருக்கு விவேகம் ஏற்படவில்லை. கோவிலுக்கு அந்த நிலத்தை வாங்கும்படி கட்டளையிட்டார். வேறு வழியில்லாமல் ஆண்டவனின் திருவாபரணங்களை விற்று அந்தத் தொகையில் நாச்சியின் நிலத்தை வாங்கினார்கள்.

''நான் ஆண்டவனுக்குச் சேவை செய்யும் அடிமை. என்னுடைய உடைமை அவருடையது. நானே இந்த என் நிலத்தைக் கோயிலுக்கு எழுதி வைப்பதாக இருந்தேன். இது வேறு வகையில் கோயிலின் சொத்தாகி விட்டது. எப்படியும் எனக்கு மகிழ்ச்சியே'' என்றாள் நாச்சி.

மன்னர் வெற்றி பெற்றதாகப் போலியாக எண்ணிக் கொண்டு தம் ஊர் போய்ச் சேர்ந்தார்.

ஒரு தேவதாசிக்காக ஊரார் இப்படி நடந்து கொள்ளுவார்களா என்ற ஐயம் எழலாம் இதைப் படிப்பவர்களுக்கு. இது கற்பனைக் கதை அல்ல. இந்தச் சம்பவத்தை விளக்கும் கல்வெட்டு திருவிடந்தைக் கோயிலின் பிராகாரச் சுவரிலே பொறித்திருப்பதை இன்றைக்கும் காணலாம். அந்தக் கல்வெட்டு சொல்லும் கதைதான் இது.



# அல்டாப் அப்பாசாமி

நிமிஷம், நிமிஷமாக மணி ஏறிக் கொண்டிருந்தது. டாக்ஸியில் மீட்டர் ஏறுவதுபோல. இருபது நிமிஷங்கள் ஓடியும் சர்வரைக் காணோம். அவன் பொறுமைக்குப் பெருத்த சோதனை. அதைத் தொடர்ந்து ஒரு யோசனை. சட்டென்று எழுந்தான். அடுத்த மேஜையை அடைந்து, "அண்ணாவுக்கு என்ன வேண்டும்? சார்வாளுக்கு என்ன தேவை? ஏன் பையா! நீ ஏதாவது சொல்லி யிருக்கிறாயா?" என்று மடமடவென்று சர்வருக்கும் மேலாக விசாரித்தான்.

அடுத்தகணமே அந்த அறை அதிர, "போண்டா இரண்டு பிளேட்! தோசை முறுகல் மூன்று! இட்டிலி சாம்பார் இரண்டு பிளேட்!" என்று குரலும் கொடுத்தான்.

கல்லாவில் தூங்கி வழிந்து கொண்டு உட்கார்ந்திருந்தவருக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவர் மிரள மிரள விழித்து விஷயத்தை விளக்கிக் கொள்ளுவதற்கு முன்பாகவே, அவன் அடுப்படியில் நின்றான்.

"ஓய், சரக்கு மாஸ்டர்! இதென்ன தோசைக் கல்லா, ஐஸ் கட்டியா? தள்ளிவிடும் ஐயா நல்லா விறகை உள்ளே! இப்படி மசமசன்னு இருந்தால், எப்பிக்குத் தோசை தயாராகிறது, சப்ளை பண்றது?" என்று இரைந்தான்.

சரக்கு மாஸ்டர் குளிர் காய்ந்து கொண்டிருந்தவர் நிமிர்ந்து பார்த்தார். அலுங்காத நலுங்காத அவன் உடையைக் கண்டதும், முதலாளிக்கு நெருங்கிய உறவுக்காரனாக இருப்பானோ என்று எண்ணினார். "இதோ, ஆயிடுத்து, அண்ணா!" என்று அவர் கூறிய சூட்டோடு தோசைக் கல்லுக்கும் சூடு பிடித்தது. 'சொய்' என்ற சத்தம் 'இதோ தோசை தயார்' என்பதுபோல ஒலித்தது.

"ஏன் ஐயா, சர்வர்! என்ன போண்டாவைத் தடவிக் கொடுத்துக்கிட்டு நிற்கிறே? அதுக்கு வலிக்காது. போடய்யா பிளேட்டுக்கு இரண்டாக!" என்றவன், "லட்சணமாகத்தான் வேலை செய்யறே! இங்கே கொண்டா ஐயா!" என்று பிளேட்டுகளைப் பிடுங்கிக் கொண்டு, தானே வாடிக்கைக்காரர்களுக்கு வழங்கப் போனான்.

"டேய், பையா! டம்ளரில் தண்ணீர் வைக்கப்படாது? நல்லா வேலை செய்றீங்க, அப்பா!" என்றவன் பையனை மட்டும் முறைக்கவில்லை; கல்லாக்காரரையும் ஒரு முறை பார்த்தான். "சாருக்கு ஓவலா, டீயா, காப்பியா?" என்று கேட்ட வாயோடு, "என்ன ஐயா, ஹோட்டல் நடத்தறீங்க? கேட்கிறதைச் சட்டுப்புட்டுனு கொடுக்க வேண்டாம்? — என்ன, குழாயில் தண்ணி வரலியா? கல்லாவிலே கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தா, சும்மா வியாபாரம் நடந்துடுமா? எடுத்து வாய்யா, அருக்கஞ் சட்டித் தண்ணியை!" என்று ஒரு போடு போட்டான்.

கல்லாவை விட்டு இறங்காத முதலாளியே தண்ணீர் தூக்கி வரக் கால்பாவாமல் ஓடினார்.

"நீர் ஏன் ஐயா, இறங்குகிறீர்? காசு வாங்கிப் போடக் கல்லாவில் யார் இருப்பாங்க அப்புறம்? வேலை வாங்கத் தெரியணும் ஐயா, வேலை வாங்கத் தெரியணும்! இங்கே பாருங்க; கஸ்டமர் காலே ஒடிச்சிடுவீங்க போலிருக்கே! சில்லறை வாங்கிப் போட்டுக் கொள்ள இத்தனை நேரமா? உமக்குக் கணக்கு வராதோ? நகரும் ஐயா!" என்றவன் கல்லாப் பெட்டியையும் கவனிக்கத் தொடங்கவே, அழுது வடிந்து கொண்டிருந்த அந்த ஹோட்டலில் வியாபாரம் களை கட்டத் தொடங்கியது. நாளொன்றுக்கு நாலு ரூபாய்க்கு வியாபாரம் நடக்காத அந்த ஹோட்டலில் நானூறு ரூபாய்க்கும் மேல் வியாபாரம் நடக்கத் தொடங்கிவிடும் போலாகி விட்டது.

அப்புறம் அவன் அதிகாரத்தோடு ஒரு மேஜையில் உட்கார்ந்து சிற்றுண்டி அருந்தினான். கல்லாவுக்கருகில் சென்று பில்லுக்குப் பணத்தை எண்ணி வைத்தான். "அதெல்லாம் வேண்டாம், சார்!" என்று கையைப் பிசைந்தார் முதலாளி.

"ஓய்! நீர் என்ன தர்மசத்திரம் நடத்துகிறீரா? அல்லது நான்தான் காசுக்கு வழியத்தவனா? பேசாமல் வாங்கிப் போடும் ஐயா!"

"ஊஹூம். அதுக்கில்லே. இன்னும் ஒரு மாசத்துக்கு முன்னால் நீங்க இங்கே வந்திருந்து இத்தனை ஜபர்தஸ்தும் பண்ணியிருந்தால் ஒரு வேளை நானும் பிழைச்சிண்டிருப்பேன். இந்த ஹோட்டலும் பிழைச்சிண்டிருக்கும். ஆனால் நேத்திக்குத்தான் நஷ்டத்தை இனி தாக்குப்பிடிக்க முடியாதுன்னு மஞ்சள் கடுதாசு தாக்கல் பண்ணினேன். மூடியில் வைக்க அநேகமா இன்னும் இரண்டு நாளிலே கோர்ட் உத்தரவோடு ஆள் வந்துடும்" என்று கூறி அவனைப் பரிதாபமாகப் பார்த்தார் ஹோட்டல் முதலாளி.

அல்டாப் அப்பாசாமிக்குக்கூட இது அதிர்ச்சியாகத்தான் இருந்தது. — குறும்பன்

□□□

உலகம் தோன்றிய நாள் முதலே பூகம்பங்களும் ஏற்பட்டுத்தான் வந்திருக்கின்றன. மனித சரித்திரத்தின் ஆரம்ப காலம் தொட்டு அவனுக்கு நில நடுக்கங்கள் பரிச்சயமான ஒன்றாகவே இருந்து வந்திருக்கிறது. பூகம்பங்கள் பற்றிய புராணக் கதைகள் அனந்தம்.

ஆதிசேஷன்தான் பூமியைத் தன் தலையில் தாங்கிக் கொண்டிருக்கிறான் என்பது ஹிந்துக்களின் நம்பிக்கை. பாரம் தாங்காமல் ஆதிசேஷன் சில சமயங்களில் மெல்ல அசைந்து கொடுக்கும் போது பூகம்பம் ஏற்படுகிறது என்பர்.

கிரேக்க ஞானி அரிஸ்டாட்டில் விஞ்ஞான ரீதியாக இல்லாவிட்டாலும் தர்க்கரீதியாக நில நடுக்கங்களுக்கான காரணத்தைக் கூற முற்பட்டார். இயற்கையின் மூலங்களான நீர் நெருப்பு காற்று ஆகியவை ஒன்றுடன் ஒன்று உறவாடும்போது பூமியினுள்ளே இருக்கும் வெற்றிடங்களுக்குள் காற்றோ வாயுவோ புகுந்து விடுகிறது என்றும் அது மீண்டும் வெளியேற முயலும் போது நில நடுக்கங்கள் ஏற்படுகின்றன என்றும் கூறினார். பூகம்பம் ஏற்படுமுன் மிகவும் புழுக்கமாக இருக்கும் என்ற அவரது கூற்று விஞ்ஞான ரீதியில் சரியாக இல்லாவிடினும் பூகம்பத்துக்கு முன்னால் சூழ்நிலையில் சில மாறுதல்கள் ஏற்படுகின்றன என்பது மட்டும் உண்மை. இந்த மாறுதல்களை மீன்கள் உணர்கின்றன; கடலின் மேல் மட்டத்திலிருந்து ஆழத்துக்கு விரைகின்றன. நாய்களும் பூனைகளும் விபரீதம் நிகழப் போவதை முன்கூட்டியே உணர்ந்து விநோதமான முறையில் நடந்து கொள்வதுண்டு.

நில நடுக்கங்களில் பல ரகங்கள் உண்டு. கொய்னா நகரில் சமீபத்தில் ஏற்பட்டது ஒரு விதம். எரிமலை வெடிப்பதுடன் ஏற்படும்

□□□

★ சமீபத்தில் கொய்னா நகரிலும், சில நாட்களுக்குமுன் ஸிஸிலியிலும் ஏற்பட்ட நில நடுக்கங்களை யாரும் மறந்திருக்க முடியாது. எனினும், சரித்திரத்தில் இடம் பெறும் சில பெரிய பூகம்பங்களைப் பார்க்கையில் இவை இயற்கையின் சீற்றமல்ல, சிறு விளையாட்டு என்றே தோன்றும்.

படம்: கொய்னா நகரில் ஏற்பட்ட பூகம்பத்தின் போது ஒரு விசித்திரக் காட்சி. வீடு முழுவதும் இடிந்து சரிந்து தரைமட்டமாகி விட்ட நிலையிலும் சுப்பிரமணிய சுவாமி படம் மாட்டப்பட்டிருந்த சுவர் மட்டும் நிலைத்திருப்பதையும், படம் சிறிதும் சேதமின்றி இருப்பதையும் காணலாம்.

படம் எடுத்தவர்: ராபின்ஸன்

அனுப்பியவர்: ஏ. முரளீதர்



பூகம்பம் வேறொரு விதம். ஸிஸிலியில் அண்மையில் இத்தகைய நில நடுக்கமே ஏற்பட்டு நூற்றுக்கணக்கானவர்களைப் பலி வாங்கி விட்டது.

நில அதிர்ச்சிகளை அளவிடும் கருவிக்கு ஸிஸ்மோகிராப் என்று பெயர். மின்சாரத்தால் இயங்குவது. இந்தக் கருவி ஒவ்வொரு பூகம்பத்தையும் அது எங்கு ஏற்பட்டாலும், ஏற்பட்ட இடம், அதன் தன்மை, வீரியம் ஆகியவற்றை ஒரு வரைபடமாகத் தந்து விடுகிறது. ஆனால் இக்கருவி பூகம்பம் நேரப் போவதை முன்கூட்டியே உணர்ந்து சொல்லாது.

பூகம்பத்தின் காரணம் என்ன? பூமியின் அடிவாரத்தில் உருவாகும் ஒரு சக்தி அங்கு உள்ள பாறைகளை அசைக்க முற்படுவதால் ஏற்படுகிறது. அப்பாறைகள் இச்சக்தியை எதிர்க்கின்றன. அசைந்து கொடுக்காமல் இருக்க முயலுகின்றன. இந்தப் போராட்டத்துக்கிடையில் நில நடுக்கம் ஏற்படுகிறது. அந்த அதிர்ச்சியை அளவிடவும் முடிகிறது. பூமியின் மேல் மட்டமும் கிடுகிடுத்துப் பொருளும் உயிர்களும் சேதமாகின்றன.

சராசரியாக ஓர் ஆண்டில் உலகில் ஒரு மிகப் பெரிய பூகம்பம், பத்து பெரிய நில நடுக்கங்கள் ஓராயிரம் சேதம் விளைவிக்கும் நில அதிர்ச்சிகள் ஆகியவை நிகழ்கின்றன என்று கணக்கிட்டிருக்கின்றனர். இவை தவிர ஒரு லட்சம் அதிர்ச்சிகளை அவை மிகச் சிறியவையாக இருப்பதால் நாம் உணராமலே விட்டு விடுகிறோம். ஆனால் நில அதிர்ச்சிகளை அளக்கும் ஸிஸ்மோகிராப் கருவிகள் இவற்றையும் பதிவு செய்கின்றன.

மேலே குறிப்பிட்ட மிகப் பெரிய பூகம்பம், மற்ற எல்லா பூகம்பங்களும் சேர்ந்து விளைவிக்கக்கூடிய சேதத்தைவிட அதிகமாக உயிர்களுக்கும், உடைமைகளுக்கும் தீங்கு விளைவிக்கக்கூடியது.

விஞ்ஞானிகள் பூகம்பப் பகுதி என்று பூமியின் சில இடங்களைக் குறிப்பிட்டுள்ளனர். இதனால் மற்ற இடங்களில் பூகம்பங்கள் நிகழாது என்று அர்த்தமல்ல. எனினும், தொண்ணூறு சதவீதம் நிலநடுக்கச் சக்திகள் விஞ்ஞானிகள் குறிப்பிடும் இந்தக் குறிப்பிட்ட பகுதிகளிலேயே உள்ளன எனலாம். இந்துமகாசமுத்திரத்துக்குக்குறுக்கே 'பெல்ட்' அணிவித்தாற்போல் ஒரு பகுதி அமைந்திருக்கிறது. மற்றொரு 'பெல்ட்' மத்திய தரைக் கடலை அணைத்துக் கொண்டு ஆசியாவுக்குக் குறுக்கே செல்கிறது.

நில நடுக்கங்கள் பூமி மட்டத்துக்குச் சற்று கீழே ஏற்படலாம், அல்லது பூமி மட்டத்துக்கு நானூறு மைல் கீழே அதள பாதாளத்தில் நேரலாம்.

சில பயங்கர பூகம்பங்களில் பாறைகள் அருவி போலக் கொட்டும். கட்டடங்களையும் மக்களையும் அழிக்கும். பூகம்பங்கள் பல இடங்களில் இடியிடிபென்று தீப்பற்றிக் கொள்ளச் செய்யும்.

1906ல் ஸான் பிரான்ஸிஸ்கோவில் ஏற்பட்ட நில நடுக்கத்தில் நேர்ந்த நஷ்டம் இருபது மிலியன் டாலர்களாகும். ஆனால் அதே நேரத்தில் தீயினால் ஏற்பட்ட நஷ்டம் நானூறு மிலியன் டாலர்கள்!

இதே போல் 1923ல் யோகோஹாமாவிலும், டோக்கியோவிலும் நேர்ந்த பூகம்பங்களின் போது தொண்ணூற்றைந்து சதவீதம் நஷ்டம் தீப்பற்றி எரிந்ததாலேயே ஏற்பட்டது. டோக்கியோ நகர் பலமான பூகம்பம் ஏற்பட்ட இடத்திலிருந்து ஐம்பது மைல் தொலைவில் இருந்தது. இருப்பினும்கூட நாற்பத்தி எட்டு மணி நேரத்துக்குள் அந்நகரில் மொத்தம் இருநூறு தனித் தனி இடங்களில் தீப்பிடித்துக் கொண்டது!

கொய்னா நகரில் நிலநடுக்கம் ஏற்பட்டபோது உறுமல் ஒலியும் குண்டு வெடிப்பது போன்ற ஓசையும் கேட்டன. இவை பூமியில் ஏற்படும் சலனங்களால் காற்றுப் பாதிக்கப்படும் போது எழுகின்றன. ஸிஸ்மோகிராப் கருவி இரண்டுவித அதிர்ச்சிகளைப் பதிவு செய்தது. ஒன்று தள்ளுகிற சக்தி; மற்றொன்று குலுக்கிப் போடுகிற சக்தி.

உலக சரித்திரத்தில் இடம் பெறும் பெரிய நில நடுக்கங்களில் இந்தியாவில் ஏற்பட்ட பூகம்பங்கள் சிலவும் இடம் பெறுகின்றன. 1755ல் லிஸ்பனில் ஏற்பட்ட பூகம்பம் 60,000 மக்களைப் பலி வாங்கியது. இன்னொரு பெரிய பூகம்பம் 1883ல் அப்போது டச்சுக்காரர்களின் ஆதிக்கத்தில் இருந்த பஸிபிக் தீவுகளில் ஏற்பட்டது. 36,000 மக்கள் உயிரிழந்தனர். மூன்றாவது பெரிய பூகம்பம் ஜப்பானில் 1891ல் நேர்ந்தது. 7,500 மக்கள் பரிதாப மரணமடைந்தனர். 1897ல் அஸ்ஸாமில் ஏற்பட்ட பூகம்பம் பதினேழு லட்சத்து ஐம்பதினாயிரம் சதுர மைல்கள் பரப்பளவுக்குப் பரவி இருந்தது. 1902ல் மேற்கிந்தியத் தீவுகளில் பூகம்பத்தால் நாற்பதாயிரம் மக்கள் மரணமடைந்தனர்.

இன்று ஸிஸிலியில் முந்நூறு பேர்களுக்கு மேல் பலி வாங்கிய பூகம்பத்தை 1908ல் அங்கு நேர்ந்த பூகம்பத்துடன் ஒப்பிடும் போது ஒன்றுமேயில்லை எனலாம். 1908ல் ஸிஸிலியில் 85,000 மக்கள் இறந்துபட்டனர்.

உலகில் நேர்ந்துள்ள வேறு பல பயங்கர பூகம்பங்கள் பலி வாங்கியுள்ள மக்களின் எண்ணிக்கையைப் பாருங்கள்:

| ஆண்டு | | தேசம் | | மரணமடைந்தோர் |
|---|---|---|---|---|
| 1923 | — | ஜப்பான் | — | 95,000 |
| 1935 | — | இந்தியா (குவெட்டா) | — | 50,000 |
| 1935 | — | பலுசிஸ்தான் | — | 60,000 |
| 1939 | — | சில்லி | — | 50,000 |
| 1939 | — | துருக்கி | — | 1:00,000 |
| 1949 | — | ஈக்வேடார் | — | 6,000 |
| 1950 | — | அஸ்ஸாம் | — | 30,000 |
| 1951 | — | நியூகினி | — | 3,000 |
| 1954 | — | அல்ஜீரியா | — | 1,600 |
| 1956 | — | இரான் | — | 10,000 |
| 1957 | — | இரான் | — | 1,000 |
| 1960 | — | மொராக்கோ | — | 12,000 |
| 1963 | — | யுகோஸ்லாவியா | — | 20,000 |

— இ. பி. எஸ்.

# வாபஸ் வாங்கு! — கூத்தன்



சென்னையில் உலகத் தமிழாராய்ச்சிக் கருத்தரங்கு நடந்து கொண்டிருக்கிறது. மேடையில் நின்று பேசிக் கொண்டிருக்கும் திரு க. சந்தானம் அவர்கள் 'தமிழ் வெறியர்கள்' என்கிற பதத்தை உபயோகப்படுத்தி விட்டார். உடனே திரு சிவஞானகிராமணியார் எழுந்து, ''அந்தப் பதத்தை வாபஸ் வாங்குங்கள்'' என்று சொன்னார். முதலில் வாபஸ் வாங்க மறுத்த திரு சந்தானம், பிறகு கூட்டத்தில் குழப்பம் ஏற்பட வேண்டாம் என்று கருதி வாபஸ் வாங்கினார்.

இந்தச் சேதியை, கூட்டத்துக்குச் சென்றவர்கள் சொல்லக் கேட்ட எனக்கு நான் திரு சந்தானமாக இருந்திருந்தால் என்ன செய்திருப்பேன் என்று எண்ணிப் பார்த்தேன். எனக்கும் திரு கிராமணியாருக்கும் பின்வருமாறு வாக்குவாதம் நடந்திருக்கும்.

நான்: நான் வாபஸ் வாங்குவது இருக்கட்டும், முதலில் நீங்கள் வாபஸ் வாங்குங்கள்.

அவர்: நான் எதற்காக வாபஸ் வாங்க வேண்டும்? எதை வாபஸ் வாங்க வேண்டும்?

நான்: 'தமிழ் வெறியர்கள் என்கிற பதத்தை வாபஸ் வாங்குங்கள்' என்று என்னிடம் கூறும்போதே நீங்களும் தமிழ் வெறியர்கள் என்கிற பதத்தை உபயோகித்தீர்கள். ஆகவே, அதை முதலில் வாபஸ் வாங்குங்கள்.

அவர்: நீங்கள் சொன்னதாக நான் குறிப்பிட்டேனே ஒழிய நான் முதலில் அந்தப் பதத்தை உபயோகிக்கவில்லையே!

நான்: அப்படியானால், முதல் தடவையாகச் சொன்னால்தான் தவறு, இரண்டாம் தடவையாகச் சொன்னால் தவறு இல்லையா? அது இருக்கட்டும், தூய தமிழ்ச் சொற்களைத்தான் உபயோகிக்க வேண்டும் என்று சொல்லும் நீங்கள் 'வாபஸ்' என்கிற உருதுச் சொல்லை எப்படி உபயோகிக்கலாம்? அதை முதலில் வாபஸ் வாங்குங்கள்.''

அவர்: நீங்கள் இப்பொழுது வாபஸ் என்கிற உருதுச் சொல்லை உபயோகித்தீர்களே அதை வாபஸ் வாங்குங்கள்.

நான்: சற்று முன்னர் தானே ஒப்புக் கொண்டீர்கள், முதல் தடவையாகச் சொன்னால் தவறு, இரண்டாம் தடவையாகச் சொன்னால் தவறு இல்லை யென்று. வாபஸ் என்கிற சொல்லை முதல் தடவையாகச் சொன்னது நீங்கள்தான். ஆகவே, நீங்கள்தான் வாபஸ் வாங்க வேண்டும்.

அவர்: நீங்கள்தான் வாபஸ் வாங்க வேண்டும்.....

இதற்குள் கூட்டத்தினர்: ''நீ வாபஸ் வாங்கு'', ''நீ வாபஸ் வாங்கு'' என்று எங்கள் இருவரையும் பார்த்துக் கத்த ஆரம்பித்து விடுவார்கள். கடைசியில் வாபஸ் என்கிற வார்த்தை தமிழிலிருந்து உருதுக்குச் சென்றதா அல்லது உருதுவிலிருந்து தமிழுக்கு வந்ததா என்று தீர்மானிக்க ஒரு குழு நியமிக்கப்படும் என்றும் அதில் நானும், கிராமணியாரும் அங்கம் வகிக்க வேண்டும் என்றும் தீர்மானமாகும்.

ஆனால் திரு சந்தானம் நிலைமையை இத்தனை சாமர்த்தியமாகச் சமாளிக்காமல், முதலில் வாபஸ் வாங்க மறுத்து, பிறகு திரு கிராமணியார் தாம் கூட்டத்திலிருந்து வெளியேறுவேன் என்று சொன்ன பிறகு தான் வாபஸ் வாங்கினாராம்.

வாபஸ் வாங்க அவர் ஏன் இத்தனை தயங்கியிருக்க வேண்டும் என்பதுதான் எனக்கு விளங்கவில்லை. வாபஸ் வாங்குவது அவமானம் என்று அவர் நினைத்திருக்க வேண்டும். அத்தனைக்கும் வாபஸ் வாங்குவதில் தவறில்லை என்பதை முதல் நான்தான் திரு வரதராஜன் அவர்கள் மெய்ப்பித்திருந்தார். திரு ஜி. டி. நாயுடு அவரை ஏதோ வாபஸ் வாங்க வேண்டும் என்று சொல்ல, திரு வரதராஜன், ''நான் தவறாகச் சொல்லவில்லை. ஆனால் திரு ஜி. டி. நாயுடு தவறு என்று கருதினால் நான் ஆயிரம் தடவை வாபஸ் வாங்கத் தயார்'' என்று சொன்னார்.

என்னைப் பொறுத்தவரையில் வாபஸ் வாங்குவதில் ஓர் அவமானமும் இருப்பதாக நான் கருதவில்லை. நம்மை வாபஸ் வாங்கச் சொல்லுகிறவர் வாய்மொழி கொண்டு வற்புறுத்தும் வரையில், தம் நோக்கத்தை நிறைவேற்றப் பலாத்காரத்தில் இறங்காத வரையில், நாம் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டு, பின்னர் அதை வாபஸ் வாங்கிக் கொள்ளுவதைப் போன்ற சாமர்த்தியம் கிடையாது என்றுதான் கூறுவேன்!



உதாரணமாக, எனக்கு ஒருவரை, பலர் முன்னிலையில் (இந்தக் காரியத்தைப் பலர் முன்னிலையில் செய்வதில்தான் ஆனந்தம் இருக்கிறது) முழு மடையன் என்று கூறி, (சரி, வேண்டாம்,

மரியாதையாகவே முழு மடையர்) திட்ட வேண்டும் என்று ஆசையாக இருக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். நான் அப்பொழுது என்ன செய்வேன்! மேடையில் நின்று கொண்டு பேசும்போது அவரை முழு மடையர் என்று குறிப்பிடுவேன்! (ஓர் எச்சரிக்கை! இந்தக் காரியத்தை மேடையில் நின்று கொண்டுதான் செய்ய வேண்டும். அந்த நபரின் பக்கத்திலேயே நின்று கொண்டு செய்தீர்களோ, ஆபத்து! ஆபத்து என்று எனக்கு எப்படித் தெரியும் என்று கேட்கிறீர்களா! முப்பத்திரண்டு பற்கள் இருந்த இடத்தில் எனக்கு இன்று இருபத்திரண்டு பற்கள்தான் இருக்கின்றன என்று சொன்னால் புரிந்து கொள்வீர்கள் என்று நினைக்கிறேன்) உடனே, ''வாபஸ் வாங்கு'', ''வாபஸ் வாங்கு'' என்று எல்லாரும் கத்துவார்கள். நான் உடனே, ''அவரை முழு மடையன் என்று கூறியதை வாபஸ் வாங்குகிறேன்'' என்று கூறுவேன். வெறும் மடையன் என்று வையாமல், ''முழு'' என்கிற அடைமொழியைச் சேர்த்ததால் உண்டான அனுகூலத்தைப் பார்த்தீர்களா ?

வாபஸ் வாங்குவதால் நாம் செய்ய நினைத்த காரியம் ஒன்றும் தடைப்படுவதில்லை. யார் யாரைப் பற்றி நம்முடைய உண்மையான அபிப்பிராயத்தை வெளியிட வேண்டுமோ அதை வெளியிட்டுவிட்டு, பின்னர் அதை வாபஸ் வாங்குவதனால் என்ன நஷ்டம்!

ஆனால் எனக்குத் தெரிந்து சில அறிஞர்கள் இப்படியெல்லாம் அகப்பட்டுக் கொள்வதில்லை. சொல்ல வேண்டிய விஷயத்தைச் சுற்றி வளைத்துச் சொல்ல இவர்கள் நன்கு கற்றுக் கொண்டிருப்பதால், இவர்களை யாரும் ஒன்றும் பண்ண முடியாது.

உதாரணமாக, தமிழ் நாடு பிரிந்து போக வேண்டும் என்னும் விஷயத்தை எடுத்துக் கொள்ளுவோம். மொட்டையாக, 'தமிழ் நாடு பிரிந்து போக வேண்டும்' என்று கூறினால் அது சட்டப்படி குற்றமாகும். ஆனால் அதே விஷயத்தைப் பின்வருமாறு சுற்றி வளைத்துச் சொன்னால் இவர்களை யார் என்ன பண்ண முடியும்?

''இன்றுள்ள சூழ்நிலைகளைப் பார்க்கும்போது, உணர்ச்சிவசப்பட்ட சிலர், தமிழ் நாடு பிரிந்து போக வேண்டும் என்று கேட்கும் போது, இதுகாறும் அப்படிக் கூறி வந்தவர்களை எதிர்த்து வந்த நான், அவர்கள் சொல்வதில் உண்மை இருக்கிறதுபோலத் தோன்றுகிறதே என்று எண்ண ஆரம்பித்தால், அதை எப்படித் தவறு என்று சொல்ல முடியும் என்று நான் உங்களை இந்தச் சமயத்தில் கேட்பது தவறாகாது என்று நான் நினைக்கிறேன் என்று சொன்னால் அதை நீங்கள் நம்பித்தான் ஆகவேண்டுமே யொழிய, நம்ப மாட்டேன் என்று மறுக்கவோ, எதிர்க்கவோ கூடாது என்று மிக்க பணிவன்புடனும், வணக்கத்துடனும் கேட்டுக் கொள்கிறேன். (தமிழ் எவ்வளவு தூரத்துக்கு வளர்ந்து விட்டது பார்த்தீர்களா! கருத்துக்களை வெளியிட மட்டும் பயன்படாமல் கருத்துக்களை மறைக்கவும் பயன்பட்டால்தான் அந்த மொழி வளர்ந்துள்ளது என்று பொருள் என்று யாரோ ஒரு பெரியவர் சொன்னார். அந்தப் பெரியவர் நான்தான் என்று சுண்டு குறிப்பிடுவது அடக்கமுடைமைக்குப் புறம்பானது என்று கருதுகிறேன்.)

ஆகவே, நாம் சொல்ல வேண்டிய கருத்துக்களை இது போன்று சுற்றி வளைத்துச் சொல்லும் நீள வாக்கியத்துக்குள் மூடி மறைத்து விட்டால், யார் நம்மை எதை வாபஸ் வாங்கச் சொல்ல முடியும்? அல்லது யார்தான் நம் மீது வழக்குத் தொடர முடியும் என்று நான் உங்களை இந்தச் சமயத்தில் கேட்பது தவறாகாது என்று நான் நினைக்கிறேன் என்று சொன்னால், அதை நீங்கள் நம்பத்தான் வேண்டுமேயொழிய, நம்ப மாட்டேன் என்று மறுக்கவோ, எதிர்க்கவோ!.... (அட ஆண்டவனே! இப்படிச் சுற்றி வளைத்துச் சொல்லும் பழக்கம் என்னையறியாமல் எனக்கே வந்து விட்டது என்று நான் சொன்னால் அதை நீங்கள் நம்பித்தான் ஆகவேண்டுமேயொழிய, மறுக்கவோ எதிர்க்கவோ.... அட, கடவுளே! விளக்கம் கூற வந்த இடத்தில் சுற்றி வளைப்பா!)

ஆக, நான் சொல்ல வந்தது என்னவென்றால் நாம் இம்மாதிரி சுற்றி வளைத்துப் பேசக் கற்றுக் கொண்டால் நம்மை ''வாபஸ் வாங்கு'' என்று யாரும் கேட்கமாட்டார்கள். கூட்டத்தில் யாராவது ஆள் இருந்தால்தானே நம்மைக் கேட்பதற்கு! இந்தச் சுற்றி வளைத்த பேச்சை எத்தனை பேர் எத்தனை நேரம் கேட்டுக் கொண்டிருக்க முடியும் ?

## குருடர்க்குப் பாங்கி



ஸ்விடனில் குருடர்கள்கூடப் பாங்கியில் கணக்கு வைத்துக் கொள்ள முடியும். குருடர்களுக்காகப் பாங்கியில் தனிப் பிரிவு ஒன்று ஒதுக்கப்பட்டுள்ளது. பாங்கிக் குமாஸ்தாக்களுக்குக் குருடர்களின் எழுத்து முறையில் பயிற்சி அளிக்கப்படுகிறது. குருடர்களுடன் அவர்களது பாஷையிலேயே கடிதப் போக்குவரத்து வைத்துக் கொள்வதற்காக. அது மட்டுமல்ல, குருடர்கள் பாங்குக்கு வந்து சிரமப்படாமல் இருக்க, தபால் தலை ஒட்டாமல் குருடர்கள் கடிதம் எழுதவும் சலுகை தரப்பட்டுள்ளது!

ஆதாரம்: வெஸ்டர்ன் டைம்ஸ்

தகவல்: ச. ஸ்ரீதரன்

# ஒருமைப்பாடு வீடு



(பேராசிரியர் நீலகண்டன் ஜாகையைச் சேர்ந்த வெளி வராந்தா. இரண்டு மூன்று நாற்காலிகள் ஒரு ஈஸிசேர் எல்லாம் அந்த இடத்தை நிரப்பிக் கொண்டிருக்கின்றன. இங்கிருந்து பார்த்தால் ராமானந்த சாட்டர்ஜியின் ஜாகை வராந்தா தெரியும். இந்த வராந்தாக்களுக்கு இடையே தான் மாடி பிளாக்குகள் இரண்டுக்கும் போகும் படிகள் இருக்கின்றன. காட்சி ஆரம்பமாகும் வேளையில் நீலகண்டனின் பையன் வேணு கையிலிருக்கும் புத்தகத்தில் ஈடுபட்டிருக்கிறான்.)

நீலாவின் குரல் (உள்ளிருந்து): அண்ணு! அண்ணு!... உன்னை யாரோ டெலிபோனில் கூப்பிடுகிறார்கள். வந்துவிட்டுப் போயேன்.

வேணு (புத்தகத்தை விலக்காமலேயே): நோ! நோ! நான் ரொம்ப பிஸியாக இருக்கிறேன். நீயே ஏதையாவது சொல்லிச் சமாளி.

நீலாவின் குரல்: யாராவது கட்சிக்காரனுக இருக்கப் போகிறான்...

வேணு: நான் எந்தக் கட்சிக்காரனுமில்லே. ராங் நம்பராக இருக்கும்.

நீலா (வந்துகொண்டே): நாசமாய்ப் போச்சு! பொலிடிகல் கட்சியைச் சொல்லலே! பொறுமைப்படுக்கான கட்சிக்காரனைச் சொல்லுகிறேன். ஐ மீன் யுவர் க்ளையண்ட்!

வேணு (புஸ்தகத்தை விலக்கித் தணிந்த குரலில்): நிலா! இந்த நேரத்திலே எனக்குக் கேசும் கிடையாது. க்ளையண்ட்டும் கிடையாது. சும்மா சினியர் வீட்டிலே உட்கார்ந்துட்டு வருகிறேன். இந்த ரகசியம் உனக்கு மாத்திரம் தெரிந்தால் போதும்...

நீலா: யாரோ கூப்பிட்டுத் தொலைக்கிறான். நீ வராந்தாவில் இருக்கிறாய் என்று வேறு சொல்லி விட்டேன்.

வேணு: தீர்ந்தது போ! சாரங்கபாணியாகத்தான் இருக்கும். ஓபியிலே சினிமாப் பார்க்க அலைவான். அவன் கண்ணிலே தட்டுப்படாமல் நழுவி வந்தேன்! இப்போ டெலிபோனில் பிடிக்கிறானுக்கும்! சரி சரி, அவனை எப்படியாவது சமாளித்துவிட்டு வருகிறேன்.

(அவன் உள்ளே போகிறான். நீலகண்டன் வெளியிலிருந்து வருகிறார்.)

நீலகண்டன்: ஒரு வேடிக்கையைக் கேளு. இன்று காலையிலே பஸ் ஸ்டாண்டு வரை ஒரு ஆசாமி ரொம்ப அன்யோன்யமாகப் பேசிக்கொண்டு வந்தார். என்னை அவருக்கு நன்றாக தெரிந்திருக்கிறது. ஆனால் எனக்கு அவரை யாரென்று புரிந்து கொள்ளவே முடியவில்லை. ஆனால் அவரை நான் இதற்கு முன் பார்த்திருக்கிறேன். 'எஸ்' 'நோ' 'செர்ட்டன்லி' என்று பொதுப்படையாகப் பேசிக்கொண்டே போய் பஸ்ஸில் ஏறிவிட்டேன்.

(வேணு வெளியே வருகிறான்.)

வேணு: என்ன நீலா! போனிலே கூப்பிடுகிறவர்கள்கூட உனக்குத் தெரியலேயா? என்னவோ கட்சித் தலைவர், கட்சிக்காரன்னு கரடி விட்டாயே... அப்பா! உங்க சிநேகிதர் ராமசாமிதான் டெலிபோன் செய்தார்.

நீலகண்டன்: எந்த ராமசாமி?

நீலா: அண்ணு! அப்பாவோட மனத்திரையிலே வேறே படம் ஓடிண்டு இருக்கு! அனேகமா அது நூறு நாள் ஓடற படம் என்று நான் நினைக்கிறேன். அதனால்தான் ராமசாமி என்றதும் அவர் மனத் திரையிலே அந்த உருவம் விழல்லே.

வேணு: அதுதான் அப்பா! அந்த டான்ஸ் ஆடற பெண்ணோட அப்பா ராமசாமி!

நீலகண்டன்: எஸ்! எஸ்!...புரியறது! அரங்கேற்றத்துக்கு இன்விடேஷனு?

வேணு: அவர் இங்கேயே குடும்பத்தோட குடியேறறதுக்கு அப்ளிகேஷன். ஹவுஸ் ஓனர் கிட்டே உங்களைச் சிபாரிசு செய்யச் சொல்கிறார்.

நீலகண்டன்: எஸ்! எஸ்!.... செய்ய வேண்டியதுதான். அட்லீஸ்ட் கடைசியா மிச்சமிருக்கிற பிளாக்கிற்காவது அவன் வந்துவிட்டுப் போகட்டும். உங்க அம்மாவுக்கு கம்பெனி வேண்டும். அதற்காக அந்தப் பெண்ணோட அலறல், ஜதிஸ்வரம் முதலியவற்றைச் சகித்துக் கொள்ளலாம்.

நீலா: அலறல் இல்லேப்பா! அலாரிப்பு!

நீலகண்டன்: ஐ ஆம் சாரி! அந்த டெக்னிகல் வார்த்தையை நான் சரியாகக் கவனிக்கலே! உச்சரிப்பிலே கோளாறு வந்துடுத்து. ஒரு ரசமான விஷயம் கேளு! நேற்றோ முந்தாநாளோ! ஓட்டலிலே என் டேபிளுக்குப் பக்கத்திலே ஒரு வெள்ளைக்கார ஆசாமி வந்து உட்கார்ந்தார். டூரிஸ்ட் மாதிரி இருந்தது. தின்பண்டங்கள் விவரம் எழுதியிருந்த போர்டைப் பார்த்துவிட்டு, சர்வரிடம், 'காத்தாரிகா பாஜீ கொண்டா' என்றார்.

நீலா: சர்வர் புரியாமல் நின்றானு?

நீலகண்டன்: என் காதுக்கே காத்தாயி பாகீரதி என்றமாதிரிதானே ஒலித்தது. நான் அப்புறம் சர்வருக்கு விளக்கிச் சொன்னேன். அவன் கொண்டு வந்து வைத்தான்.

நீலா: நீங்க அதோடு விட்டிருக்க மாட்டீர்களே! கத்தரிக்காய் எப்படிப் பயிரிடப்படுகிறது. அதற்கு என்ன சீதோஷ்ண நிலை தேவை என்பதில் ஆரம்பித்து, உடுப்பி ஓட்டல் பஜ்ஜிகள் ஜீரணிக்க எந்த ஆயுர்வேத லேகியம் சாப்பிட வேண்டும் என்பது வரை போய் எட்டியிருப்பீர்களே!

நீலகண்டன்: ஆஹா! அந்த எல்லை வரை போனேன். ஆனால் அப்புறம்தான் அவன் யாருங்கறதைச் சொன்னான். இதாலி நாட்டிலே பெரிய ஓட்டலுக்குச் சொந்தக்காரனாம்! உலகத்தின் பல பாகங்களிலிருக்கும் ஓட்டல்களைப் பற்றித் தெரிந்து கொள்ளச் சுற்றுப் பிரயாணம் செய்கிறானாம். கச்சிதமாக பகவத்கீதை மாதிரி இரண்டு வரி சொன்னான். 'உணவுப் பண்டங்கள் விற்பது எங்கள் கடமை. ஜீரணிப்பது அவர்கள் கடமை' என்றான்!

(வேணுவும் நீலாவும் கைகொட்டிச் சிரிக்கிறார்கள்.)

வேணு: நீலா! அதோ மிஸ்டர் சாட்டர்ஜிகூடச் சிரிக்கிறார். அப்பா ஜோக் அவர் காதில்கூட விழுந்து விட்டது.

நீலகண்டன்: சாட்டர்ஜியா?... (திரும்பி எதிர் வராந்தாவைப் பார்த்துக் கரம் கூப்பி விட்டுத் தணிந்த குரலில்) நீலா! இந்த ஆசாமிதான் காலையிலே என்கூடப் பேசிக் கொண்டு பஸ் ஸ்டாண்டுக்கு வந்தவர்! புதுக்கூட்டுக் குடித்தனக்காரர்! இவரை மறந்துட்டு நான் முழிச்சிருக்கேன்!

(ராமானந்த சாட்டர்ஜி வருகிறார்.)

நீலகண்டன் (ஆங்கிலத்தில்): வாங்கோ! வாங்கோ! மிஸ்டர் சாட்டர்ஜி! உட்காருங்கோ.

(ஐம்பது வயதை எட்டிய சாட்டர்ஜி இன்னும் தமிழ் பேசக் கற்றுக் கொள்ளவில்லை. அவர் பேச்செல்லாம் ஆங்கிலத்தின் மூலம் தான். அவருடன் பேசும்போது மற்றவர்களும் ஆங்கிலத்தில் தான் பேசுகிறார்கள்.)

சாட்டர்ஜி: நீங்கள் ஏதோ தாமாஷாகப் பேசிக் கொண்டிருந்தீர்கள் போலிருந்ததே! நானும் பங்கு பெறலாமா?

வேணு: பேஷாக!... உச்சரிப்பு விஷயம்! பிற மொழிகளைப் பேசும்போது ஏற்படும் ஒலிபேதங்கள்...

சாட்டர்ஜி: ஓ! ஐஸீ!... எனக்கும் தமிழ் பேச வேண்டும் என்ற ஆசைதான். ஆனால் உச்சரிப்புக் கோளாறு வந்து விடுமோ என்று பயப்பட்டுச் சும்மா இருக்கிறேன்.

நீலா: நீங்க பயப்படவே வேண்டாம். தைரியமாக எங்களுடன் பேச ஆரம்பித்து விடுங்கள். நாங்கள் அவ்வப்போது திருத்திக் கொடுக்கிறோம். அதேபோல...

நீலகண்டன்: நாங்களும் உங்களுடன் வங்காள மொழியில் பேசக் கற்றுக்கொள்ளலாமல்லவா?....

சாட்டர்ஜி: கரெக்ட்!... வங்காளத்துக்கும் தமிழ் நாட்டுக்கும் இடையே வாழ்க்கை முறையிலோ கலாசாரத்திலோ, கலை உணர்ச்சியிலோ அதிக வித்தியாசமில்லை!...

வேணு: இரண்டு பேருமே கொஞ்சம் சுகவாசிகள்தான்!

(மாடிப் படிகள் வழியாக வரும் கன்யாலால் இவர்களைப் பார்த்து நிற்கிறார். பிறகு கரம் கூப்பி நீலகண்டனை நோக்கி வருகிறார். கன்யாலாலும் ஆங்கிலத்தில்தான் பேசுகிறார். ஆனால் அவருக்குச் சில தமிழ் வார்த்தைகள் தெரியும்.)

கன்யாலால் (உட்கார்ந்துகொண்டு): சாட்டர்ஜீ ஜீ சௌக்கியமா?

நீலா: நீங்கள் அவருக்குத் தனியாக ஒரு ஜீ போடவேண்டாம். பெயரிலேயே இருக்கிறது.

நீலகண்டன்: நண்பர்களே, இந்த பிளாக்குக்கு முதலில் குடி புகுந்தவன் என்ற முறையில், நான் ஏன் உங்களை என்னுடன் ஒரு விருந்துச் சாப்பாட்டுக்கு அழைக்கக் கூடாது?

சாட்டர்ஜி: நல்ல யோசனை. வரவேற்கிறேன். எஞ்சியிருக்கும் பகுதிக்கும் நண்பர்கள் யாராவது குடிவரட்டுமே. அதுவரை ஒத்திப்போடலாமல்லவா?... என் நண்பர் ஒருவரே வர முயற்சி செய்து கொண்டிருக்கிறார்.

வேணு (தணிவாக நீலாவிடம், அந்த 'தகதிமி' விஷயமாக அப்பாவை முடுக்கிவிடு.

கன்யாலால்: அப்படியா மிஸ்டர் சாட்டர்ஜி! என் உறவுக்காரருக்காக நான் சிபாரிசு செய்திருக்கிறேனே!

(வாசலில் இரண்டு டாக்ஸிகள் வந்து நிற்கின்றன. முதல் டாக்ஸியிலிருந்து பலதேவ் சிங்கும், இரண்டு குழந்தைகளும் இறங்குகிறார்கள். பின்



டாக்ஸியிலிருந்து இரண்டு பெண்மணிகளும், வேலையாளும் இறங்குகிறார்கள். அவர்களெல்லாம் சாமான்களுடன் மாடிப் படியில் ஏறிப் போன பிறகு பலதேவ் சிங் கடைசியாக வந்து நீலகண்டன் வீட்டு வராந்தாவில் எட்டிப் பார்க்கிறார்.)

பலதேவ் சிங்: குட் ஈவினிங் லேடீஸ், அண்ட் ஜெண்டில் மேன். நான் என்னை அறிமுகப்படுத்திக் கொள்ளுகிறேன். என் பெயர் பலதேவ் சிங். பாட்டியாலாவிலிருந்து வருகிறேன். இன்றிலிருந்து உங்களுடைய கோ — டெனண்ட்! உங்களைப் பற்றித் தெரிந்து கொள்ளலாமா?

(பலதேவ் சிங்கும் ஆங்கிலத்தில்தான் பேசுகிறார்.)

நீலகண்டன் (எழுந்து): குட் ஈவினிங் மிஸ்டர் சிங்! வெல்கம் டு யூ! நான் நீலகண்டன். இவர் மிஸ்டர் சட்டர்ஜி. அவர் மிஸ்டர் கன்யாலால். இவன் என் பையன் வேணு. இவள் என் பெண் நீலா....

பலதேவ் சிங்: வெரி குட்! வெரிகுட்!.... நான் அப்புறம் உங்களை யெல்லாம் சாவகாசமாகச் சந்திக்கிறேன். (போகிறார்)

கன்யாலால்: ஹ்ஷேயா!... இந்த பிளாக் இப்போ கம்ப்ளீட் ஆயிடுத்து.

சாட்டர்ஜி: அப்படீன்னா உங்க விருந்து சீக்கிரமே கிடைக்கும் மிஸ்டர் நீலகண்டன்.

நீலா: வொண்டர்ஃபுல்! வொண்டர்ஃபுல்! ஒரு சிறிய அளவு பாரதமே இந்த இடத்திலே அடங்கிப் போயிருக்கிறது.

வேணு: நமக்குள்ளே இருக்கிற வேற்றுமைகளைவிட ஒற்றுமைகள் எவ்வளவு அதிகம் உண்டு என்பதைப் பற்றி ஒரு ரிசர்ச் பண்ணேன் நீலா!

நீலா: கரெக்ட்! அந்த ஆராய்ச்சிக் கட்டுரைக்கு நான் இப்போதே பிள்ளையார் சுழி போடுகிறேன். (தொடரும்)

## வரன் தேடினர்!

நாலு நாட்களாக அந்தக் காலட்சேபத்திலே அந்தப் பையனைப் பார்த்து வருகிறார் அவர். சிவந்த மேனி, சுருட்டை மயிர், சிரித்தால் குழியும் கன்னம். எடுப்பான நாசி. ஒவ்வொன்றாகப் பார்க்கிறார். தம் பெண்ணுக்கும் அவனுக்கும் முடி போடுகிறார். இந்தப் பையன் தம் பெண்ணுக்கு வரனாகக் கிடைத்தால்........

இந்த எண்ணமே எங்கேயோ எட்ட உட்கார்ந்திருந்த அவரை அவனிடட்டக் கொண்டு சேர்க்கிறது. அடுத்த நாள் மெதுவாகச் சமயம் பார்த்து அவனோடு பேச்சுக் கொடுக்கிறார்.

"எந்த ஊர் அப்பா உனக்கு?"

"மாயூரம்!"

"பேரு?"

"ரமணன் !"

"பேஷ்! பேர்ப் பொருத்தமும் பிரமாதம்தான். 'நம் குழந்தையின் பெயரையும் இவன் பெயரையும் இணைத்தால்...... ஆகா! லக்ஷ்மி ரமணன்." கற்பனை விரிகிறது. "நட்சத்திரம் ?"

"பரணி !"

'தரணி ஆளும்!' விரல்விட்டுக் கூட்டிக் கழிக்கிறார். 'நட்சத்திரப் பொருத்தம் பலே ஜோர். அப்பழுக்குக் கூற முடியாது.' "என்ன படித்திருக்கிறாய் அப்பா ?"

"பி. இ. முதல் வகுப்பு."

'அப்படியானால் சம்பளம் நானூறு -- ஐந்நூறுக்குக் குறையாது' மனம் கணக்குப் போட வாய் கேட்கிறது. "என்ன சம்பளம்?" என்று.

"அறுநூறு !"

'கணக்குத் தவறி விட்டதே! இருந்தாலும் லக்ஷ்மி அதிர்ஷ்டசாலிதான்! இத்தனை நாளும் அவளுக்கு வேறு வரன் குதிராமல் போனது நல்லதாகப் போயிற்று! தெரியாமலா எல்லாம் நன்மைக்கே என்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள்!'



"ஆமாம், ஆஸ்தி -- பாஸ்தி?" கேள்வியை நீட்டுகிறார்.

"மாயூரம் பட்டமங்கலத் தெருவிலே ஒரு வீடு இருக்கிறது. சென்னையிலும் தியாகராயநகரில் ஒரு பங்களா இருக்கிறது !"

"அப்படியா? நிலபுலன்?"

"காவேரிப் பாசனம் எட்டு ஏக்கர்! அதுவும் சொந்தச் சாகுபடி !"

'பேஷ்!' அவருக்குப் பையன் தமது மாப்பிள்ளையாகவே ஆகிவிட்டதாக எண்ணம்! இந்தச் சமயம் பார்த்துத்தானா, அவன் முகத்தெதிரே ஒரு கொசு சங்கீதம் பாடிக் கொண்டு சுற்ற வேண்டும்? சட்டென்று கையால் விசி ஓட்டுகிறார்! அத்தனை கரிசனம் அவருக்கு, தமக்கு வரப்போகிற மாப்பிள்ளை மீது! ஒரு எறும்பு சீண்டக் கூடாது என்ற எண்ணம் !

அடுத்த நல்ல நாளில் மாயூரம் சென்று அவன் தாய் தந்தையரைப் பார்த்து ஆயிரம் இரண்டாயிரம் கூடப் போனாலும் நிச்சயம் செய்துவிட வேண்டும் என்று திட்டமிடுகிறார்! அது மட்டுமா? கல்யாணத்தை எப்படி விமரிசையாக' நிறக்க நடத்த வேண்டும், யார் மேளம் வைக்கலாம், யார் கச்சேரி வைக்கலாம் என்றெல்லாம் கற்பனை செய்யத் தொடங்கி விடுகிறார்! சட்டென்று நினைவு வந்தவராய், "உத்தியோகம் எங்கேயோ?" என்று கேட்கிறார்!

"திருச்சியில் !"

"அப்படியா? லீவில் வந்திருக்கிறாற்போல் இருக்கிறது இங்கே !"

"ஆமாம்! வந்து நாலு நாளாகிறது. இந்தப் பாகவதர் கதை என்றால் எனக்கு மிகவும் பிடிக்கும். கேள்விப்பட்டேன்; வந்தேன்."

தமக்கு மாப்பிள்ளையாக வரப் போகிறவனின் ரசனையில் மகிழ்ந்தவர், "இங்கே எங்கே தங்கியிருக்கிறாய்? எங்கள் வீட்டிலேயே வந்து தங்கலாம், உன் வீடாக நினைத்துக் கொண்டு! இந்தக் காலத்தில் ஹோட்டல் -- கிளப்டல் எல்லாம் எங்கே அவ்வளவு வசதியாயிருக்கிறது !" என்று அழைப்பு விடுகிறார்!

"வேண்டாம்! எனக்கு வேண்டியவர்கள் இருக்கிறார்கள். சௌகரியமாகவே தங்கியிருக்கிறேன் !"

"யாரோ........ ?"

"என் மாமனார்தான். அவருக்கு அறுபதாம் கல்யாணம். அதற்காக வந்தேன்!"

அவருக்கு அந்தப் பையனின் பேச்சு அப்புறம் காதில் விழுமா?

(ஸ்ரீமதி கமலாமூர்த்தியின் ஹரிகதையிலிருந்து)

## இரண்டாவது உலகத் தமிழ் மகாநாட்டில் பேசப் பட்ட சொற்கள் எத்தனை?

நாம் ஒரு நாளில் எத்தனை சொற்களைப் பயன்படுத்துகிறோம்? இது நமது உணர்ச்சிகள், தொழில் முதலிய அம்சங்களைப் பொறுத்தே இருக்கிறது. எனினும், நாம் சராசரி 30,000 சொற்களை அன்றாடம் பயன்படுத்துகிறோம் என்று கூறலாம். மனிதன் ஒரு நாளில் 16 முதல் 18 மணி நேரம் விழித்திருக்கிறான் என்றும், அதில் 3.3 மணி நேரம் பேசுகிறான் என்றும் மொழி இயலாரும் உள்நூல் அறிஞரும் கூறுகிறார்கள். நாம் நிமிடத்துக்கு 150 சொற்களையும் மணிக்கு 9000 சொற்களையும் பயன்படுத்துகிறோமாம். இந்த அடிப்படையில் இரண்டாவது உலகத் தமிழ்மாநாட்டின்போது பேசப்பட்ட சொற்கள் எத்தனை என்று கணக்குப் போட்டுப் பாருங்கள்! தலைசுற்றும்!

— மு. சு. தியாகராசன்

### "ஷேவிங்"கை நிறுத்தினால் "சேவிங்"

1940-ல் இரண்டாம் உலகப் போர் நிகழ்ந்த போது இங்கிலாந்தில் — 'பிரிட்டிஷ் பியர் கிளப்' என்ற ஒரு கிளப். உறுப்பினர் யாவரும் யுத்தம் முடியும் வரையில் 'ஷேவ்' செய்து கொள்ளுவதில்லை என்று சபதம் எடுத்தார்களாம். 'ப்ளேடு'கள் செய்ய உபயோகப்படும் உலோகம் யுத்தத்துக்குப் போர்க் கருவிகள் செய்ய உபயோகப்படும் என்கிற உயர்ந்த நோக்கமே இதற்குக் காரணம்!

ஆதாரம்: "ஹிந்து"
தகவல்: "ஆர்ஜேபி"





" மகாமகத்துக்காகக் கும்பகோணத்துக்கு ரயிலிலே போறவங்களுக்கு வரி போடப்போறாங்களாமே?"

"அந்தக் கவலை உனக்கும் எனக்கும் எதற்கு? அதெல்லாம் டிக்கெட்டு வாங்கறவங்களுக்குத்தான்!"


ரூ. 770.00

# பாரதீய வித்யா பவன்

■

**முப்பதாவது ஆண்டு விழா**

□

**ஒரு வேண்டுகோள்**

□



**பா**ரதீய வித்யா பவனத்துக்கு இது முப்பதாவது ஆண்டு.

சிறிய அளவில் ஆரம்பித்த இந்தப் பவனம் இப்போது அகில உலக இயக்கமாக வளர்ந்து விட்டது. சத்தியம், சிவம், சுந்தரம் (வாய்மை அன்பு, அழகு) இந்த மூன்று அம்சங்களைப் பிரதானமாகக் கொண்ட ஒளிந்து தர்மத்துக்குப் புத்துயிர் அளித்து நாடு முழுவதிலும் இதைப் பரப்பும் பணியை மேற்கொண்டு இயங்கி வருகிறது இது. பல யுகங்களாக வந்துள்ள நமது பாரத தர்மத்தின் தத்துவமாகிய சிரத்தை, நல்லொழுக்கம், சமர்ப்பணம் ஆகியவற்றை உலகெங்கும் பரவச் செய்யும் உயர் பணியில் ஈடுபட்டிருக்கிறது பாரதீய வித்யா பவனம்.

ஸநாதனப் பெருமை வாய்ந்த நமது புண்ணிய பூமி, சமயம்—கலாசாரம் ஆகியவற்றால் நன்கு இணைக்கப்பட்டு வலுப்பெற்றுள்ளது. ஆக்கமும், ஆற்றலும், ஆத்ம சக்தியும் பூரணமாகப் பெற்ற ஆதர்ச புருஷர்களான ராமர், கிருஷ்ணர், வியாஸர், வைசம்பாயனர், கௌதம புத்தர், வர்த்தமான மஹாவீரர் போன்ற சரித்திர கால மகான்களும், நமது காலத்தைச் சேர்ந்த ராமகிருஷ்ணர், அரவிந்தர், மகாத்மா காந்தி போன்ற பலரும் ஜாதி, மதம், இனம் போன்ற வேற்றுமைகளைக் கடந்த மற்றும் பல பெரியோர்களும், நமக்கு வழிகாட்டிகளாக இருந்துள்ளனர். அவர்களுடைய பொன்மொழிகள் வேறுயிருப்பினும் கருத்து ஒன்றே. ஹிருதயத்தின் உணர்ச்சி வசப்பட்டு, உள்ளத்தின் ஒரே மொழியை அவர்கள் பேசினார்கள். மக்களிடையே அவர்களுடைய வார்த்தைகளுக்கு அதனால் மகத்தான வரவேற்பு கிடைத்தது. நாடெங்கிலும் மக்கள் அவர்களை மதித்துப் போற்றினர்.

## கடந்த கால சாதனைகள்

**செ**ன்ற முப்பதாண்டு காலத்தில் விஞ்ஞான வளர்ச்சி வேகத்தில் உலகம் தூள் தூளாகச் சிதைந்து போகக் கூடிய நிலையில், இந்திய கலாசாரத்தின் அடிப்படைத் தத்துவங்களை உறுதியாக நிலைநாட்ட இப்பவனம் விடாமுயற்சியுடன் செயல் புரிகிறது. அவற்றுக்குப் புத்துருவம் கொடுத்து நவீன சூழ் நிலைகளுக்கு அவற்றைப் பொருத்தி, இக்கால மக்களிடையே நிலைக்கச் செய்ய முயன்று வருகிறது. தனது 36 கிளைகள், 16 இந்திய வெளி நாட்டுக் கேந்திரங்கள், 550 நிலையங்களில் 60,000 பேர்களுக்கு நடைபெறும் ஸம்ஸ்கிருத, பகவத்கீதைப் பிரசாரப் பரீக்ஷைகள், சுமார் 30 லட்சம் பிரதிகள் விற்பனையாகியுள்ள 500 உயர்ந்த நூல்கள், இந்தியர்களின் கலாசாரமும் வரலாறும் என்ற பதினொரு பகுதிகளைக் கொண்ட மகத்தான நூல் தொகுப்பு, வெவ்வேறு இந்திய மொழிகளில் வெளிவந்து கொண்டிருக்கும் எட்டு சஞ்சிகைகள், அவ்வப்போது மேற்கொள்ளப்படும் ஸம்ஸ்கிருதவிகாஸ் புனித ஸ்தல யாத்திரைகள், கல்லூரி நாடகப் போட்டிகள், நடனங்கள், இன்னிசைக் குழுக்கள் — ஆகிய பல்வேறு வழிகளில் தனது இலட்சியங்களைப் பரப்பி வருகிறது பாரதீய வித்யா பவனம்.

இந்தியாவின் தேசிய வாழ்வில் உள்ள எல்லாத் துறைகளையும் தொடும் ஓர் அகில இந்திய தேசிய நிறுவனமான இது, இந்தியாவின் ஆன்மீக, தார்மீக, கலாசார ஒற்றுமைக்காகவும், இந்தியா பிளவுபடாமல் இணைந்து திகழத் துணை புரியும் ஸ்தாபனமாகவும் விளங்குகிறது. தீய சக்திகளின் வேகத்தைத் தடுத்தும் மக்கள் வாழ்க்கையில் இலக்கிய, கலாசாரப் புது ரத்தத்தைப் பாய்ச்சியும், இந்தியா முழுதும் பரவிப் பெருகிக் கொண்டே போகும் பவன் குடும்பத்தினரை இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் ஏராளமாகப் பெருக்கிக் கொண்டுள்ளது.

இவையனைத்தும் கடந்த கால சாதாரண சாதனைகள். எதிர்காலத்தில் செய்ய வேண்டியது மலைபோல் முன்னே நிற்கிறது. அதைச் செய்து முடிக்க வேண்டியதில் தாமதம்

கூடாது. லட்சியங்கள் அநேகம். தேவைகளோ அதிகம்.

## எதிர்காலத் திட்டங்கள்

பொதுமக்கள் உதவ முன்வந்தால், செல்வந்தர்கள் நிதி உதவி தந்தால், எதிர்கால இலட்சியங்களை முடிக்கலாம் என்பது பவனின் உறுதியான நம்பிக்கை. பவனின் எதிர்காலத் திட்டங்களில் முக்கியமான சில :

1. நமது நாட்டின் மேன்மையை நன்கு உணர்ந்து, யுக யுகங்களாக நாம் போற்றி வரும் தத்துவங்களை உள்கூட்டித் தெரிந்து, அவற்றை உலகத்துக்கு உணர்த்தவல்ல உண்மைத் தூதுவர்களாக மாணவ மாணவிகளைத் தக்க பயிற்சி அளித்துத் தயாரித்துத் தனிப் படை ஒன்றை நிறுவுதல். இதற்காக பி. ஏ., எம். ஏ. பட்டங்களுக்குப் பவன் கல்லூரிகளில் படித்துக் கொண்டிருக்கும் மாணவ மாணவிகளுக்குப் பவனுடைய மும்பாதேவி ஸம்ஸ்கிருத வித்யாலயத்தில் ஸம்ஸ்கிருத ஆசாரிய வகுப்பில் பயிற்சி அளிக்கப்படும். இந்தத் திட்டம் சில ஆண்டுகளுக்கு முன்பே தொடங்கப்பட்டு, 5, 6பேர்கள் இப்போது படித்து வருகிறார்கள். இவ்வாண்டு எழுபத்தைந்து பேர்கள் பயிற்சி பெற முன்வந்துள்ளனர். ஆண்டுக்கு நூறு பேர்களுக்குப் பயிற்சி அளிக்கத் தேவையான வசதிகளை ஏற்பாடு செய்துவிட்டால் அடுத்த பத்தாண்டு காலத்தில் தேசிய புத்தெழுச்சிக்கும் இது மிகவும் உதவியாக இருக்கும் என்று நாங்கள் நம்புகிறோம்.

2. சௌபாத்தி, அஹமதாபாத், அந்தேரி மற்றும் இதர இடங்களிலும், சம்ஸ்கிருத மஹாவித்யாலய மாணவர்களுக்கும், இதர பவன் கல்லூரி மாணவர்களுக்கும் விடுதிகள் கட்டுதல்.

3. சென்ற பன்னிரண்டு ஆண்டுகளாக, ஹிந்தி, ஆங்கிலம், மராத்தி, தமிழ் தெலுங்கு, கன்னடம், ஸிந்தி, குஜராத்தி ஆகிய எட்டு மொழிகளில் நடந்து வரும் கலப சம்ஸ்கிருத பகவத்கீதைத் தேர்வுகளை மேலும் விரிவபடுத்துதல்.

4. பல்வேறு வகுப்புக்களுக்கு, சிறுவர்களின் வயது — அறிவு வளர்ச்சிக்கு ஏற்றபடி இந்திய கலாசாரப் பாட போதனைக்கு உதவ ஆங்கிலத்திலும் பிராந்திய மொழிகளிலும் பாட புத்தகங்களைத் தயாரித்தல்.

5. வேதங்கள், உபநிடதங்கள், பகவத்கீதை மற்றும் பக்தி சாத்திரங்கள்,— ஸ்தோத்திரங்கள் ஆகியவற்றையும், அவை பற்றி உயர்தரமான அறிவுச் சொற்பொழிவுகளையும் ஒலிப்பதிவு செய்து உலகினருக்கெல்லாம் கிட்டும் படி செய்தல்.

6. பத்திரிகைத் துறை, விளம்பரத்துறை, விற்பனைத் துறை, அச்சகத் தொழில், நிர்வாகத் துறை — இப்படிப் பல்வேறு பகுதிகளில் பயிற்சியும் போதனையும் அளிக்க இப்போது பவன் நடத்திவரும் கல்லூரியில் எல்லா அம்சங்களிலும் வசதிகளைப் பெருக்குதலுடன், ஒரு புதுக் கட்டடத்தை நிர்மாணிப்பது. இந்தக் கல்லூரியில் இந்திய கலாசாரம், மதம், சரித்திரம் ஆகியவை கட்டாயப்பாடமாகப் போதிக்கப்படுகின்றன. ஏழு ஆண்டுகளுக்குமுன் ஆரம்பிக்கப்பட்ட இக்கல்லூரியின் ஒரு கிளை புது தில்லியில் இவ்வாண்டு தொடங்கப்பட்டிருக்கிறது. கல்கத்தா, சென்னை, பெங்களூர், ஹைதராபாத் போன்ற இதர இடங்களிலும் இம்மாதிரி கல்லூரிகள் அமைத்தல்.

7. நாடெங்கிலும் உள்ள பவன் கேந்திரங்களுக்குக் கட்டடங்கள் எழுப்புதலும், ஏற்கனவே உள்ள கட்டடங்களுக்கு விஸ்தரிப்புகளும் செய்தல். இவ்வகையில் சென்னைக் கேந்திரத்துக்கு ஒரு கல்யாண மண்டபமும், அந்தேரியிலுள்ள மதுஸினா மண்டலப் பவனுக்கு ஒரு புதுக் கட்டடமும் அடங்கியுள்ளன. தவிர, புதிய கேந்திரங்களும் தொடங்கப்படும்.

8. இந்திய கலாசாரம், வரலாறு பற்றிய பதினொரு தொகுப்பின் மிச்சமுள்ள மூன்று பாகங்களை வெளியிடுதல்.

9. இந்தப் பதினொரு பாகம் கொண்ட நூலை ஹிந்தி மொழியிலும் இதர இந்திய மொழிகளிலும் மொழிபெயர்த்து வெளியிடுவது. அஸ்ஸாமிய மொழியில், அஸ்ஸாம் கலாசாரக் குழுவினரும், சிங்கள மொழியில் இலங்கை அரசாரும் வேத காலம் என்ற முதல் பாகத்தை வெளியிட முன்வந்துள்ளனர்.

10. இந்திய அரசியல் நிர்ணய சட்ட சம்பந்தமான தஸ்தாவேஜிகள் நான்கு பாகங்களாக வெளியிடுதல். இவை தற்போது பவனுடைய சொந்த சொத்தாக இருக்கிறது. குலபதி முன்ஷிஜி சேகரித்து வைத்துள்ள ஆதார தஸ்தாவேஜிகள் இவை யனைத்தும்.

11. பம்பாயிலும் பரோடாவிலும் பெண்களுக்கான தொழில் பள்ளிகளைத் தொடங்குதல்.

12. பம்பாயில் குடும்பக் கலைக் கல்லூரி ஒன்றை அமைப்பது.

13. பம்பாய், அந்தேரி கடற்கரைப் பகுதியில் உடற்பயிற்சி போன்ற இயற்கை முறையில் சிகிச்சை அளிக்கும் விடுதி ஒன்றைத் தொடங்குதல்.

14. ஆயுர்வேத மூலிகைகளைப் பயிராக்கி நாட்டுக்கெல்லாம் கிடைக்கச் செய்ய அந்தேரி பகுதியுள்ள 'பொடானிகல்' தோட்டத்தைத் திருத்தி அமைத்தல்.

15. பவனுடைய தக்கோரா பண்ணையை வளப்படுத்தி, அங்கே ஒரு விவசாயப் பள்ளியைத் தொடங்குதல்.

16. இந்தியச் செய்திகளை உலகெங்கும் வாழும் இந்திய மக்களிடையே பரப்ப உதவியாக உள்ள பவன் இண்டர்நேஷனலின் பணியை விஸ்தரித்தல்.

## உங்கள் மேலான ஆதரவு தேவை

இந்தத் திட்டங்களை யெல்லாம் நிறைவேற்றி வைக்க மேன்மேலும் அங்கத்தினர்களும், நண்பர்களும் ஆதரவாளர்களும், ஊழியர்களும் — எல்லாவற்றுக்கும் மேலாக, நிதியும் தேவை. ஆகவே, முப்பதாவது ஆண்டு விழாவையொட்டி முப்பது லட்சம் ரூபாய் நிதி திரட்ட பவன் ஸ்தாபனம் முன்வந்திருக்கிறது. இந்தத் தொகையைத் திரட்ட பவன் ஸ்தாபனம் கீழ்க்கண்ட முறைகளை மேற்கொண்டுள்ளது :

1. மேலும் முந்நூறு ஆயுட்கால உறுப்பினர்களைச் சேர்த்தல். ஆயுட்கால உறுப்பினர் செலுத்த வேண்டியது — ரூபாய் 1000=00.

2. ஆண்டுக்கு ரூ. பதினைந்து கட்டணமாகவும், பிரவேசக் கட்டணம் ஐந்து ரூபாயும் ஆக, சுமார் 30,000 அங்கத்தினர்களைத் துணை அங்கத்தினர்களாகச் சேர்த்தல்.

3. ஐம்பது சதவிதம் தள்ளுபடியுடன் பவனத்தின் வெளியீடான 3000 செட்டு புத்தகங்களை 80 புத்தகங்களைக் கொண்ட செட்டு ஒன்றை நூறு ரூபாய்க்கு விநியோகித்தல்.

4. பவனின் முப்பதாவது ஆண்டு விழா மலரில் 300 முழுப் பக்க விளம்பரம் சேகரித்தல் (முழுப் பக்கத்துக்கான — விளம்பரக் கட்டணம் 2000 ரூபாய். அரைப் பக்கத்துக்கு ரூ. 1100.)

5. நகராட்சி மன்றங்கள், மாநில அரசுகள், மத்திய அரசு — ஆகியோரிடமிருந்து நன்கொடையாகக் கிடைக்கக்கூடியவை.

6. தனி நபர்கள் தரும் நன்கொடைகள், ஸ்தாபனங்கள், சங்கங்கள், கழகங்கள், வர்த்தகச் சங்கங்கள் போன்றவை அளிக்கும் நன்கொடைகள்.

பவனத்துக்குக் கொடுக்கப்படும் இந்த நன்கொடைகளுக்கெல்லாம் வருமானவரிச் சலுகைகள் உண்டு.

பவனத்தின் மகத்தான இலட்சியங்களைப் பூர்த்தி செய்ய உதவுவதன் மூலம் பாரத நாட்டின் பழம் பெருமைக்கு ஏற்றமும், புதிய வரலாறு படைக்க ஊக்கமும் நீங்கள் அளிக்கிறீர்கள். இந்தப் பணியில் செய்தனவற்றை உறுதியாக்கவும், செய்ய வேண்டியவற்றைச் சீரும் சிறப்புமாகச் செய்து முடிக்கவும் உங்கள் ஆதரவைப் பவன் கோருகிறது.

பவனுக்கு ஆதரவு தந்து உற்சாகம் அளித்து வரும் ஒவ்வொருவருக்கும் பவன் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறது. அவர்களுக்குக் கடமைப்பட்டிருக்கிறது. அவர்கள்தாம் பவனின் வளர்ச்சிக்கு ஊன்றுகோலாக இருப்பவர்கள்.

பவனின் யாத்திரையின் முக்கியமான மைல் கல்லாக அமைந்துள்ள இந்த ஆண்டில், அதனுடைய எதிர்காலத் திட்டங்களைப் பூர்த்தி செய்ய எல்லாருடைய தாராளமான உதவியைத் தயங்காது அளிக்க வேண்டுகிறோம்.

எஸ். ராதாகிருஷ்ணன்

சி. ராஜகோபாலாச்சாரி

வி. வி. கிரி

ஜெயப்பிரகாஷ் நாராயண்

எஸ். கே. பாட்டீல்

கே. எம். முன்ஷி

எச். வி. திவேதியா

எஸ். நிஜலிங்கப்பா

லீலாவதி முன்ஷி

## நீங்கள் செய்யக்கூடிய உதவி

நீங்கள் இந்நாட்டவரானாலும் வெளிநாட்டினரானாலும், தொன்றுதொட்டு வந்துள்ள பாரதீயப் பண்பாட்டின் முக்கிய அம்சங்களான, சிரத்தை, நல்லொழுக்கம், சமர்ப்பணம் ஆகிய இம்மூன்றிலும் நம்பிக்கையுள்ளவர்களானால், பாரதீய வித்யா

"பணிக் சேர வாருங்கள் என உங்களைப் பணிவுடன் அழைக்கிறோம். நீங்கள் பவனுக்குக் கீழ்க்கண்ட வகைகளில் உதவி புரியலாம்:

## அங்கத்தினராதல்

நூறு ரூபாயோ, ஐம்பது பவுண்டு அல்லது 150 அமெரிக்க டாலரோ செலுத்திப் பவனின் ஆயுள் அங்கத்தினராகச் சேரலாம். ஆயுள் அங்கத்தினர்களுடைய உரிமைகளாவன :

1. ஆயுட் காலத்துக்கு ஆங்கில சஞ்சிகையான ''பவன் சஞ்சிகை'' அல்லது குஜராத்தி மொழி சஞ்சிகையான ''ஸமர்ப்பணம்'' இவற்றில் ஒன்றை இலவசமாகப் பெறுதல். இச்சஞ்சிகை பல பிரமுகர்களின் வாழ்க்கை, இலக்கியம், கலாச்சாரம் ஆகியவற்றை விளக்குவது.

2. ஏற்கனவே பிரசுரமானதும், இனிப் பிரசுரிக்கவிருக்கும் நூல்களையும் விலையில் 25 சதம் தள்ளுபடி செய்து பெற்றுக் கொள்ளுதல்.

3. 65000 நூல்கள் அடங்கிய பவன் தலைமை ஸ்தாபன புத்தகாலயத்துக்கும் அதன் கேந்திர ஸ்தானங்களிலுமுள்ள நூல் நிலையங்களுக்கும் தாராளமாகச் சென்று பயன்பெறுதல்.

4. பவன் விடுதிகளில் தங்குவதற்கு முன் உரிமை. தங்கும் வசதியில்லாத கேந்திரங்களில் இவற்றை அமைத்துக் குறைந்த வாடகையில்விட உத்தேசித்துள்ளது.

5. பாரதீய வித்யாபவன் நிகழ்ச்சிகள் எல்லாவற்றுக்கும் இலவச அனுமதி.

துணை அங்கத்தினர்களாக ரூ. 20 செலுத்தி (நுழைவுக் கட்டணம் ஐந்து ரூபாயும், ஆண்டுச் சந்தா பதினைந்து ரூபாயுமாக) கீழ்க்கண்ட உரிமைகளை அங்கத்தினராக இருக்கும் வரையில் பெறலாம்:

1. பவன் சஞ்சிகையை இலவசமாகப் பெறுதல்.

2. பவன் பிரசுரங்களை விலையில் 25 சதம் தள்ளுபடி பெறுதல்.

3. அந்தந்தக் கேந்திரங்களில் நடைபெறும் நிகழ்ச்சிகளுக்கு இலவச அழைப்புகள்.

3 முப்பதாண்டு பூர்த்தியை அனுசரித்துப் பவன் கலாசாலை நூல்களுக்கு விலையில் விசேஷத் தள்ளுபடி.

முப்பதாண்டு பூர்த்தி விழாவையொட்டி 1968 ஜனவரி 31 வரை பவன் புத்தகங்களில் நீங்கள் விரும்பும் எந்த எண்பது புத்தகங்கள் அடங்கிய செட் ஒன்றுக்கு ரூ. 100 விதம் குறைந்த விலைக்குத் தரப்படும். இது சாதாரண விற்பனை விலையில் பாதி விலையே யாகும். எண்பது புத்தகங்களுக்கு மேல் வாங்குபவர்களுக்கும் இந்தச் சலுகை உண்டு.

1951ம் ஆண்டில் ஆரம்பிக்கப்பட்ட பவன் நூல் நிலையக் கல்லூரி, நாட்டிலேயே இத்துறையில் முதன்மையானது. பாரதீய கலாசாரத்தின் ஆழ்ந்த கருத்துக்களை உலகினுக்கு அளிக்கத் தகுந்த நூல்களைத் தயாரிக்கும் பணியை இது மேற்கொண்டுள்ளது. இதுவரை 150 புத்தகங்கள் பிரசுரிக்கப்பட்டு இருபது லட்சம் பிரதிகள் உலகெங்கிலும் விற்கப்பட்டுள்ளன. இப்புத்தகங்கள் சிலவற்றின் ஆசிரியர்கள், மகாத்மாகாந்தி, வினோபா பாவே, சி. ராஜகோபாலாச்சாரி, ஸர் சி.பி. ராமஸ்வாமி அய்யர், ராதா குமுத் முகர்ஜி. கே. எம். பணிக்கர், ஸ்ரீ பிரகாசா, ஜான்டூயி, கெய்ஸர்லிங், இளவரசர், ஏ. லொரோகின், லூயி ஃபிஷர் முதலிய அறிஞர்கள். பல நூல்கள் பிரஞ்சு, ஸ்பானிஷ், ஜெர்மன், ருமேனிய மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

## நன்கொடைகள்

நன்கொடைகள் மிகவும் விரும்பி வரவேற்கப்படுகின்றன. பவனுடைய பல துறைப் பணிகளுக்கு நன்கொடைகள்தாம் பெரிதும் உதவுகின்றன.

உங்களுக்கு விருப்பமிருந்தால் பவன் லட்சியத்தில் பிரத்தியேக அம்சங்களுக்காக வென்று குறிப்பிட்டு நன்கொடைகளை வழங்கலாம்.

குறிப்பிட்ட ஸ்தாபனங்களின் பெயர்களைக்கூட நன்கொடையாளர்களின் அல்லது அவர்களுடைய வாரிசுகளின் பெயர்களுடன் இணைத்து அமைக்கப்படும் சாத்தியமும் உண்டு.

விசேஷப் பயிற்சி அணிகளுக்காக ஆண்டுக்கு ரூ. 1200 விதம் ஒவ்வொரு வித்யார்த்திக்கு ரூ. 15000 நன்கொடையளிக்கலாம். பவனுக்கு அளிக்கப்படும் நன்கொடைகளுக்கெல்லாம் வருமான வரிச் சலுகை உண்டு.

## விளம்பரம்

முப்பதாவது ஆண்டு சம்பந்தமாக வெளியிடப்படும் விசேஷ மலரில் விளம்பரம் செய்ய நீங்கள் முன்வரலாம்.

இதில் பல அரிய கட்டுரைகளும் கருத்துக்களும் அடங்கியுள்ளன. பல அறிஞர்களால் எழுதப்பட்டவை.

விளம்பர விகிதம்: முழுப்பக்கம் ரூ. 2000
அரைப்பக்கம் ரூ. 1100

'' செல்வந்தர்களின் செல்வம் நற்பணிகளுக்குச் செலவிடுவதற்கே !''

# விருது பெற்ற பணி

எஸ். வி. எஸ்



அன்று கேசவ பிள்ளை பத்திரிகையைத் திறந்தபோது, ஓர் அதிர்ச்சி ஏற்பட்டது !

ஆம், அவருக்கு ராஷ்டிரபதி, ''பத்ம பிரபாகர்'' என்ற புது விருது அளித்திருப்பதாகப் பார்த்தவுடன் அவருக்கு ஏற்பட்ட வியப்பு கொஞ்சநஞ்சமல்ல.

சதராஸ் (சதுரங்கப் பட்டண) சர்வகலாசாலையில் சர்வசாதாரண தலைமைக் குமாஸ்தாவுக்கு இப்படியொரு பட்டம் கிடைப்பது என்றால் நம்பக்கூடிய விஷயமாகவா இருக்கிறது !

இந்த வியப்பு அவருக்கு மட்டுமல்ல. பல்கலைக் கழகத்தின் பிரபல பேராசிரியர்கள், ஆராய்ச்சி நிபுணர்கள், துணை வேந்தர் — இப்படி எத்தனையோ பேர்கள் இருக்க, அச்சர்வகலாசாலையில் பட்டம் பெறுபவர்களின் அத்தாட்சிப் பத்திரம் எழுதித் தரும் சர்டிபிகேட் இலாகாவின் தலைமை குமாஸ்தாவுக்கு இப்பட்டம் கிடைத்திருக்கிறது என்பதில் உலகமே வியப்பிலும் அதிர்ச்சியிலும் ஆழ்ந்து விட்டது !

சிறிது நேரத்தில் பிள்ளைக்கோ, வியப்பு நீங்கி மகிழ்ச்சி தோன்றத் தொடங்கியது. மற்றொரு பக்கம் தானன்றி வேறு யாராவது இருக்குமோ இந்த விருதுக்கு உரியவர் என்று ஒரு கணம் சந்தேகம் எழுந்தது. ஆனால் சதராஸ் சர்வகலாசாலையில் சர்டிபிகேட் இலாக்காவின் தலைமைக் குமாஸ்தா திரு கேசவபிள்ளையின் அருமையான நாட்டுப் பணியைப் பாராட்டி இப்புது விருது கொடுத்திருப்பதாக அல்லவா எழுதியிருக்கிறது? ஆகவே, தன்னைத் தவிர வேறு யாருமல்ல என்பது திரு கேசவபிள்ளைக்கு உறுதியாகியது. இருந்தாலும் துணை வேந்தர், பேராசிரியர்கள், ஆராய்ச்சி நிபுணர்கள்— இப்படி எத்தனையோ பேர் இருக்கத் தன்னை ஜனாதிபதி தேர்ந்தெடுத்துப் பட்டம் வழங்குவானேன் ? இது என்ன மர்மம் என்று ஒரு கணம் நினைப்பார். அடுத்த கணம், இந்த இலாக்காவில் இருபத்தைந்து ஆண்டுகளாக வேலை செய்கிறேன். நான் கண்டது என்ன? பெரிய பெரிய பேராசிரியர்கள், நிபுணர்களிடமிருந்து திட்டுக்களும் வசவுகளும் தான் வாங்கிக் கட்டிக் கொண்டிருக்கிறேன்! ஏன், முந்தாநாள்கூட அந்தப் பேராசிரியர் கனகரத்தினம் என்னமா என்னைத் திட்டி விட்டுப் போனார். இப்படி அவர் மனத்தில் சிந்தனையோடியதும், அந்தக் காட்சியே மனத்திரையில் நிழலாடியது !

திருவாளர் கனகரத்தினம் தாவர சாஸ்திரத்தில் பல அற்புதமான ஆராய்ச்சிகள் சென்ற இருபதாண்டுகளாகச் செய்து, அவர் பெயருக்குப் பின்னால் பலப் பல பட்டங்களை ஈட்டிக் கொண்டவர். மேனாட்டுத் தாவர சாஸ்திர ஆராய்ச்சி உலகில், அவருக்கு மிக உயரிய ஸ்தானமுண்டு. அவர் சதுரங்கப் பட்டண சர்வகலாசாலையில் அடிநாளில் தாவர சாஸ்திரம் படித்து முதன்மையாகத் தேறிப் பட்டம் பெற்றவர்.

சமீபத்தில் அவருக்கு அமெரிக்க சர்வகலாசாலையிலிருந்து இரண்டு ஆண்டுகள் தங்கள் ஆராய்ச்சிக் கூடத்தில் பணி புரிய அழைப்பு வந்தது. அதை ஏற்றுக் கொண்டார். பிரயாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளில் இறங்கிய போது அமெரிக்க அரசாங்கம் இருபதாண்டுகளுக்கு முன்பு, சதுராஸ் சர்வகலாசாலையில் முதன் முறையாகப் பெற்ற பட்டம் தேவை என்று தெரிவித்தது. திருவாளர் கனகரத்தினம் தாம் பெற்ற பட்டங்களின் குவியலில் அதைத் தேடினார். கிடைக்கவில்லை. அதனால் என்ன? சதராஸ் சர்வகலாசாலைக்கு எழுதினால் பழைய ரிக்கார்டுகளைத் தேடி ஒரு பிரதி கொடுத்து விட்டுப் போகிறார்கள் என்று நினைத்து எழுதினார். ஒரு வாரம் கழித்து 'நீங்கள் இருபது ரூபாய் ஸ்டேட் பாங்கில் செலுத்தி செலான் அனுப்பினால் தேடித் தரப்படும்' என்று பதில் வந்தது. அப்படியே செய்தார். பதினைந்து நாட்களாயின. எவ்விதப் பதிலும் இல்லை!

இதற்குள் வெளிநாட்டுப் பிரயாணத்துக்கு வேண்டிய மற்ற சாங்கியங்களையெல்லாம் முடித்துக் கொண்டு வந்தார். இருபது நாட்களாயின. பதில் இல்லை!

ஆம், திரு கனகரத்தினத்துக்கு என்ன தெரியும்? அவர் கடிதம் திரு கேசவபிள்ளை மேஜையில் ஒரு மாபெரும் பாறாங்கல்லின் கனத்தைப் பெற்று அசையாமல் இருக்கிறது என்பது !

இதற்குள் அவர் புறப்படும் நாள் நெருங்கிக் கொண்டிருந்தது. அவர் வடக்கே தில்லி சர்வகலாசாலையில் பணிபுரிந்து வந்தார். அந்த வேலையை விட்டு விட்டுத்தான்

அமெரிக்கா போகத் திட்டமிட்டிருந்தார். இன்னும் ஒரு வாரம்தான் இருந்தது அவர் புறப்படுவதற்கு! அவருக்குச் சதராஸிலிருந்து தனது பட்டத்தின் பிரதி இன்னும் வரவில்லையே என்பது பெருங் கவலையாகி விட்டது. இன்னும் இங்கேயே இருந்தால் போதாது என்று நேரே போய்ப் பார்க்க வேண்டும் என்று வந்தார். நேரே சர்வகலா சாலை மண்டபத்துக்குள் போய், திரு கேசவ பிள்ளை இலாக்காவுக்கே போனார். தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டார்.

திரு கேசவபிள்ளை, "ஓ, நீங்கதானா, திரு கனகரத்தினம்?" உங்க பேப்பர்தான் இப்போது கவனித்துக் கொண்டிருக்கிறேன்.... இதோ பாருங்கள்!" என்று இருபது நாட்களாக அவர் மேஜையின் மேல் வலது பக்கம் தூங்கும் திரு கனகரத்தினத்தின் கடிதத்தைக் காட்டினார்.

"நான் இதை அனுப்பி இருபது நாட்களுக்கு மேலாகிறது! எவ்வளவு அவசரமான காரியம்.....!" என்றார் திரு கனகரத்தினம்.

"நீங்கள் இருபது நாட்களுக்கு முந்தி அனுப்பிய கடிதத்தைப் பற்றிச் சொல்லுகிறீர்கள்.... இதோ பாருங்கள், இரண்டு



மாதங்களுக்கு மேலாகக் காத்திருக்கும் கடிதங்கள்...." என்று இடது பக்கம் ஒரு போராகக் குவிந்து கிடக்கும் கடிதங்களைக் காண்பித்தார். இதற்குள் ஓர் இளைஞன், "ஸார்.... ஸார்...." என்று கேசவ பிள்ளையின் கவனத்தை இழுக்க முயன்றான். திரு கனகரத்தினத்திடம் பேசிக் கொண்டிருந்தவர் இளைஞன் பக்கம் திரும்பி, "என்னப்பா?" என்றார்.

"ஸார், மூன்று மாதங்களுக்கு முன்பு மதுரை ஸ்டேட் பாங்கில் பணம் செலுத்தி, செலானுடன் என் எம். ஏ. பட்டம் பிரதி வேண்டும் என்று கேட்டு எழுதியிருந்தேன். இன்னும் வரவில்லை...." என்று இழுத்தான்.

திரு கனகரத்தினம் மூன்று மாதம் முந்தி அனுப்பியவன் பாடே இப்படியென்றால் நாம் என்ன சொல்லவிருக்கிறது என்று நினைத்துக் கொண்டார். கோபப்பட்டுப் புண்ணியமில்லை. கெஞ்சிக் கேட்டுக் கொள்ள வேண்டியதுதான் என்று நினைத்துக் கொண்டார்.

பிறகு தமது இக்கட்டான நிலையை விளக்கினார் திரு கனகரத்தினம்.

திரு கேசவபிள்ளை தம்மால் எவ்வளவு சீக்கிரம் தர முடியுமோ அவ்வளவு சீக்கிரம் அவர் பட்டப் பிரதியைத் தருவதாக வாக்களித்து அன்றையப் பொழுதுக்குத் திரு கனகரத்தினத்தை அனுப்பி வை/தார்.

மறு நாள் திரு கனகரத்தினம் வந்த போது, அவர் பட்டம் பெற்றது இருபது ஆண்டுகளுக்கு முந்தியாதலால் அந்த ரிஜிஸ்டரையே காணவில்லை; தேடிக் கொண்டிருப்பதாகச் சொல்லி வைத்தார். கனகரத்தினம் முகம் சோர்ந்து திரும்பினார்.

மறு நாள் சென்ற போது சர்வகலா சாலை ஊழியர் யாரோ காலமாகிவிட்டதால், காரியாலயத்துக்கு விடுமுறை என்று அறிவிக்கப்பட்டிருந்தது.

அதற்கடுத்த நாள் திரு கேசவபிள்ளை வீட்டில் யாருக்கோ உடம்பு சரியில்லாமல் போனதால், அவர் விடுமுறை எடுத்துக் கொண்டிருந்தார்.

இப்படி அவர் புறப்பட வேண்டிய நாள் நெருங்கிக் கொண்டிருக்க அவருக்குக் கிடைக்க வேண்டிய ஸர்டிபிகேட் பிரதி கிடைக்கும் நாளும் தள்ளிப் போய்க் கொண்டிருந்தது. கனகரத்தினத்துக்கு மனம் சமுத்திர அலை படும் பாடு பட்டது. என்ன செய்வார்? அவராகச் செய்யக்கூடியது ஒன்றுமில்லை. அவர் புறப்படுவதற்கு இன்னும் மூன்று நாட்கள்தாம் இருந்தன. நாளைக்குக் கிடைத்தாலும் போதும், ஆகாய விமானத்தில் தில்லிக்குப் பறந்து சென்று, குறித்த நாளில் தில்லியிலிருந்து மேனாட்டுக்குப் புறப்பட்டு விடலாம் என்று மனத்தைத் தேற்றிக் கொண்டார்.

மறு நாள் காலை வழக்கம் போல் திரு கனகரத்தினம், திரு கேசவபிள்ளையைப் பார்க்கச் சென்றார்.

"ஸார், உங்கள் ஸர்டிபிகேட்டெல்லாம் ரெடியாகி விட்டது!"

"அப்படியானால் ரொம்ப சந்தோஷம். கையில் கொடுத்து விடுங்கள்......"

"ஐயோ! கையில் கொடுக்கக் கூடாதே! ரிஜிஸ்தர் தபாலில்தானே அனுப்ப வேண்டும். இன்று காலை ரிஜிஸ்தர் தபாலில் அனுப்பி விட்டோமே, உங்கள் பேருக்கு...." என்று கூறினார் கேசவபிள்ளை அமைதியாக.

கனகரத்தினம் அந்த நிமிஷம் நெற்றிக் கண்ணைத் திறந்த சிவபெருமானாகவே ஆகி விட்டார்.

"ஏன், ஐயா, ரிஜிஸ்தர் தபாலில் அனுப்பினால் ஒரு நாளில் தில்லி போய்ச் சேர்ந்து விடுமா? நாளை மறு நாள் நான் புறப்படத் திட்டமிட்டிருக்கிறேன். ஆள் நேரில் இருக்கும் போது என் கையில் கொடுக்காமல் என்ன ஐயா, சட்டம் இது....." என்று கத்து கத்து என்று கத்தி விட்டார்.

"இது ஆபீஸ். இங்கு உங்களுக்குக் கூச்சல் போட அநுமதி கிடையாது...." என்றார் கேசவபிள்ளை சாவதானமாக.

எரிகிற கொள்ளியில் எண்ணெய் விடுவது போலிருந்தது!

என்ன செய்ய முடியும்? தில்லிக்குத் திரும்பினார் கனகரத்தினம். தில்லிக்குத் திரும்பிய இரண்டு நாட்கள் கழித்து அவர் பட்டம் வந்து சேர்ந்தது.

அதற்கடுத்த நாள் அமெரிக்க சர்வகலா சாலையிலிருந்து, அவருக்குப் பதில் ஒரு

ஜப்பானியப் பேராசிரியரை நியமித்துவிட்டதாகத் தகவல் வந்தது !

இப்படி எத்தனை மாணவர்கள், பேராசிரியர்கள் திரு கேசவபிள்ளையை வாழ்த்தியிருக்கிறார்கள் !

இருந்தாலும், கேசவபிள்ளை, 'என் மனச்சாட்சிக்கு விரோதமில்லாமல்தான் நாளெல்லாம் உழைக்கிறேன்! யார் வாழ்த்தையும் புகழ்ச்சியையும் எதிர்பார்க்காமல் வேலை செய்ததற்குக் கடவுளாகப் பார்த்து இந்தப் பட்டம் வழங்கியிருக்கிறார். அதனால்தான் கடவுள் இருப்பது உண்மை' என்று நினைத்துக் கொண்டார்.

பட்டமளிப்பு விழா வந்தது ! திரு கேசவ பிள்ளை தில்லி ராஷ்டிரபதி மாளிகைக்குச் சென்றார். ராஷ்டிரபதி தம் கையாலேயே பத்ம பிரபாகர் என்ற பட்டம் வழங்கினார். அதில் பின்வருமாறு எழுதியிருந்தது :

நாட்டை விட்டு ஏராளமான விஞ்ஞானிகளும், பொறி இயல் நிபுணர்களும், டாக்டர்களும் மேனாடுகளில் வேலை தேடிக் குடியேறும் இச் சமயத்தில், நாட்டின் அறிவுச் செல்வத்தை வெளியேற விடாமல் தடுத்து, அரும் சேவை புரிந்துள்ள திரு கேசவ பிள்ளையைப் பாராட்டி ''பத்ம பிரபாகர்'' என்ற விருதை வழங்குகிறோம். —ராஷ்டிரபதி.''

இதைப் படித்தவுடன், நமது பணிக்கு இதுகாறும் ஏச்சுத்தான் கிடைத்து வந்தது! இப்படிக்கூடப் பாராட்டுக் கிடைக்கும் என்று கருதவே இல்லையே என்ற எண்ணம் மனத்தில் எழுந்த போது அவர் இதழ்களில் மெல்லிய புன்னகை தவழ்ந்தது.

''தூக்கத்திலேயே என்ன சிரிப்பு வேண்டிக்கிடக்கிறது? பகல் தூக்கத்திலேயே கனவா? நன்றாக இருக்கிறது ! சூடா காப்பி கொண்டு வந்திருக்கிறேன். எழுந்திருந்து சாப்பிடுங்கள் !'' என்றாள் கேசவபிள்ளையின் இல்லத்தரசி.

கண்ணைத் திறந்தார் கேசவபிள்ளை, தமது சாய்மான நாற்காலியிலிருந்தபடியே! அவர் மார்பின் மேல் அன்றையக் குடியரசு தினப் பத்திரிகை கிடந்தது !

குடியரசு தின விடுமுறை பகலில் சாப்பிட்டு விட்டுச் சாய்மான நாற்காலியில் படுத்துக் கொண்டே, குடியரசு தின விருதுகள் பெற்றவர்கள் பெயர்ப் பட்டியலைப் படித்துக் கொண்டே தூங்கிப் போனது புலனாயிற்று!

''என்ன பட்டம் வேண்டிக் கிடக்கிறது ! அத்தனை பட்டங்களும் இவள் விடுமுறை நாளில் மத்தியானம் போட்டுத்தரும் நறுமண காப்பிக்கு ஈடாகுமா ?'' என்று சொல்லிக் கொண்டே எழுந்தார் பிள்ளை.

**57ம் பக்கத்துக்கு விடை :**

| | |
|---|---|
| 1. 4லிருந்து 6 வரை. | 2. 3முதல் 12 வரை |
| 3. 1 மட்டும். | 4. 1 ,, 2 ,, |
| 5. 6 முதல் 12 வரை. | 6. 3 ,, 9 ,, |
| 7. 1 மட்டும். | 8. 5 ,, 7 ,, |
| 9. 1 மட்டும். | |



நாடக விமரிசனம்

# மண் பொம்மை

உலகத்தை நாடகமாகவும் நாடகத்தை உலகமாகவும் கூறுவது போல், ஆண்டவனை மாயக் குயவனாகவும், அவன் படைத்த உயிரினங்களை மண் பொம்மையாகவும் காணும் மரபை ஒட்டி எழுந்த இந்தக் கதைக்கு முக்கிய கதாநாயகன் ஆறுமுகம் என்னும் ஒரு குயவன். அவன் வாழ்வைச் சுற்றிப் படரும் கதையிலே மண் பொம்மைகளுக்கு வேலை இருக்கிறது. அப்படி வரும் ஒரு பொம்மை உயிரை விட்டு நடித்திருக்கிறது. அல்லது மடிந்திருக்கிறது என்றும் கூறலாம். நடிப்புக் கலையும், மேடை உத்தியும் மிக வளர்ந்திருக்கும் இந்த நாளிலே அது உடைந்து சுக்கு நூறாகி மடிவதைக் காட்டினும் நடித்தே உயர்ந்திருக்கக் கூடும். எதையும் தத்ரூபமாகக் காட்டி நடித்து வெற்றி காண வேண்டும் என்ற ஆசையில் பொம்மையைப் பலிகொடுத்திருக்கும் இந்த நாடகத்தில் நடிப்புக்கு எத்தனை முக்கியத்துவம் கொடுத்திருப்பார்கள் என்பதைக் கூறத் தேவையில்லை. அதோடு கதையையும் சுவடு மாற்றிக் கொண்டு போயிருப்பது பாராட்டுக்குரிய அம்சம்.

ஆறுமுகமாக வரும் ஸ்ரீ ஜி. சீனிவாசன் உணர்ச்சியோடு நடித்து ரசிகர்களின் இருதயத்தில் இடம் பெறுகிறார். ஒட்டு வீட்டு உலகப்பனாக வரும் டாக்டர் சேஷாத்திரி நடிப்பை நடிப்பாகப் பயின்று அநாயாசமாகப் புகழைத் தட்டிக் கொண்டு போகிறார். கண்ணம்மா — மன்னாரு ஜோடியாக கே. ஆர். விஜய கமலமும் மதுரை சுராஜும் 'திரைப் படத்தின் தாயகம் நாடக மேடை' என்னும் சொல்லைப் புதுப்பித்து நாடக மேடையில் திரையுலகைக் கொண்டு வருகிறார்கள். நாடகக் கதைக்குப் பொருந்தாத நகைச்சுவையானாலும் நடிகர்கள் நகைச்சுவைக்குப் பொருந்துகிறார்கள். ஏற்ற பாத்திரத்துக்குக் குற்றம் கூற இயலாமல் எல்லாருமே நடித்திருக்கிறார்கள். சுருங்கச் சொன்னால் குறை குறைவாகவும் நிறை நிறைவாகவும் உள்ள 'மண் பொம்மை' இன்னும் 'நகாசு' பெற்றால் மிளிரக் கூடிய ஒரு நாடகம்தான்.





# திட்டம் போட்ட குட்டிக்கரணம்

இருள் நீக்கி கணேசன்

இன்று வெள்ளிக் கிழமை.

யாரோ ஒரு மந்திரி இறந்து புண்ணியத்தைக் கட்டிக் கொண்டார். அலுவலகத்துக்கு விடுமுறை. அங்கு சென்ற பின்தான் தெரிந்தது. இரண்டு நிமிடம் மௌனம் என்று பெயர்தான். அரை நிமிடத்திலேயே அவருடைய ஆத்மாவை அமைதியில் இருக்கச் செய்து விட்டோம்!

சாதாரண விடுமுறை நாட்களிலேயே இந்த ஹனுமான் மட்டியில் பொழுதைப் பிடித்துத்தான் தள்ள வேண்டும்! இந்த ஸ்பெஷல் விடுமுறையை எப்படிக் கழிப்பது?

வீட்டுக்குள் நுழைந்து, செருப்புக்களை 'ஸ்டோர் ரூமி'ல் விட்டபொழுதுதான் பளிச் சென்று அந்த ஞானோதயம் ஏற்பட்டது! என்னுடைய 'ஸ்டோர் ரூம்' ஒழிப்புத் திட்டத்தை நிறைவேற்றினால் என்ன?

வீட்டுக்கு வீடு வாசற்படி என்பார்களே, அப்படி வீட்டுக்கு வீடு ஒரு 'ஸ்டோர் ரூம்' இருக்கத்தான் செய்கிறது. அநேகமாக எல்லோர் வீட்டிலும் இது ஒரு திருஷ்டி பரிகாரம்தான். ஆனாலும் நிஜமாகச் சொல்லுகிறேன். 'சாலார்ஜங்' மியூஸியமெல்லாம் என் வீட்டு ஸ்டோர் ரூம் முன் பிச்சை வாங்க வேண்டும்!

அலங்கோலமாக பரந்து கிடந்த சாமான்களை ஒரு மாதிரியாக பங்கிடு செய்து ஸ்டோர் ரூமை பார்க்கிறாற்போல் 'நீட்'டாக வைக்கலாமென்று இந்த 'சா. அ. ஒ. திட்டம்' (சாமான் அறை ஒழிப்புத் திட்டம் — ஸ்டோர் ரூம் ஒழிப்புத் திட்டத்தின் சரியான தமிழ் வடிவம்) ஞாபகம் வந்தவுடன் 'ஹோம் மினிஸ்டரை' (சகதர்மிணியை) சந்தித்தேன், இதுபற்றி விவாதிக்க.

''க்கும்' வாழ்ந்தேள். இத்தனை நாட்களாக ஸ்டோர் ரூம் ஒழித்துக் கிழித்தேள்! இன்னிக்குத்தான் ஒழிக்கப் போறேளாக்கும் !'' — அவள் சாடினாள்.

''சரி! ஆரம்பத்திலேயே 'அஸ்க்' போட்டு விட்டாயாக்கும்.'' — நான் வாடினேன். ''காரியம் ஆனாற்போலத்தான்.''

மனைவி சொல்வதும் வாஸ்தவம்தான் ! இந்த 'சா. அ. ஒ. திட்டம்' இன்று போட்டால் அது நான்காவது தடவை !

இந்தத் தடவை விடுவதில்லை ! திட்டம் எப்படியும் நிறைவேறியே ஆக வேண்டும் !

''டேய், பசங்களா ! இன்றைக்கு எல்லாருக்கும் லீவுதானே ! யாரும் வீட்டை விட்டு நகரப்படாது. என் கூடமாட ஒத்தாசை செய்யணும்.'' — அழுக்கு வேட்டியை மூலைக் கச்சமாகக் கட்டிக் கொண்டே நான் சொன்னதைக் கேட்டதும், ''ஸ்டோர் ரூம் ஒழிக்கிறதுக்கா ?'' — கேட்கும் போதே என் 'அதுகள்' மூஞ்சி அழுகல் வாழைப் பழம் தின்ற மாதிரி ஆகிறது ?

பிறகு என்ன தோன்றியதோ! ஒன்றின் முகத்தை ஒன்று பார்த்துக் கொண்டு ஒரு வழியாகச் 'சரி' என்று தலையை ஆட்டிவிட்டன. நல்ல வேளை, அம்மாக்காரியிடம் 'கன்ஸல்ட்' செய்யவில்லை !

மணி மத்தியானம் இரண்டரை.

''டேய், கண்டு ! முதல்லே மெதுவா ஸ்டோர் ரூமில் இருக்கிற கரிப் பெட்டியை வெளியிலே எடுத்து வை'' என்று உத்தரவு போட்டுவிட்டு ஒரு 'மடக்குத்' தண்ணீர் குடித்து வர உள்ளே சென்றேன்.

''ஐயையோ ! அ...ப்...பா...! அப்பா!'' என்று காலில் கல்லைப் போட்டுக் கொண்ட மாதிரி கண்டுதான் அலறினான்.

''என்னடா, சனியனே ! உயிர் போகிற மாதிரிக் கத்தறே?'' நானும் காலில் வெந்நீரைக் கொட்டிக் கொண்டவன் மாதிரி விரைந்தோடி வந்தேன்.

''அப்....பா! பாம்... பாம்....பாம்பு!''

''எங்கேடா? எங்கே? சொல்லித் தொலே!'' அவன் தலையில் நறுக்கென்று ஒன்று வைத்தேன்.

''அதோ ! அதோ !'' — அழுகையினூடே எங்கோ ஒரு மூலையில் கையைக் காட்டினன்.

''நன்னு இருக்கு! அப்பாவும் பிள்ளையும் அடிக்கிற கொம்மாளம்!'' — தூக்கக் கலக்கத்தில் இருந்த மனைவி வந்து விட்டாள் அங்கே.

''அம்மா ! அம்மா! பாம்பு, அந்தக் கரிப் பெட்டியின் பின்னுல.'' — கண்டு.

''என்ன பாம்பா ? சொன்னுல் கேட்டால்தானே? வெய்யில் வேளையில் வேண்டாமென்றுல் விட்டுடணும்'' என்று அவள் எரிச்சலுடன் கத்தினள்.

''அதோ ! அதோ! வால் தெரியறது !'' — கண்டு அலறினன்.

எனக்கோ கையும் ஓடவில்லே; காலும் ஓடவில்லே.

''ஏன் இப்படிச் சிலேயாட்டமா நிற்கிறேள்? அடியுங்கோளேன் அதை !'' என்று கம்பை என் கையில் திணித்தாள்.

எப்படியோ தைரியத்தை வரவழைத்துக் கொண்டு ஸ்டோர் ரூமில் அடியெடுத்து வைத்தேன். அவளும் தான் வந்தாள் பின்னுலேயே!



பாம்பை எப்படி வெளியில் கொண்டு வருவது? பெட்டியை அப்படி இப்படி இழுக்கவோ பயம். என்ன ஆனுலும் ஆகட்டுமென்ற அசட்டுத் தைரியத்தில் கரிப் பெட்டியை 'டம்' என்று ஒரு தட்டுத் தட்டினேன். வாலே மட்டும் காட்டிக் கொண்டிருந்த 'அது' உள்ளேயே போய் விட்டது.

''இதேதடா கர்மம்! உள்ளேயே போய்விட்டதே!'' — பேந்தப் பேந்தப் பரிதாபமாக விழித்தேன்.

''வாழ்ந்தேள் ! கொடுங்கள், அந்தக் கம்பை. நகருங்கள்!'' — பலவந்தமாக என் கைக் கம்பைப் பிடுங்கிக் கொண்டு, என்னேயும் இடித்து ஒரு தள்ளுத் தள்ளிவிட்டுப் பெட்டியைத் தரதரவென்று இழுத்தவளின் முகம் ஏன் இப்ப 'வே' என்ருகி விட்டது ?

''அட, அது நாசமாய்ப் போக! பாம்புமில்லே, கிம்புமில்லே ! பாம்பு அரணே ! அதுவும் செத்தது !'' என்று அதைக் கம்பால் கொந்திக் கொண்டே கடுகடுத்தாளே பார்க்கலாம் !

என் முகத்தில் வழிந்த அசடுக்கு ஏழு எண்ணெய்க் குடங்களும் போதாது!

''போதும், நீங்கள் ஸ்டோர் ரூமை ஒழித்தது'' என்று என்னே வெளியில் தள்ளி, 'ஸ்டோர் ரூம்' கதவையும் என் மூஞ்சியில் அடித்தாற் போல் 'படார்' என்று இழுத்துச் சாத்தித் தாழ்ப்பாள் போட்டுவிட்டு, ஒரு சுவர்ப் புறத்து மூலையாகப் பார்த்துப் புடவைத் தலேப்பால் தூசியைத் தட்டிவிட்டு, அதையே தரைக்கு விரித்துக் கொண்டு படுத்து விட்டாள்.

நான் தலையைச் சொறிந்து கொண்டு 'அவளே'யே பார்த்துக் கொண்டிருந்தேன், அவள் கண்ணயரட்டும் என்று.

தொட்டுப் பார்த்தேன். நன்ருகத் தூங்கி விட்டாள் என்பதை உறுதிப்படுத்திக் கொண்டதும் ஓசைப்படாமல் 'ஸ்டோர் ரூம்' தாழ்ப்பாளே அகற்றி உள்ளே புகுந்தேன். மணி மூன்றரை.

நான் கருமமே கண்ணுக வேலையைத் தொடர்ந்தேன். கரிப்பெட்டி, ஓலேப்பெட்டி—என்று ஒவ்வொன்ருக வெளிமுற்றத்தில் கொண்டு வந்து வைத்துவிட்டு, முதலில் விறகுக் கட்டைகளே ஒழுங்காக அடுக்கி வைக்க ஆரம்பித்தேன்.

''ஐயோ !'' — ஒரு விறகுச் சிராம்புதான் ஆள்காட்டி விரலேப் பதம் பார்த்துவிட்டது. இன்னுமொரு அபசகுனமா? சத்தம் கேட்டு எங்கே மனைவி வந்து விடுவாளோ என்று பயந்து கொண்டே ரத்தம் வழியும் விரலே நன்ருக வாயில் வைத்துச் சப்பிவிட்டுக் கொண்டு வேலையைத் தொடர்ந்தேன்.

மணி நாலே கால்.

''ஹைய்யா !'' — என்று சத்தம் கேட்டுத் திரும்பினேன். ஓலேப் பெட்டியைத் தலேகுப்புறக் கவிழ்த்துக் குடைந்து கொண்டிருந்த கப்புணிதான் ஒரு ஜாலராவை வெளியில் எடுத்தான்.

''எலேய் ! அதைத் தட்டி இப்பொழுது கலாட்டா செய்தாயானுல் முதுகுத் தோலே உரித்து உப்புத் தடவி விடுவேன் ஜாக்கிரதை!''

அவன் காதில் வாங்கிக் கொண்டால் தானே ! பேர்தாக்குறைக்குச் கண்டு வேறு வந்து சேர்ந்து கொண்டான்.

'ஜிங்ஜா', 'ஜிங்ஜா' என்று கப்புணி ஜாலரைத் தட்ட, 'ஹரிநாராயண.... ஹரிநாராயண......' என்று தன் சின்னதும் பெரிதுமான குரலில் கண்டு பஜனைப் பாடலேப் பாட, 'தபதப' என்று நான் அவர்கள் முதுகில் தபேலா தட்டியதுதான் (அழுத்தித்தான்) தாமதம் — அவர்களின் புகழ்பெற்ற 'இரு குரல் அழுகையைத் தொடங்கிவிட்டனர், என் புத்திர சிகாமணிகள் !

நாசமாய்ப் போச்சு !

அப்படியே அவர்கள் இருவர் வாயையும் ஒரே அமுக்காக அமுக்கிப் பொத்தி வாசல் வரை கொண்டு விட்டு உள்ளே வந்தேன்.

மணி நாலே முக்கால்.

''இதுக்கு 'தயர்' (டயர்) இல்லேயாப்பா ?'' — முற்றத்தில் பழைய மூன்று கால் சைக்கிள் மேல் ஆரோகணித்திருந்த என் குட்டிச்சாத்தான் ஜில்லுதான் வரவேற்ருள். அவள் அதைஓட்டமுயன்றுகொண்டிருந்தாள்.

''ம! அதை ஓட்டி இப்போ தரையெல்லாம் பெயர்த்து விடாதே ! ரிப்பேர் செய்த

பிறகு ஓட்டலாம். என் கண்ணேனுக்கில்லியோ?'' என்று சொல்லிக் கொண்டே சைக்கிளிலிருந்து அவளை இறக்க முயன்றேன்.

அவள் கால் வழுக்கி முன் சக்கரத்தில் மாட்டிக் கொண்டு அவள் தலைகுப்புற விழ சைக்கிள் அவள் மேல் சாய, ''ஙீ'' என்று உயிரே போய்விட்ட மாதிரி அழ ஆரம்பித்து விட்டது சனியன்.

மறுபடியும் மனைவி வருமுன் குழந்தையைத் தூக்கிவிட்டு, 'அப்பா, ஐயா' என்று அதன் கையைக் காலைப் பிடித்துக் கெஞ்சி, கொஞ்சி சமாதானப்படுத்தி வைக்குமுன், என் நாவு தீர்ந்து விட்டது. முனகிக் கொண்டே குச்சி மிட்டாய்க்கு ஒரு மூன்று பைசாவை வாங்கிக் கொண்ட பிறகுதான் அது போய்ச் சேர்ந்தது.

மணி ஐந்து.

'ப்ரடக்' — காலில் என்னவோ இடறிற்று. குனிந்து பார்த்தேன். ஒரு துருப் பிடித்த இருப்புக் கம்பியில் கோர்த்து வைத்திருந்த ஒரு கடிதக் கொத்து! பழைய கள்ளுக்கு ருசி அதிகம் என்பார்களே, (வசனம் சொல்லக் கேட்டதுதான்! நான் குடித்துப் பார்த்ததில்லை) அப்படித்தான் பழைய கடிதங்களைப் படிப்பதிலே ஒரு சுவாரசியம். அதுவும் திருமணமான புதிதில் என் மனைவி அசட்டுப் பிசட்டென்று எனக்கு எழுதிய பல கடிதங்கள் அதில் இருந்தன. அவற்றை வைத்துக் கொண்டே 'அவளை'ச் சீண்டலாமென்று ஒவ்வொரு கடிதமாகப் படிக்க ஆரம்பித்தேன்.

''அப்பா!'' — என்றபடியே பெரிய பெண் அம்மு வந்து நின்றாள் — காதல் கட்டத்தில் கோமாளி வந்தது போல்.

''வாடியம்மா! நீதான் பாக்கி! ஏன்? மிச்சம் மீதி இருக்கிற என் வயிற்றெரிச்சலையும் கொட்டிக் கொள்ளப் போகிறாயா?''

''போங்கப்பா! அதோ, மேலே இருக்கே அந்தப் பல்லாங்குழியை மாத்திரம் எடுத்துக் கொடுத்துடுங்கோப்பா. நான் ஓடிப் போயிடறேன்'' என்று கொஞ்சினாள் குழந்தை.

''பல்லாங்குழியும் வேண்டாம்! கில்லாங்குழியும் வேண்டாம். புஸ்தகத்தை எடுத்து வைச்சிண்டு படி..''

''ஆமாம்! அஞ்சு மணிக்குத்தான் படிப்பாளாக்கும்! போரடிக்கும்! அப்பா.. அப்பா!'' கண்ணைப் பிசைந்தது அம்மு.

''ஏய்! சும்மாப் போக மாட்டே?''

''அப்பா....! அப்பா....!'' — முணு முணு என்று மூட்டைப் பூச்சி மாதிரி பிடுங்க ஆரம்பித்துவிட்டது.

''அடி, சனியனே! இப்போ பேசாமல் போய்ச் சேருகிறாயா? இல்லே, முதுகிலே டின் கட்டட்டுமா?'' — என்றபடி பழைய கடிதங்களில் மூழ்கிவிட்டேன்.

''தட தட'' என்று சத்தம் கேட்டு நிமிர்ந்து பார்ப்பதற்குள் 'லொட, லொட' என்றுடும் ஒட்டை ஸ்டூலின் மேலிருந்து பல்லாங்குழி சகிதம் அம்மு 'தொபுகடீர்' என்று உருட்டி அடித்துக் கொண்டு விழ, பல்லாங்குழி 'ப்ளாச்' என்று திறந்து கொண்டு அதிலிருந்த புளியங் கொட்டைகள் நான்கு பக்கமும் சிதற, கூடவே, 'ஙயஙயஙய' என்று விழுந்து உருண்ட கங்கைச் செம்பு வாயைப் பிளந்து கொண்டு தண்ணீர் வழிந்தோட, 'தப்'பென்று விபூதி டப்பா என் தலையில் விழுந்து விபூதி என் தலை, வாய், தேகம் முழுதும் அப்பிக் கொள்ள.... ஒரே அமர்க்களம்தான்.

விபூதி வேஷதாரியாய், கண்கள் கரித்துச் சிவக்க என்னைப் பார்க்க வேண்டுமே —அசல் ருத்ரமூர்த்திதான்!

சத்தம் கேட்டுத் 'தடுக்'கென்று வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்த என் மனையாளைப் பார்க்க வேண்டுமே — பத்ரகாளியின் தரும தரிசனம்தான்!

ஆனால் மறு நிமிடமே 'பக பக' வென்று சிரித்து விட்டோம் எல்லாரும்.

''அழகுதான் போங்கள்!'' அவள் முகவாய்க்கட்டை 'ணங்'கென்று அவள் தோள் பட்டையில் மோதிக் கொண்டது. ''இருந்தாலும் இப்படியா? உடம்பைத் துடைச்சுக் கோங்கோ, முன்னாடி யாராலும் வரதுக்குள்ளே! சமர்த்துச் சொட்டறது!''

நான் அவள் புடவைத் தலைப்பாலேயே வேர்த்திருந்த மூஞ்சி முகரையில் 'பிசுக்'கென்று அப்பிக் கொண்டிருந்த விபூதியைத் துடைத்து விட்டுக் கொள்ளும் போதே —

''ராத்திரி முழுக்க அந்தச் சின்னச் சனியன் 'ஙொய் ஙொய்' என்று தூங்க விடாமல் பிராணனை வாங்கிற்று. இப்பொழுதும் ஒரு ரவைத் தூக்கம் தூங்க விடாமல்......!'' — அவள் முடிக்கவில்லை.

''ஆமாம்! ஆமாம்! ஒரு ரவைத் தூக்கம் என்ன? ஒரு கிலோ ரவைத் தூக்கம்தான் தூங்கினாய்!'' — நான் அவளைச் சீண்டினேன்.

மணி ஆறு! ஆமாம்! ஏன் இடீரென்று வானம் கறுத்து எண்ணெய்க் குடம்போல் ஆகிவிட்டது? 'டபர....டபர....' என்று தகரத்தில் கற்களை வீசினாற்போல் ஏதோ சத்தம் கேட்கவில்லை?

''அச்சச்சோ! மழை! எனக்கென்ன? முற்றத்தில் வச்சிருக்கிறதெல்லாம் நனையறது!'' கண்டு அபாயக் குரல் கொடுத்தாள்.

நான், என் மனைவி, குழந்தைகள் எல்லோரும் அரக்கப் பரக்க முற்றத்தில் இருந்தவற்றையெல்லாம் வாரி அரைநொடியில் ஸ்டோர் ரூமில் கன்னாபின்னா என்று கண் கண்ட இடத்தில் கை போன போக்கில் போட்டுத் திணித்தோம்.

ஸ்டோர் ரூம் பழையபடி ஸ்டோர் ரூமாகவே... அபத்தக் களஞ்சியமாகவே.... மாறி விட்டது. பித்தல் பாய், பழஞ் செருப்பு..... எல்லாம் அதனதன் ஸ்தானத்தை மீண்டும் கைப் பற்றிவிட்ட பெருமையில் என்னைப் பார்த்து ஏளனமாய்ப் புன்னகை புரிகின்றன.

இம்முறையும் எனக்கே தோல்வியா?

ஐயஹோ! ஸ்டோர் ரூமே! உனக்கு விடிவு காலமே வராதா? அந்தச் சாமான் ஒழிப்புத் திட்டம் குட்டிக்கரணம் போடாமல் நிறைவேறும் காலம்தான் எதுவோ? அடுத்துவரும் விடுமுறைகளுக்கே வெளிச்சம்!




★ தியாகத்தின் சிகரம்

★ கதையிலே தொழில் நுட்பம்

★ இனிய தமிழில் நல்லறிஞர் சாத்திரம்

★ தமிழ்த்திரையின் கவனத்துக்கு……

★ மொழிச் சூழ்ச்சி

**வெ**குநாட்களாக நம்முடன் ஒரே வீட்டில் குடியிருந்து பழகிவிட்ட ஒரு குடும்பம் — போர்ஷனைக் காலி செய்து கொண்டு புறப்பட்டுச் சென்று விட்டதைப் போன்ற உணர்வு எனக்கு ஏற்பட்டது — 'மணக்கோலம்' முடிவு பெற்றவுடன்.

இதுதானே நாவலின் சிறப்புத் தன்மை!

திருவள்ளூர் — பி. ராகவன்

'**எ**ப்போதுமே தன் சுகம்தான் பெரிது' என்று இருந்த ஜானு எந்தச் சுகத்துக்காக எல்லோரையும் எதிர்த்து நின்றாளோ, அந்தச் சுகத்தையே உதறித் தள்ள முடிவு செய்து அவளுக்கே உரிய துணிவுடன் செயலாற்றி, தியாகத்தின் சிகரமாக நம் மனங்களில் நிறைந்து நிற்கிறாள்.

நுங்கம்பாக்கம் — வஸந்த்

''**ந**டு வழியில் ஒரு ரயில்'' என்ற நெடுங்கதை அற்புதமான கதை. கலைஞனின் திறமை எல்லா நுணுக்கமான விவரங்களையும் நுட்பமாக வெளியிடுவதில் உள்ளது. இந்தக் கலைத் திறமை இந்தக் கதையின் ஒவ்வோர் இடத்திலும் ஒளிவிடுவதைக் கண்டு மகிழ்கிறேன். சமீப காலமாக வெளிவந்துள்ள கதைகளுள் இவ்வளவு தொழில் நுட்பங்களை ஒன்றுகூட விடாமல் கூறும் வேறு ஒரு கதை என் நினைவுக்கு வரவில்லை. மனித உணர்வுகளைத் திறமையுடன் கையாண்டது கதையின் சிறப்பை மேலும் அழகுபடுத்துகிறது.

ஸ்ரீ வேணுகோபாலனுக்கு என் பாராட்டுக்கள்!

சென்னை—5 — எஸ். சேதுராமகிருஷ்ணன்

**ஸ்ரீ** வேணுகோபாலன் எழுதிய ''நடுவழியில் ஒரு ரயில்'' என்ற கதை மிகவும் அருமையாக இருந்தது. ரயில் எஞ்சின் இயங்கும் விதத்தை, பண்டு அதை இயக்க பட்ட அவஸ்தையை நாம் நேரில் பார்த்ததுபோல மிகவும் அருமையாக எழுதியுள்ளார். கடைசி வரிகள் உள்ளத்தைத் தொட்டன.

பி.வி.ஆர். எழுதிய ''மணக்கோலம்'' உள்ளத்தைத் தொட்ட அருமையான தொடர் நாவல்களுள் மிகவும் சிறந்து விளங்கும் ஒன்றாகும்.

சென்னை—1 — ரங்கராஜன்

''**அ**ணுவின் இரகசியம்'' என்னும் அருமையான கட்டுரை எழுதியதன் மூலமாக ஜனார்த்தனன் விஞ்ஞான விஷயங்களை விளக்குவதற்குத் தமிழை எவ்வளவு வாகவாகப் பயன்படுத்தலாம் என்பதைத் தெளிவாக நிரூபித்துள்ளார். டாக்டர் எம். எஸ். ஸ்வாமிநாதன் அவர்கள் கதிரியக்கச் சடிதி மாற்றத்தினால் (Mutation) அதிக உணவு உற்பத்திக்காகச் செய்து வரும் சிறந்த ஆராய்ச்சிகள் நல்ல பலனை அளித்திருக்கின்றன என்பதை அறிய விவசாயிகள் பெரிதும் மகிழ்ச்சியடையக் கூடும். அவர்களுடைய முயற்சி மேன்மேலும் வெற்றி பெறுவது தமிழர் அனைவருக்குமே பெருமிதம் தரவல்லது.

ஆனந்ததாண்டவபுரம் — ஸா. குஞ்சிதபாதம்

**உ**லகத் தமிழ் மாநாடு செவ்வனே நடந்து முடிந்த இந்தத் தருணத்தில், தற்போதைய தமிழ்ப் படங்கள், வெகுவாகப் பேசப்பட்டு வரும் தமிழ்ப் பண்பாட்டினைப் பிரதிபலிக்கவில்லை என்பதை எண்ணினால் வருத்தமாக உள்ளது. மாநாட்டில் பெரிதும் பங்கு கொண்ட தமிழ் நாட்டின் முன்னணி நடிகர்கள் இருவருமாகவாவது இனியும் இந்நிலை நீடிக்காது இருக்க உறுதி கொள்ள வேண்டும். பாமர மக்களிடையே தமக்கு இருக்கும் செல்வாக்கை ஒரு பெரும் பொறுப்பாகக் கருதி நமது பண்பாட்டுக்குப் பழுதின்றி, பாரதியும் வள்ளுவரும், காந்தியும் கண்ட புது சமுதாயம் பிறக்க வகை காண வேண்டும்.

அ. கிருஷ்ணன்

சென்னை—36 — அ. சந்திரசேகரன்

அ. ராஜாராமன்

**ம**த்திய சர்க்கார் சொல்வதைப் போலவே பல்கலைக் கழகங்கள் தமது பிரதேச மொழியையே பாட மொழியாக்கிக் கொள்கிறது என்று வைத்துக் கொள்வோம். ஒவ்வொரு மாநிலத்திலும் ரீஜினல் இன்ஜினீரிங் கல்லூரிகள் உள்ளன. நமது மாநிலத்தில் திருச்சியிலும், ஆந்திரப் பிரதேசத்திலும், வாரங்கல் நகரிலும், கேரளத்தில் கள்ளிக்கோட்டையிலும் இப்படி மாநிலத்துக்கு ஒரு கல்லூரி இருக்கிறது. இந்தக் கல்லூரிகளில் 50 சதவிகிதம் பிரதேச மாணவர்களும், மீதி 50 சதவிகிதம் வேறு எல்லாப் பிரதேச மாணவர்களும் சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள். 50 சதம் ஒரு மொழி பேசுவோராகவும், மீதி 50 சதம் பிற மொழிகளைத் தாய் மொழியாகக் கொண்டவராகவும் இருப்பர். இக்கல்லூரிகள் அனைத்தும் அந்த மாநில பல்கலைக் கழகங்களுடன் இணைந்திருக்கின்றன. இப்படி இருக்கையில் ஆங்கிலத்தை எடுத்துவிட்டுப் பிரதேச மொழியைப் பாட மொழியாக ஆக்கினால் 50 சத மாணவர்களுக்கு எந்த மொழி பாட மொழியாகும்? நடுவில் இந்தியைத் திணித்து விடலாம் என்பது மத்திய சர்க்கார் எண்ணமோ?

திருச்சி—15 — முல்லை வழுதி

மண்டலப் பொறியியற் கல்லூரி

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10

Managing Editor: T. Sadasivam

# மபத்லால் க்ரூப் ஸூட்டிங்குகள்

'டெரீன்'/காட்டன், 'டெரீன்'/அக்ரிலிக், 'டெரீன்'/விஸ்கோஸ்,
''டெபிலைஸ்டு'' மற்றும் ''ம∴பினைஸ்டு'' ரகங்கள்.

**மபத்லால் க்ரூப்** நியு ஷோராக், (ஷோராக்) அஹமதாபாத் . நியு ஷோராக், நாடியாத் ஸ்டாண்டர்ட், பம்பாய் . ஸ்டாண்டர்ட், (நியு சைனா) பம்பாய் . ஸ்டாண்டர்ட், தேவாஸ் ஸாஸூன், பம்பாய் ஸாஸூன், (நியு யூனியன்) பம்பாய் . ஸூரத் காட்டன், ஸூரத் மபத்லால் பைன், நவ்ஸாரி . மிஹிர் டெக்ஸ்டைல்ஸ், அஹமதாபாத்.




M. 194 TM

REGISTERED No. M. 4309

Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 40 சதம்

தபால் செலவு தனி



# Spartan auto-lacquers...



*...ensure FIVE star features:*

- ★ Depth of shade
- ★ Ease of application
- ★ Extreme durability
- ★ Lasting shine
- ★ Uniform quality




***First to manufacture in India and still first***



**ADDISONS PAINTS & CHEMICALS LTD**

**SEMBIAM MADRAS-11**

Member: Indian Paint Association